# நான் சென்ற
# சில நாடுகள்



சி. சுப்பிரமணியம்



ஒரு விகடன் பிரசுரம்

விலை ரூ. 1-00.

# பொருளடக்கம்



# FOREWORD

I have not read Shri C. Subramaniam's original articles in Tamil. But I have read some of them in translation and enjoyed his account of his impressions in foreign countries.

Some of us who went to foreign countries at an early age and grew up there, during an impressionable part of our lives, imbibed these impressions gradually and rather unconsciously. But when an able and intelligent person goes in later life and sees foreign countries at work and play, his impressions are likely to be more vivid. My colleague, Shri Subramaniam, had this chance and this record of his impressions and reactions is, therefore, particularly interesting to me and, I imagine, others also. His language is simple and appears to be suitable both for the very young and grownups There is an intimacy about his writing which makes it resemble personal letters.

I have visited most of the countries to which he went. I saw many of them first when I was almost a boy. Going there in later years, I found great changes. And yet the early basic impressions remain to some extent.

It is important that our people should know about other countries and other peoples. We learn a little, I suppose, in schools. That is helpful, but it does not take one very far. Shri Subramaniam's account gives one a more intimate glimpse of various activities and thus enables us to know more about the people of the countries he visited than formal books. I hope, therefore, that many people will read this interesting travelogue.

NEW DELHI,
18-12-1961.

# முகவுரை

என்னுடைய நண்பர் திரு சுப்பிரமணியம் வெளி நாடுகளில் தான் கண்டவற்றைப் பற்றி எழுதியிருக்கிருர். அவர் தமிழில் எழுதியுள்ள கட்டுரைகளை நான் படிக்க முடியாதல்லவா ! அவற்றில் சிலவற்றை ஆங்கில மொழி பெயர்ப்பில் படித்து இன்புற்றேன்.

எங்களில் சிலர், சிறு பருவத்திலேயே வெளி நாடுகளுக்குச் சென்று அங்கேயே வளர்ந்து வந்தோம். எதுவும் எளிதில் பதிந்து விடுகிற அந்தப் பருவத்தில் நாங்கள் கண்டதெல்லாம் எங்களை அறியாமலேயே சிறிது சிறிதாக எங்கள் மனத்தில் ஊறி விட்டது. ஆனல், அறிவும் ஆற்றலும் பொருந்திய ஒருவர், பின்னுளில் வெளி நாடுகளுக்குச் சென்று அங்கு மக்கள் வாழ்வதைக் கவனிக்கும் போது அவருடைய மனத்திலே தோன்றுபவை இன்னும் தெளிவாயிருக்கக் கூடும். திரு சுப்பிரமணியம் இந்த முறையில் வெளி நாடுகளைக் கவனித்திருக்கிருர். ஆகவே, அவருடைய சிந்தனைகளையும் எண்ணங்களையும் அறிந்து கொள்வதிலே எனக்கு ஒரு தனி ஆர்வம். பிறருக்கும் இந்த ஆர்வம் இருக்கும் என்றே நம்புகிறேன். அவருடைய நடை எளிமையானது; சிறியவர்களுக்கும் பெரியவர்களுக்கும் ஒருங்கே பொருத்தமானது. நமக்கெனவே

சொந்த முறையில் எழுதப்பட்ட கடிதங்களைப் போல் அவருடைய கட்டுரைகள் நம்முடன் நெருங்கி உரையாடுகின்றன.

அவர் சென்றுள்ள நாடுகளுக்கு நானும் சென்றிருக்கிறேன். அவற்றில் பலவற்றை நான் சிறுவனாயிருக்கும்போது பார்த்திருக்கிறேன். வய தான பிறகு நான் மீண்டும் சென்ற காலத்தில் அங்கே பெரிய மாறுதலைக் கண்டேன். ஆயினும், சிறு பிராயத்து நினைவுகள் ஓரளவு இன்றும் மாறாமலேயே இருக்கின்றன.

பிற நாடுகளைப் பற்றியும், அந் நாடுகளில் வாழும் மக்களைப் பற்றியும் நம் நாட்டு மக்கள் அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். பள்ளிகளில் பயிலும் போது இவை பற்றி நாம் சிறி தளவுதான் அறிந்து கொள்கிறோம். ஆனால், அது போதாது. புத்தகங்களிலிருந்து அறிந்து கொள்வதை விட, இன்னும் நெருக்கமாக, தான் கண்ட நாடுகளிலுள்ள மக்களின் வாழ்க் கையை திரு சுப்பிரமணியம் நமக்குப் படம் பிடித் துக் காட்டுகிறார். ஆகவே, இந்த சுவைமிக்க பிரயா ணக் கட்டுரைத் தொகுப்பை அனைவரும் விரும்பிப் படிப்பார்கள் என நம்புகிறேன்.

ஜவஹர்லால் நேரு

புது டில்லி,
18-12-1961.

# முன்னுரை

எனது ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்தை முடித்து ஊர் திரும்பியதும், திரு வாசன் அவர்கள் என்னைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார். ‘உங்களுடைய பிரயாண அனுபவங்களைப் பற்றிச் சில கட்டுரைகள் ஆனந்த விகடனுக்கு எழுதிக் கொடுக்க வேண்டும்’ என்று கேட்டார் அவர். என்னுடைய பிரயாணத்தைப் பற்றி நான் எந்த விதக் குறிப்பும் எடுத்து வைத்திருக்கவில்லை. அத்துடன், கட்டுரைகள் எழுதுகின்ற பழக்கமும் எனக்கு அதிகமாகக் கிடையாது. அதற்கெல்லாம் அவகாசம் கிடைக்குமா என்பதும் சந்தேகம் தான். இதையெல்லாம் திரு வாசன் அவர்களிடம் எடுத்துச்சொன்னேன். ஆனாலும் அவர் ‘முயன்று பாருங்கள், மூன்று நான்கு கட்டுரைகளாவது கிடைக்குமானால், நான் மகிழ்ச்சி அடைவேன்’ என்று கூறினார். திரு வாசன் அவர்களின் தூண்டுதல்தான், இந்தக் கட்டுரைகளுக்கு ஆதாரம்.

எழுத ஆரம்பித்தேன் : மூன்று நான்கு கட்டுரைகளோடு நின்றுவிடவில்லை. இருபத்தாறு கட்டுரைகளுடன், இன்னொரு உலகச் சுற்றுப் பிரயாணம் ஆரம்பிக்கும்போது அந்தத் தொடர் முடிவுற்றது. பலர் இந்தக் கட்டுரைகளைப் பாராட்டி எனக்கு எழுதியிருந்தார்கள். விகடனுக்கு நூற்றுக்கணக்கான பாராட்டுக் கடிதங்கள் வந்திருப்பதாகவும் எனக்குச் சொன்னார்கள். உலகச் சுற்றுப் பிரயாணம் சென்றிருந்தபோது, வெளி நாடுகளில் வசித்து வரும் பல தமிழ் அன்பர்கள் ஆனந்த விகடனில் வெளியாகும் எனது பிரயாணக் கட்டுரைகளைப் பற்றிச் சிறப்பாகப் பேசி, இதை ஒரு நூல் வடிவமாகக் கொண்டுவர வேண்டும் என்றும் வலியுறுத்தினார்கள். திரு வாசன் அவர்களே, இதை ஒரு நூலாக வெளியிட ஒப்புக் கொண்டார்கள். ஆனந்த விகடனின் பிரசுரமாக இது வெளிவருகிறது.

தக்க ஒருவரிடமிருந்து முகவுரை வாங்க வேண்டும் என்று குறிப்பிட்டு, ‘நமது பிரதம மந்திரியிடமிருந்து அதைப் பெற முடியுமானால் சிறப்பாக இருக்கும்’ என்று கூறினார் திரு வாசன்.

பிரிட்டிஷ் செய்தி ஸ்தாபனத்தார் என்னுடைய இங்கிலாந்து கட்டுரைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அவர்கள் நாட்டுக்கு அனுப்பியிருந்தார்கள். அந்த மொழி பெயர்ப்பு எனக்குப் பயன்பட்டது. சமீபத்தில் நான் டெல்லிக்குச் சென்றிருந்த போது, அந்த மொழி பெயர்ப்பை பிரதம மந்திரி அவர்களிடம் கொடுத்து, 'இக் கட்டுரைகளை ஒரு நூலாக வெளியிட முன்வந்துள்ளோம், அதற்கு தாங்கள் ஒரு முகவுரை கொடுக்க முடியுமானால் மிக மகிழ்ச்சி அடைவோம்' என்று சொன்னேன். அப்போதுதான் கோவா நடவடிக்கை நடந்து கொண்டிருந்தது. இவ்வளவு சிக்கலான சூழ்நிலையில் இந்த வேலையை அவருக்குக் கொடுக்கலாமா என்பதுபற்றி எனக்குக் கொஞ்சம் தயக்கம்கூட இருந்தது. ஆனால் பிரதமர் 'எவ்வளவு நாளில் இது வேண்டும்' என்று கேட்டார். 'ஒரு வாரத்திற்குள் கிடைத்தால் பரவாயில்லை' என்று சொன்னேன். 'முயலுகிறேன்' என்று சொன்னார். ஆனால் அன்றிரவே அவருடைய முகவுரை என் கைக்கு வந்து, என்னைத் திகைப்பில் ஆழ்த்தியது! அதுமட்டுமல்ல, அநேகமாக எல்லாக் கட்டுரைகளையும் படித்துப் பார்த்ததாகவும், அதில் ஒரு பிழை ஏற்பட்டிருப்பதாகவும் கடிதத்தில் எடுத்துக் காட்டி இருந்தார். கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையின் டிரினிடி கல்லூரியில் அவர் கல்வி பயின்றதை நான் தவறாக கிங்ஸ் கல்லூரி என்று கட்டுரையில் எழுதியிருப்பதாக எடுத்துக் காட்டியிருந்தார். இவ்வளவு அலுவல்களுக்கு இடையேயும் அன்புடன் இந் நூலுக்கு முகவுரை எழுதித் தந்த அவருக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

இக் கட்டுரைகளை தமிழ் மக்களுக்கு நூல் வடிவமாக சமர்ப்பிக்க முன்வந்துள்ளேன். கட்டுரைகளைப் படித்து, அவற்றில் ஏதாவது சில நல்ல கருத்துக்கள் இருந்தால், தமிழ் மக்கள் கட்டாயம் அவற்றை ஏற்பார்கள் என்கின்ற நம்பிக்கையுடன் தமிழன்னையின் காலடியில் இதை வைக்கின்றேன்.

சென்னை,
20-12-1961.

[signature]

# பதிப்புரை

**கா**ஷ்மீரில் இடி இடித்தால் வாஷிங்டனில் மின்னல் மின்னுகிறது; கோவாவில் ஒரு வெடி வெடித்தால் ஸ்டீவன்சன் கோபப்படுகிறார். இன்று அந்த அளவுக்கு உலக நாடுகள் நெருங்கி விட்டன. ஒவ்வொரு நாட்டின் நன்மை தீமை களிலும் உலகத்திலுள்ள எல்லா நாட்டு மக்களுக்கும் பங்கிருக்கிறது. ஆகவே, இன்றைய மக்க ளுக்கு உலக அறிவும், மற்ற நாட்டு மக்களைப் புரிந்துகொள்ளும் தன்மையும்தான் முதல் தேவை களாகி விட்டன. இதற்கு ஒரு தக்க துணையாக அமைந்துள்ளது திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் எழுதியுள்ள இக் கட்டுரைத் தொடர்.

பிரயாணக் கட்டுரைகள் பத்திரிகையில் நிரம்ப வரவேண்டும் என்பதில் விகடன் எப்போதும் ஒரு கண்ணாக இருந்து வந்திருக்கிறான்.

இருபத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஓர் நாள் ''இரண்டு கைகளும் வீங்கிவிட்டால் எப்படி எழுதுவீர்கள்'' என்று கல்கியைக் கேட்டார் ஒருவர். ''வாயால் சொல்லுகிறேன், பிறர் எழுதிக் கொள்ளட்டும்!'' என்று பதில் சொன்னார் கல்கி.

மலேரியா ஊசி, காலரா ஊசி, டைபாய்டு ஊசி என்று இரண்டு கைகளிலும் ஊசியும் அம்மையும் குத்திக்கொண்டு, பர்மிட் வாங்கிப் பயணம் புறப்பட அன்று கல்கியும், மாலியும் பட்ட பாட்டை எண்ணினால் இன்றும் கூட எனக்கு வியப்பாக இருக்கிறது. அக்காலத்தில் இன்று இருப்பதுபோல் நினைத்தவுடன் போய் வரக்கூடிய டகோடா, வைக்கவுண்ட், ஸ்கைமாஸ்டர் முதலிய விமானங்கள் கிடையாது. அதோடு நம்மவர்களுக்கு விமானம் ஏறிப் பழக்கமும் கிடையாது. அந்நிலையில் அமரர் கல்கியும், மாலியும் ''இலங்கை யாத்திரை'' என்னும் தலைப்பில் பிரயாணக் கட்டுரை எழுதுவதற்காகவே, 1938ம் வருடத்தில் பல இன்னல்களைப் பொறுத்துக்கொண்டு சின்னஞ் சிறு காற்றாடி விமானத்தில் ஏறி இலங்கைக்குப் போய் வந்து விகடனில் எழுதினார்கள். ஆண்டு தோறும் நடைபெறும் காங்கிரஸ் மகா சபை விழாக்களுக்கு அடிக்கடி சென்று வந்து கட்டுரை எழுதுவார்கள். 'ஐந்து நாடுகளில் அறுபது நாள்' என்னும் தலைப்பில் திரு தேவன் எழுதிய

கட்டுரைத் தொகுப்புக்களை மக்கள் மறந்திருக்க மாட்டார்கள். இவ்வாறு பிரயாணக் கட்டுரைகளைப் படிப்பதில் வாசகர்களுக்கு உள்ள ஆவலை அறிந்த விகடன், திரு சி. சுப்பிரமணியம் அவர்களையும் விட்டு வைக்கவில்லை.

அவர்களிடம் சென்று 'தாங்கள் விகடனுக்கு கட்டுரைகள் எழுத வேண்டும்' என்று கேட்டுக் கொண்டபோதே, 'அவர்களுக்கு இருக்கும் நாட்டுப் பொறுப்புக்களுக்கிடையில் இதற்கு நேரம் கிடைக்காதே' என்ற கவலையும் எனக்கு உண்டு. ஆயினும் விகடனிடம் அவர்களுக்கு உள்ள அன்பால் இதற்கு இசைந்தார்கள். கேட்டதற்கு மேல் ஆறு பங்கு எழுதிக் கொடுத்தார்கள். இதற்கு

திரு சி. சுப்பிரமணியம் அவர்கள், அரசியல் என்னும் நீண்ட பாதையில் நெடுந்தூரம் பிரயாணம் செய்பவர்கள். அதிலே அழகிய சோலைகளும் உண்டு, பாலை வனங்களும் உண்டு. வரவேற்புகளும் உண்டு, வசைகளும் உண்டு. ஆதரவு என்னும் நிழலும் உண்டு, கண்டனம் என்னும் வெயிலுமுண்டு. இவற்றுக்கிடையே அறிவு என்னும் கைவிளக்கை ஏந்தி, இலட்சியத்தை நோக்கிச் செல்லும் கடமை வீரர் அவர். அந்தக் கடமையில் விருப்பு வெறுப்பு ஏதுமின்றி எழுதப்பட்ட கட்டுரைகள்தான் இவை. திரு சி.சுப்பிரமணியம் ஒரு அரசியல் மேதை மாத்திரமல்ல, ஒரு தலை சிறந்த எழுத்தாளரும் கூட என்பதை இக் கட்டுரைகள் நிரூபிக்கின்றன.

பொன் மலரில் மணமும் கூடியதுபோல், இதற்கு பாரதப் பிரதமர் நேருஜியின் முகவுரையும் அமைந்திருக்கிறது. ஆனந்த விகடனின் முதல் புத்தகம் முதல்வரின் முகவுரையுடன் ஆரம்பமாகிறது.

"விகடன் புத்தக வெளியீடு இன்னும் ஆரம்பிக்க வில்லையே" என்ற குறை நம் வாசகர்களுக்கு இருந்து வந்திருக்கிறது. அந்தக் குறை தீரும் காலம் சீக்கிரமே வந்து விடும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொண்டு, இந்தப் புத்தகத்தை நேயர்களின் கரங்களில் சமர்ப்பிக்கிறேன்.

சென்னை,
30-12-1961.




நான் கல்லூரியில் படித்த காலத்தில், மேல் படிப்புக்காக வெளி நாடு செல்வதுதான் மாணவர்களின் பெருங் கனவாக இருந்தது. நானும் அதற்கு விலக்கில்லை. 1929-30ல் சென்னை மாநிலக் கல்லூரியில் பி.ஏ. இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்தபோது, அடுத்த ஆண்டு மேல் படிப்புக்காக இங்கிலாந்து செல்வது எனத் திட்டமிட்டிருந்தேன். அநேகமாக ஏற்பாடுகள் அனைத்தும் முடிவடைந்து விட்டன. அப்போதுதான் மகாத்மா காந்தி உப்பு சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். என் மனம் மாறியது. வெளிநாடு செல்லும் எண்ணத்தை நான் கைவிட்டேன்.

முப்பது வருஷங்களுக்கு முன்பு போட்ட திட்டம், இப்போதுதான் நிறைவேறியது. ஆனால் என்ன மாறிய சூழ்நிலையில்? அன்று சென்றிருந்தால், ஒரு அடிமை நாட்டு மகனாகச் சென்றிருப்பேன். இன்று, ஒரு சுதந்திர நாட்டுப் பிரஜையாக மட்டுமல்லாது, இந் நாட்டு மக்களின் பிரதிநிதி என்ற முறையிலும் செல்லக் கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அத்துடன், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் விருந்தினனாகவும் என்னை அழைத்திருந்தார்கள். இதற்கு முன்பும் பிரிட்டிஷ் அரசாங்கத்து விருந்தினனாக நம்முடைய நாட்டிலேயே நான் நான்கு முறை இருந்திருக்கிறேன்; சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக சிறைப்பட்ட வகையில். அன்றும் போலீஸ் பாதுகாப்பு, மரியாதை எல்லாம் இருந்தன. இன்றும் அதே போன்ற மரியாதைகள்; ஆனால் வேறு விதத்தில். காலத்தின் மாறுதலைப்பற்றி என்ன சொல்வது?

இங்கிலாந்தைப்பற்றிக் கேட்டும், படித்தும், விரிவாக அந்நாட்டைப்பற்றித் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு, இந்திய மாணவர்களுக்கு முன்பு அதிகமாக இருந்தது. நம் நாட்டு சரித்திரத்தை விட, இங்கிலாந்து சரித்திரம் அதிகமாகத் தெரியும். நம் நாட்டு பூகோளத்தை விட, பாடத்தில் இங்கிலாந்து பூகோளம் முக்கியமானது. ஆங்கில இலக்கியம் படிப்பதுதான் கல்வியின் சிகரம் என்று நினைக்கப்பட்ட காலம் அது. அதன் காரணமாக, இங்கிலாந்துக்கு நேரில் சென்று பார்க்காதிருந்தால் கூட, அந்நாட்டைப் பற்றிய பல விஷயங்களை அறிவு ரீதியில் நான் அறிந்திருந்தேன். ஆகவே, 1960-ம் வருஷம்



செப்டம்பர் மாதம் ஒன்பதாம் தேதி லண்டன் நகரை அடைந்த போது, நான் ஒரு அயல் நாட்டில் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. பார்க்கும் காட்சிகள் எல்லாம் பழையன போலத் தோன்றின. மக்களும் அந்நியர்களாகத் தோன்ற வில்லை. இதற்கு இன்னொரு முக்கிய காரணம் மொழி! அங்கு எல்லோரும் ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக் கொண்டவர் கள். எனவே, யாருடனும் சுலபமாகப் பேசிப் பழக முடிந்தது. இங்கிலாந்தில் சென்ற இடமெல்லாம் இதே நிலைதான்!

ஆனால் இங்கு, நாம் இந்தியாவின் மற்றப் பகுதிகளுக்குச் சென்றால், அப்பகுதி மொழி தெரியாத காரணத்தால், பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. எல்லா மக்களுடனும் சகஜ மாகப் பேசிப் பழகுவதற்கு இடமில்லாமல் போய்விடுகிறது. இது எனக்கு ஒரு பெரிய படிப்பினையாக இருந்தது. நம் நாட்டு மக்கள் அனைவரும் ஒன்று என்ற உணர்ச்சி வளருவதற்கு, ஒரு பொதுமொழி எவ்வளவு அவசியம் என்பது அப்போது எனக்கு மிக நன்றாக விளங்கியது.

இப் பொதுமொழிப் பிரச்னை இன்னொரு விதத்திலும் என் கவனத்தைக் கவர்ந்தது. நம் நாட்டு மக்களை இங்கி லாந்தில் சந்திக்கும்போது, தமிழர்களாக இருந்தால்தான், நம் மொழியில் பேச முடிந்தது. வேறு பகுதியிலிருந்து வந்த இந்தி யர்களுடன் ஆங்கிலத்தில்தான் பேச வேண்டி இருந்தது. அச் சமயங்களிலெல்லாம், உடன் இருந்த பிரிட்டிஷ் நண்பர்கள் ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தார்கள். ஒருசிலர் நேராகவே ''ஏன் நீங்கள் உங்கள் மொழியில் பேசிக் கொள்ள வில்லை?'' என்றும் கேட்டார்கள். இது என் சுயமரியாதைக்கே ஒரு சூடு போட்டதுபோல் இருந்தது. இவ்வாறு அந்நிய நாட்டுக்குப் போகும்போது, நம்முடைய நாட்டு மொழிப் பிரச்னைக்கு நாம் ஒரு தெளிவு காண்கிறோம்.

நான் இங்கிலாந்து சேர்ந்த மறுநாள், செப்டம்பர் மாதம் பத்தாம் தேதியன்று, பார்ன்பரோ (Farnborough) என்ற இடத்தில் ஒரு மாபெரும் விமானக் காட்சி நடைபெற்றது. அதற்கு என்னையும் என்னுடன் வந்திருந்த இரு நண்பர் களையும் அழைத்திருந்தார்கள். அந்தக் காட்சியில் வெவ் வேறு ரக விமானங்களைக் காண முடிந்தது. சின்னஞ் சிறு போர் விமானம் முதற்கொண்டு, பிரமாண்டமான பறக்கும் கோட்டைகள் வரை பலவற்றை அங்கு பறக்க விட்டுக் காண்பித்தார்கள். அணிவகுப்பில் விமானங்கள் பறந்து வரு வது, அதிசயிக்கத்தக்க ஒரு காட்சியாக இருந்தது. பல விமா னங்கள் ஒன்றாக மேலெழும்பிச் செல்வது, பயங்கரக் காட்சி தான்! யுத்த காலத்தில் நூற்றுக் கணக்கில் இவ் விமானங்கள் பறந்து சென்று, குண்டுகளை வீசியபோது எவ்வாறு இருந்திருக் கும் என்று ஊகிப்பது கூடக் கடினமாக இருந்தது. அத்துடன் அவ் விமானங்களைக் கொண்டு, சர்க்கஸ் போன்ற பல வித்தை களையும் செய்து காண்பித்தார்கள். இவற்றைத் தவிர அன்று



ஒருவிநோதமான விமானத்தைப் பரீட்சார்த்தமாகப் பறக்க விட்டுக் காட்டினுர்கள். சாதாரணமாக விமானங்கள் எல்லாம் சற்று தூரம் தரையில் ஓடித்தான் மேலெழும்பிப் பறக்கும். ஆனுல் அந்த விமானமோ, இருந்த இடத்திலிருந்தே, செங் குத்தாக மேலெழும்பிப் பறந்தது. இது மாதிரி ரக விமானங் கள் இன்னும் சாதாரணமாக உபயோகிக்கும் அளவுக்கு அபி விருத்தி அடையவில்லை என்பதையும் தெரிவித்தார்கள்.

இந்த விமானக் கண்காட்சிக்கு லட்சக்கணக்கான மக்கள் வந்திருந்தார்கள். ஏற்பாடுகள் எல்லாம் சிறப்பான முறை யில் செய்யப்பட்டிருந்தன. அவ்வளவு மக்கள் கூடி யிருந்தும், எந்த இடத்திலும் குப்பை கூளங்களைக் காணமுடியவில்லை. ஒரு துண்டுக் காகிதத்தை வெளியே எறிவதானுல் கூட, அதற் கென்று ஏற்பட்டிருக்கும் தொட்டிகளில் கொண்டுபோய் போட்டுவிட்டு வருவதைக் கண்டேன். மக்கள் நடமாட்டத்தி லும் கட்டுப்பாடும் ஒழுங்கும் இருப்பதைக் கண்டேன்.

அங்கெல்லாம் சனிக்கிழமையும்,ஞாயிற்றுக்கிழமையும்விடு முறைநாட்கள். வசதியுள்ளவர்கள் எல்லாம், விடுமுறை நாட் களில் லண்டன் நகரிலிருந்து வெளியே புறப்பட்டு விடுகிறுர் கள். கடற்கரை ஓரங்களிலுள்ள ஓய்வுநாள் நலவிடுதிகளுக்கோ (Holiday Resors) அல்லது நாட்டுப்புறப் பகுதிகளிலுள்ள உல்லாசப் பொழுது போக்கு இடங்களுக்கோ (Picnic Spots) ஆயிரக் கணக்கான கார்கள் போவதைப் பார்க்கலாம்.

அந்த ஞாயிற்றுக்கிழமை பிரைட்டன் என்ற தென் கடற் கரை நகரத்திற்குச் சென்றிருந்தோம். பல்லாயிரக் கணக் கான மக்கள் அங்கு கூடி இருந்தார்கள். அன்று நன்றுக வெயில் அடித்துக் கொண்டிருந்தது. இங்கிலாந்து மக்களுக்கு வெயில் அடித்தால்தான் சந்தோஷம்! அந்த ஞாயிற்றுக் கிழமைதான் அந்த வருஷத்திலேயே மப்பு மந்தாரமில்லாமல் நன்றுக வெயில் அடித்த நாள் என்று அங்கு எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள். கடற்கரையில் பல்வேறு கேளிக் கைகளிலும், விளையாட்டுக்களிலும் உல்லாசமாகப் பொழு தைக் கழிக்கிறுர்கள். ஆனுல் அங்கும் குப்பை கூளங்களைக் காண முடியவில்லை. கேளிக்கை என்றுலும் சுத்தம், ஒழுங்கு இவற்றில் தவறுவதில்லை அந்த நாட்டு மக்கள். இது நாம் கண் டிப்பாகக் கற்க வேண்டிய ஒரு படிப்பினை.

பிரைட்டன் நகரிலிருந்து லண்டன் நகரம் திரும்பிய போதுதான், இங்கிலாந்தில் கார் நெருக்கடி எந்த அளவுக்கு இருக்கிறது என்பதை என்னுல் உணர முடிந்தது. சென்னை நகரில், காலை பத்து மணிக்கு மவுண்ட் ரோட்டில் செல்லும் கார்களைக் கண்டு நாம் திகைத்துப் போகிறேம். ஆனுல் அங்கு முக்கிய சாலைகளல்லாத சாதாரண சாலைகளில் கூட இதை விடப் பல மடங்கு கார்கள் செல்லுகின்றன. இவ்வளவு கார்கள் ஓடி நெருக்கடி ஏற்பட்டபோதும், 'ஹார்ன்' அடிக் கும் பழக்கமே அங்கு எவருக்கும் கிடையாது! ரோடுசந்திகளில்





அநேகமாகப் போலீஸ்காரர்களே கிடையாது. தாஞக இயங்கும் போக்குவரத்துவழிகாட்டிகள் (Automatic Traffic Signals) தான் பொருத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வொருவரும் தங்கள் முறை வரும் வரை, பொறுமையாகக் காத்திருக்கிறுர்கள். போக்கு வரத்து விதிகளேயும், கட்டுப்பாடுகளேயும் தவருது அனுசரிக்கிறுர்கள். ஆகவேதான், நெருக்கடி இருப்பினும் துரிதமாகப் பிரயாணம் செய்ய வழி ஏற்படுகிறது.

என்னுடன் வந்த நண்பர்கள், 'நம் ஊரிலும் இவ்வாறு ''ஹார்ன்'' இல்லாமல் இருக்க ஏற்பாடு செய்தால் நன்ருயிருக்குமே' என்று சொன்ஞர்கள். 'நம் சாலேகளில் உல்லாசமாகப் பவனி வரும் ஆடு மாடுகளுக்கு என்ன செய்வது?' என்றுதான் நான் அவர்களேக் கேட்டேன்.

*அங்கெல்லாம் சாலேகளில் கால் நடைகளேயோ, குதிரை, மாட்டு வண்டிகளேயோ காணவே முடியாது. சற்று மெதுவாகப் போகும் வண்டிகள், லாரிகள் தான்! ஆதலால், நம் சாலேகளில் ஏற்படும் தடைகள் அங்கு கிடையாது. மக்களும் குறிப்பிட்ட இடங்களில்தான், ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்குச் சாலேயைக் கடக்கிறுர்கள். இவ்வளவு வசதிகளும், கட்டுப்பாடுகளும் இருந்த போதிலும், பல சமயங்களில் அங்கு கார் நெருக்கடி ஏற்பட்டு, பத்துப் பதினேந்து நிமிஷங்கள் தாமதிக்க நேர்ந்து விடுகிறது. அம்மாதிரி சந்தர்ப்பங்களில் நம் ஊர்களில் ஒவ்வொருவரும் 'ஹார்ன்' அடித்து, பெரிய இரைச்சலே ஏற்படுத்தி விடுவார்கள். ஆனுல் எந்தச் சூழ்நிலேயிலும் அங்கு 'ஹார்ன்' ஒலியையே கேட்க முடியாது.*

*நம் நாடு திரும்பியதும், காரில் செல்லும்போது ஹார்ன் ஒலி கேட்டபோதெல்லாம் நான் சற்றுத் திடுக்கிட்டேன். மீண்டும் நம் நாட்டுச் சூழ் நிலேக்கு என்னேப் பழக்கப் படுத்திக் கொள்வதற்கு சில நாட்கள் ஆயின!*

**பிரமுகர்கள் சந்திப்பு**

*எம்.எல்.ஏ. திரு சி.ஆர். ராமசாமி அவர்களும், போடிநாயக்கனூரர் எம்.எல்.ஏ. திரு ஏ. எஸ். சுப்பராஜு அவர்களும் இந்தச் சுற்றுப் பிரயாணத்தில் என்னுடன் வந்திருந்தார்கள். எங்கள் பிரயாணத் திட்டங்களேயெல்லாம், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் காமன்வெல்த் உறவுத் துறையினர் ஏற்பாடு செய்திருந்தார்கள். நாங்கள் தங்கியிருக்க, கென்சிங்டன் மாளிகை ஓட்டலில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இது கென்சிங்டன் பூங்காவிற்கு எதிரில் அமைந்திருக்கிறது.*



லண்டன் மாநகரத்து மேற்குப் பகுதி, பூங்காக்களுக்குப் பெயர் போனது. ஹைட் பார்க், செயிண்ட் ஜேம்ஸ் பார்க் போன்ற பல பூங்காக்கள், லண்டன் நகரின் சுவாசப் பைகளாக விளங்குகின்றன. இந்தப் பூங்காக்கள் மிக அழகாக அமைக்கப்பட்டு, லண்டன் நகர மக்களின் ஆரோக்கியத்திற்கும், உல்லாசப் பொழுதுபோக்கிற்கும் பெரிதும் உதவுகின்றன. நான் லண்டனிலிருந்த ஒவ்வொரு நாளும், அதிகாலேயில் எழுந்து

## டிரபால்கர்

லண்டன் நகரில் பிரசித்தி பெற்றது 'டிரபால்கர்' சதுக்கம். அதன் மையத்தில், இங்கிலாந்து தேசத்தின் புகழ்பெற்ற கடற்படை வீரன் நெல்சனின் நினைவு ஸ்தூபி கம்பீரமாகக் காட்சி அளிக்கிறது.



● நெ. 10, டவுனிங் தெரு, இங்கிலாந்து' என்றாலே அது இங்கிலாந்து நாட்டுப் பிரதமரின் இல்லம் என்று எல்லாருக்கும் தெரியும்.

● இங்கிலாந்து நாட்டு விமான நிலையத்தில் இறங்கியவுடன் எடுத்த படம்.



கென்சிங்டன் பூங்காவைச் சுற்றிவருவது வழக்கம். அந்த நேரத்தில் ஜன நடமாட்டம் அதிகம் கிடையாதாகையால் சாந்தி மிக்க அந்தச் சூழ்நிலை என்னை வெகுவாகக் கவர்ந்தது.

ஐரோப்பிய நாட்டு ஓட்டல்களில், அநேகமாகத் தங்குவதற்கான வாடகை மட்டும்தான் நிர்ணயிக்கப்படுகிறது. இஷ்டப்பட்டால் அங்கேயே சாப்பிடலாம். ஆனால் அதற்குத் தனியாகத் தொகை செலுத்த வேண்டும். உயர்தர ஓட்டல்களில் குழாய்களில் வெந்நீர் வழங்கப்படுகிறது. குளிர்ப் பிரதேசங்களில் இது மிகவும் அவசியம். இந்தியாவிலிருந்து செல்கிறவர்கள், தினமும் குளிக்க விரும்புவார்கள். அதற்கான சௌகரியங்கள் அமைந்திருக்கின்றன. ஆனால் சாதாரணமாக அங்கிருக்கும் மக்கள் தினமும் குளிப்பதென்பது அரிது. தினமும் குளித்தால் ஜலதோஷம் பிடித்துக் கொள்ளும் என்ற தவறான எண்ணம் இன்னமும் அங்கு பரவி இருக்கிறது. 'நான் தினமும் குளிக்கிறேன், என் உடல் பாதிக்கப் படவில்லை' என்று சொன்னால், அதைக் கேட்டு ஆச்சரியப்பட்டார்கள்.

இம்மாதிரி உயர்ந்த ஓட்டல்களில் சாதாரணமாக யாரும் தண்ணீர் குடிப்பது கிடையாது. மதுபானம், பழரசம், அல்லது தாதுப் பொருள் பானம் (Mineral water) தான் வாங்கிச் சாப்பிடுவார்கள். நம் ஊர் வழக்கப்படி நாங்கள் படுக்கப் போகுமுன் தண்ணீர் கொண்டு வந்து வைக்கும்படி போன் மூலம் சொன்னோம். 'குழாயில் நிறையத் தண்ணீர் இருக்கின்றதே' என்றுதான் பதில் வந்தது. 'குடிப்பதற்கு' என்று நாங்கள் மீண்டும் சொன்ன பிறகுதான், 'ஓ, மினரல் வாட்டரைச் சொல்லுகிறீர்களா?' என்று கேட்டார்கள். 'ஆம்' என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டோம்.

அங்கு வழங்கப்படும் உணவு நல்ல சத்துள்ளவைதான். ஆனால் அதைச் சாப்பிடும் பழக்கமில்லாதவர்களுக்கு, அதுவும் இந்தியாவிலிருந்து போகிறவர்களுக்கு, உப்பு, காரம் இல்லாமல் சப்பென்று இருப்பதாகத்தான் தோன்றும். பழக்கப்பட்டு விட்டால் அதிலும் ஒரு தனி ருசி இருப்பது தெரியும். ஆனால் இவற்றிற்கெல்லாம் விலை எவ்வளவு ஆகிறது என்று மட்டும் கேட்டுவிடக் கூடாது. ஒரு நல்ல சாப்பாட்டிற்கு ஒரு பவுன் முதல், ஒன்றரைப் பவுன் வரை. அதாவது சுமார் பதினைந்து ரூபாயிலிருந்து இருபது ரூபாய் வரை ஆகும். மதுபானமும் சேர்ந்தால், அதற்குக் கணக்கே யில்லை!

லண்டன் நகரில், ராமகிருஷ்ண வேதாந்த நிலையம் என்று ராமகிருஷ்ண மடத்தாரால் நடத்தப்படும் ஒரு மத ஸ்தாபனம் இயங்கி வருகிறது. அதற்கு இப்போது தலைவராக இருப்பவர், ஸ்ரீமத் கனநந்தா அவர்கள். அவர்களை எனக்குப் பள்ளிப் பருவத்திலிருந்தே நன்கு தெரியும். நான் இங்கிலாந்து வருகிறேன் என்று தெரிந்ததும், அவர் என்னை மடத்திற்கு வரும்படி அழைத்திருந்தார் லண்டன் சேர்ந்த மறு நாளே அங்கு சென்று, அவருடன் உணவருந்தி வந்தேன். பல ஆங்கிலே



யர்கள் ராமகிருஷ்ண இயக்கத்தில் அக்கறை எடுத்துக் கொண்டிருப்பது எனக்குப் பெரு மகிழ்ச்சியைக் கொடுத்தது. மகிழ்ச்சியுடன் ஓரளவு பெருமையும் கொண்டேன்.

கிறிஸ்தவப் பாதிரிமார்கள் நம் நாட்டில் வந்து கிறிஸ்தவ மதத்தைப் பரப்புவதற்குப் பெருமுயற்சி செய்து வந்திருக்கிறார்கள். வெளிநாடுகளில் இந்து மதக் கோட்பாடுகளை மக்களுக்கு அறிவிக்கின்ற முறையில், ராமகிருஷ்ண மடத்தார்தான் சமீப காலத்திலே முன் வந்திருக்கிறார்கள். அமெரிக்காவிலும் ராமகிருஷ்ண மடங்கள் அமைந்திருப்பதை நாம் அறிவோம்.

ராமகிருஷ்ண வேதாந்த நிலையத்தார், கிங்ஸ்வே ஹாலில் எனக்காக ஒரு கூட்டமும் ஏற்பாடு செய்திருந்தார்கள். கல்வித் துறையில் சமயம் (மதம்) பெறும் இடம் (The Place of Religion in Education) என்ற தலைப்பின் கீழ் பேசும்படி பணித்திருந்தார்கள். அங்கெல்லாம் கூட்டம் என்றால் நம் நாட்டைப் போல மக்கள் வருவதென்பது வழக்கமில்லை. சாதாரணமாக, நூறு அல்லது இருநூறு பேர்தான் வருவார்கள்.

இங்கிலாந்தில் செப்டம்பர் மாதம் ஒரு ரம்மியமான காலம். வெயிற் காலம் நீங்கி, இலையுதிர் பருவத்திற்கு மாறும் மாதம். கோடை விடுமுறை தொடர்ந்து இம்மாதத்திலும் நீடிக்கிறது. பெரும்பான்மையான பிரமுகர்கள், விடுமுறைக்காக வெளியூர்களுக்குச் சென்று விடுகிறார்கள். இருப்பினும், பல பிரிட்டிஷ் மந்திரிகளையும், பிரிட்டிஷ் தலைவர்களையும் சந்திக்க ஏற்பாடு செய்திருந்தார்கள்.

முதன் முதலில் நான் சந்தித்தவர் ரைட் ஆனரபிள் ரெஜினல்ட் மாட்லிங். இவர் வர்த்தகத் துறை (Board of Trade) தலைவர். பிரிட்டிஷ் மந்திரி சபையில் இளைஞர் பகுதியைச் சேர்ந்தவர். சுமார் நாற்பத்து மூன்று வயதுள்ள இளைஞர் அவர். இருப்பினும், முக்கியமான ஒரு பதவியைத் திறமையுடன் வகித்து வருகிறார்.

இன்றைக்குப் பிரிட்டிஷ் மந்திரி சபையில் இருப்பவர்களில் பெரும்பாலோர் இளைஞர்கள். இரண்டு மூன்று பேரைத் தவிர, எல்லோருமே ஐம்பது வயதுக்குட்பட்டவர்கள். நாற்பது வயதுக்குட்பட்டவர்கள் கூட ஒரு சிலர் இருக்கிறார்கள். இதன் காரணமாகவே, பிரிட்டிஷ் மந்திரி சபை நல்ல முறையில் இயங்கி வருகிறது என்பது சிலருடைய கருத்து.

மாட்லிங் அவர்கள் இந்திய விவகாரங்களைப் பற்றி நன்கு அறிந்திருந்தார். நமது திட்டங்களைப் பற்றியும், அதன் நுட்பங்களைப் பற்றியும் நன்கு அறிந்திருந்தார் என்பது, அவருடைய பேச்சிலிருந்து புரிந்தது. அவருடன் பேசியபின், அவருடைய இலாகாவைச் சேர்ந்த பல்வேறு அதிகாரிகளுடன், இங்கிலாந்து—இந்திய வர்த்தகத்தைப் பற்றிச் சிறிது நேரம் பேச ஏற்பாடு செய்திருந்தார்கள்.

இரண்டாவதாக, பிரிட்டிஷ் நிதிமந்திரி ரைட் ஆனரபிள் செல்வின்லாயிட் அவர்களைச் சந்தித்தேன். அவர் வெளி

நாட்டு இலாகா மந்திரியாக பல ஆண்டுகள் இருந்து, அப்போது தான் நிதி மந்திரிப் பதவி ஏற்றிருந்தார். ஆகவே, அவர் முதலில் பெரும்பாலும் வெளிநாட்டு விவகாரங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார். இதிலேயே காலம் கழிந்து விடுமோ என்று பயந்து, 'ஒரு வெளிநாட்டு இலாகா மந்திரியுடன் பேசிக்கொண்டிருக்கும் உணர்ச்சிதான் எனக்கு இருக்கிறது' என்று நான் நாசூக்காகச் சொன்னேன். அதன் பின்னர்தான், நிதி, பொருளாதாரம் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

பிரிட்டனுக்கு இன்றைக்கு இருக்கக்கூடிய முக்கியமான பிரச்னை, ஐரோப்பிய நாடுகளுடன் எந்த முறையில் தொடர்பு கொள்வது என்பதுதான். ஐரோப்பாவிலே இருக்கக்கூடிய பல்வேறு நாடுகள், இன்றைக்குப் பொருளாதார அடிப்படையில் இணைந்து, ஒன்றுபட்டுச் செயலாற்ற வேண்டும் என்ற ஓர் இயக்கம் இருந்து வருகிறது. அந்த அடிப்படையில் ஒரு சில நாடுகள், தங்களுக்குள் நடைபெறும் வர்த்தகத்திற்கு வரிச் சலுகைகள் ஏற்படுத்திக் கொண்டுள்ளன. இந்த ஏற்பாட்டில் பிரிட்டனும் சேர்ந்திருக்கிறது. இன்னும் சில நாடுகள் ஒன்றாக இணைந்து எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லாமல் தமக்குள் வியாபாரம் செய்யக்கூடிய கொள்கையைக் கடைப்பிடித்து வருகின்றன. பிரிட்டனும் அந்த கோஷ்டியில் சேரலாமா வேண்டாமா என்பது பற்றிய கருத்து வேறுபாடுகள், பிரிட்டிஷ் மக்களிடம் இருந்து வருகின்றன. மற்ற நாடுகளிலும் பிரிட்டனைச் சேர்த்துக்கொள்ளலாமா, வேண்டாமா என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது.

இதில் காமன்வெல்த்தில் இருக்கக்கூடிய நம் போன்ற நாடுகளுக்கும் அக்கறை உண்டு. ஏனென்றால், ஐரோப்பிய வர்த்தகத்தில் பிரிட்டன் அதிகமாக ஈடுபடும்போது, காமன்வெல்த் நாடுகளுடன் இருக்கக்கூடிய ஏற்றுமதி இறக்குமதி பாதிக்கப்படலாம். முக்கியமாக இப் பிரச்னை பற்றித்தான் பேச்சு நடைபெற்றது. இதுவரையிலும் ஐரோப்பாவா, காமன்வெல்த்தா என்ற அடிப்படையில் தான் இப் பிரச்னையை ஆராய்ந்து வந்தார்கள். சமீப காலத்தில் அது ஐரோப்பாவும் காமன்வெல்த்தும் என்ற அடிப்படையில் மாறி வருகிறது. ஒன்றுக்கொன்று முரண்பாடு இல்லை என்பதைப் பலர் உணரத் தொடங்கி இருக்கிறார்கள்.

கடைசியாக இந்தியா போன்ற காமன்வெல்த் நாடுகளுக்குப் பாதகம் விளைவிக்கக்கூடிய நடவடிக்கைகளை பிரிட்டன் என்றைக்கும் எடுக்காது என்ற உறுதியைத் தெரிவித்தார் திருவாளர் லாயிட்.

நிதி இலாகாவில் சர் ராபர்ட் ஹால் என்பவர் ஒரு பிரசித்தி பெற்ற அதிகாரி. அவருடனும் பொருளாதார விஷயங்களைப்பற்றி விவாதிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அவர் முக்கியமாக இந்தியாவினுடைய பொருளாதார முன்னேற்றத்துக்கு விவசாய அபிவிருத்திதான் அடிப்படை என்பதை

வலியுறுத்தினர். விவசாய உற்பத்திப் பெருக்கின் அடிப்படையில்தான் தொழில் வளர்ச்சி ஏற்பட முடியும் என்பது அவர் கொள்கை. இது நம்முடைய அனுபவமும் கூட.

அடுத்தபடியாகக் கல்வி மந்திரி சர் டேவிட் எக்கில்ஸ் அவர்களைச் சந்தித்தேன். கல்வியைப் பற்றிய பல்வேறு கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டோம். பிரிட்டனில் உள்ள பல்வேறு கல்வி ஸ்தாபனங்களைப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். பார்ப்பதற்கு பிரயாணத் திட்டத்தில் ஏற்பாடும் செய்திருந்தார்கள்.

திரு ஸி. ஜே. எம். ஆல்போர்ட் என்பவர், காமன்வெல்த் இலாகாவில் ராஜாங்க மந்திரி. அவர் சென்ற ஆண்டு சென்னைக்கு வந்திருந்தார். எனது இல்லத்திற்கு வந்து தேநீர் அருந்திச் சென்றார். அவர் எனக்காக ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார். அதில் பல பிரிட்டிஷ் பிரமுகர்களைச் சந்திக்கக் கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது.

அதே இலாகாவில் முக்கிய மந்திரியாக இருக்கும் ரைட் ஆனரபிள் டங்கன் ஸாண்டிஸ் என்பவர், அச் சமயம் தென் ஆப்ரிக்காவிற்குச் சென்றிருந்தார். நான் இங்கிலாந்தை விட்டுப் புறப்படும் சமயம் தான் அவர் திரும்பி வந்திருந்தார். அவரைச் சந்தித்துப் பேசும்போது, இந்திய—பிரிட்டிஷ் உறவு நல்ல முறையில் நீடித்து இருக்க வேண்டுமென்று வலியுறுத்தி, அதற்கு ஆங்கில மொழி மிகவும் உதவும் என்ற கருத்தையும் வலியுறுத்தினர். அப்போது, நம் மொழிக் கொள்கையைப் பற்றி அவரிடம் விளக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஆங்கிலம் போதன மொழியாக இல்லாவிட்டாலும், தனி மொழியாக எல்லா மாணவர்களும் கற்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது என்பதை அவருக்கு எடுத்துக் கூறினேன்.

இப்போது நம்முடைய ராஜ்யத்தில் ஆங்கிலம் நல்ல முறையில் போதிக்கும் ஆசிரியர்களுக்கு மறு பயிற்சி கொடுக்க நடந்து வரும் திட்டத்தைப்பற்றி அவரும் விசாரித்தார். இந்தத் திட்டம் பிரிட்டிஷ் கவுன்ஸில் என்ற ஸ்தாபனத்தின் உதவியுடன் நடந்து வருவதை வாசகர்கள் அறிந்திருப்பார்கள்.

தொழிற் கட்சித் தலைவர் ஹியூகெயிட்ஸ்கில் அவர்களைச் சந்தித்தேன். அச் சமயத்தில் தான் அவருடைய கட்சியில் பல சிக்கல்கள் ஏற்பட்டு, குழப்பமான ஒரு நிலை இருந்தது. இருப்பினும், இந்திய விவகாரங்களைப் பற்றி வெகு அக்கறையுடன் பேசிக் கொண்டிருந்தார். ‘எங்கள் நாட்டிற்கு சுதந்திரம் அளிக்கும் காலத்தில் பதவியிலிருந்த கட்சியின் தலைவரைப் பார்த்து மரியாதை செலுத்த வேண்டியது எனது கடமை’ என்று நான் சொன்னபோது, அவருடைய முகம் மலர்ந்தது.

நம் நாட்டில் கடைசி கவர்னர் ஜெனரலாக இருந்த லார்ட் மவுண்ட் பாட்டன் பிரபு அவர்களைச் சந்திக்கா விட்டால் இங்கிலாந்து போனதாகவே இருக்காது என்பது என் கருத்து.







அவரைச் சந்தித்ததுமே 'நாம் ஒரு நெருங்கிய நண்பருடன் இருக்கிறோம்' என்ற உணர்ச்சிதான் எனக்கு ஏற்பட்டது. மற்றவர்களைப் போல் இந்தியாவின் பெருமைகளைப் பற்றி மட்டும் அவர் பேசிக் கொண்டிருக்கவில்லை.

நம்மிடத்தில் இன்னும் தொடர்ந்து இருக்கக் கூடிய குறைகள் என்ன, அவற்றை எப்படித் தவிர்க்க வேண்டும் என்பது பற்றித்தான் முக்கியமாக வலியுறுத்தினார். "நேருவுக்குப் பின் யார் என்ற பிரச்னையை எப்படித் தீர்க்கப் போகிறீர்கள்?" என்று திடீரென்று கேட்டார். "வயது முதிர்ந்தவர்களையே நம்பிக் கொண்டிருக்க முடியாது. இன்றைக்கு எங்களுடைய பிரிட்டிஷ் மந்திரி சபையைப் பாருங்கள், அதை நீங்களும் பின்பற்ற வேண்டும்" என்றார்.

"இதைப் பற்றி பண்டித நேருவுக்கு யோசனை சொல்ல நங்களுக்கு மேல் யார் இருக்கிறார்கள்?" என்று கேட்டேன். அவர் சிரித்துக் கொண்டார்.

ஆமாம்! இந்தியாவின் இன்றையப் பிரச்னை, புதிய புதிய தலைவர்களைக் கண்டு பிடிப்பதுதான். மக்களிடையே யிருந்து பெரும் தலைவர்கள் தோன்றுவார்கள் என்பதில் எனக்கு எப்போதுமே பூர்ண நம்பிக்கை உண்டு. ஆங்கில நாட்டு அரசியல் நிகழ்ச்சிகள், எனது அந்த நம்பிக்கையை உறுதிப் படுத்தியது.

## கல்வி நிலை

எனது சுற்றுப் பிரயாணத் திட்டத்தை வகுக்கும் போதே ஆரம்பப் பள்ளியிலிருந்து, சர்வகலாசாலைகள் வரை எல்லாக் கல்வி ஸ்தாபனங்களையும் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரிவித்திருந்தேன். அதற்கிணங்க, அவற்றை நான் காண ஏற்பாடு செய்திருந்தார்கள்.

கவன்ட்ரி என்ற நகரில், புதிதாகக் கட்டப் பட்டிருந்த ஆரம்பப்பள்ளி ஒன்றிற்குச் சென்றிருந்தேன். யுத்த காலத்திற்குப் பின் கட்டப்பட்ட பள்ளி அது. முன்னூறு முதல் நானூறு குழந்தைகள் வரை அங்கு படிக்கலாம். விஸ்தாரமான விளையாட்டு மைதானங்கள்; மழை, குளிர் காலத்தில் கூடப் பள்ளிக்கூடத்திற்குள்ளேயே விளையாடவும், உடற் பயிற்சி செய்யவும் பல வசதிகள்; சிறு குழந்தைகள் உட்கார அழகான மேஜை நாற்காலிகள்; வெந்நீர்க் குழாய்களுடன் கூடிய குளியல் அறைகள் என்று பற்பல செளகரியங்களுடன் அமைக்கப் பட்டிருந்தது அந்த ஆரம்பப் பள்ளிக்கூடம்.

"இந்தப் பள்ளிக்கூடம் கட்டுவதற்கு எவ்வளவு செலவாயிற்று?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் சொன்ன பதில், என்னைத் தூக்கி வாரிப் போட்டது!

அறுபதாயிரம் பவுன் செலவில், அதாவது, ஏழரை லட்ச ரூபாய் செலவில் கட்டப்பட்ட ஆரம்பக் கல்விச் சாலை அது. நம் நாட்டில் சாதாரணமாக ஒரு பெரிய கல்லூரிக்குச் செலவாகும் தொகை! ஆனால் எல்லாக் கல்விச் சாலைகளிலும்





இவ்வளவு வசதிகள் இல்லை. ஆரம்பப் பள்ளிகள் கட்டுவதற்கென்று ஒரு திட்டம் போட்டு, அதை நிறைவேற்றி வருகிறார்கள். புதிதாகக் கட்டப்படும் ஆரம்பப் பள்ளிகளை இப்படிக் கட்ட முயலுகிறார்கள்.

இங்கிலாந்தில் அநேகமாக ஐந்து வயது முடிந்ததும் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களில் சேர்த்து விடுகிறார்கள். அங்கு பதினைந்து வயது வரை ஆண்கள் பெண்கள் அனைவரும் படித்தாக வேண்டும். முதல் ஐந்து வகுப்புகள் முடிந்ததும், பதினோராவது வயதில் எல்லாக் குழந்தைகளுக்கும் ஒரு பரீட்சை வைக்கப் படுகிறது. இந்தப் பரீட்சையில் முதன்மையாகத் தேறுகிறவர்களுக்குத் தான், இலக்கியப் பள்ளியில் (Grammar School) இடம் கொடுக்கிறார்கள். இந்த இலக்கியப் பள்ளிகளில் படிப்பவர்கள்தான், சர்வகலாசாலை போன்ற பெரிய படிப்புக்களுக்குப் போக முடியும். நூற்றுக்கு இருபது பேர்களுக்குத்தான் இந்த இலக்கியப் பள்ளிக்கூடங்களில் இடம் கிடைக்கிறது. மீதமுள்ளவர்கள், சாதாரணப் பள்ளிகளில் சேர்ந்து, பதினைந்து வயது வரை கட்டாயக் கல்வி பெறுகிறார்கள். அதன் பின்னர், படித்துச் சர்ட்டிபிகேட் வாங்கி, மேலும் கல்வியைத் தொடர்ந்து தொழிற் கல்வி பெறவும் வசதியுண்டு. ஆனால் இவர்கள் சர்வகலாசாலைப் படிப்பு பெற முடியாது. இதுதான் இங்கிலாந்தில் புராதன காலத்திலிருந்து நடைபெற்றுவரும் கல்வித் திட்டம். ஆனால், யுத்த காலத்திற்குப் பின்னர், தொழிற் கட்சி பதவியில் இருந்த காலத்தில் இந்த முறையில் ஒரு மாறுதல் ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

பதினோரு வயதில் ஒரு குழந்தையினுடைய தரத்தை மதிப்பிடுவது சரியல்ல என்பது அவர்களுடைய கருத்து. வாழ்க்கையில் சிறந்த வசதிகளும், கல்விச் சூழ்நிலையும் உள்ள குடும்பங்களில் வளரும் குழந்தைகள், பதினோரு வயதிற்குள்ளாக நல்ல மனோவளர்ச்சியைப் பெறுவது சாத்தியமாயிருக்கலாம். ஆனால் சாதாரணக் குடும்பங்களில் உள்ள குழந்தைகள் பதினோரு வயதிற்குள் நல்லஅறிவு வளர்ச்சிபெறுவது சாத்தியமல்ல. ஆகவே, பழங்கால முறை உயர்வர்க்கத்தினருக்கே சாதகமானது என்ற முடிவுக்கு அவர்கள் வந்தார்கள். அதற்காக, இலக்கியப் பள்ளித் திட்டத்தையும் அவர்கள் எடுத்துவிடவில்லை. அந்த உயர் பள்ளியில் சேர முடியாதவர்களுக்கு, புதியதொரு பள்ளி முறையை வகுத்தார்கள்.

அந்தச் சமுதாயப் பள்ளிகளில் (Comprehensive School) பதினோரு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு, இலக்கியப் பாடங்களைத் தவிர ,விவசாயம், பொறி இயல், நிர்வாக முறை போன்ற தொழிற்பாடங்களும் பயில வாய்ப்புக் கொடுக்கிறார்கள். இந்தச் சமுதாயப் பள்ளிகளில் படிக்கும் நல்ல தரமுள்ள குழந்தைகளை, சர்வகலாசாலைக்குப் போகக்கூடிய முறையில் பயிற்றுவிக்கிறார்கள். இம்முறையின் காரணமாக, இதற்கு முன்பு சர்வகலாசாலைப் படிப்புப் பெற முடியாத பல குழந்தைகள் இப்போது அந்த வாய்ப்பினைப் பெறுகிறார்கள். இலக்கியப்



பள்ளிகளைத் தவிர, இம்மாதிரியான பள்ளிகளை நாடு முழுவதும் ஏற்படுத்தி, எல்லாக் குழந்தைகளையும் இம்முறையில் பயிற்றுவிக்க வேண்டுமென்பதுதான் தொழிற் கட்சியினருடைய கொள்கை. ஆனால், தொழிற்கட்சி பதவியிலிருந்து விலகி, கன்ஸர்வேடிவ் கட்சியினர் வந்த பிறகு, இந்தக் கொள்கை தளர்ந்திருப்பதாகச் சொல்கிறார்கள்.

இந்தப் பள்ளிகளை நிர்வகிக்கக்கூடிய பொறுப்பு, சர்க்காருடையது மட்டுமல்ல; ஆங்காங்கு உள்ள வட்டார சபைகள் (County Council) அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கின்றன. ஆகவே, தொழிற்கட்சி மெஜாரிட்டி இருக்கக்கூடிய சபைகள் இந்தப் புதிய பள்ளியை ஓரளவு அமைத்து வருகிறார்கள். இப்படி இங்கிலாந்து நாட்டிலும் கல்வியில் அரசியல் புகுவதை நாம் காண்கிறோம்.

இப் பள்ளிகளைப் பார்த்தபின் ஓர் அதிகாரி, "உங்களுக்கு எந்தத் திட்டம் பிடித்திருக்கிறது?" என்று என்னைக் கேட்டார்.

"இங்கிலாந்துக்கு எது பொருந்தும் என்பது பற்றி நான் சொல்ல முடியாது. அது நீங்கள் செய்யவேண்டிய முடிவு. ஆனால் எங்கள் நாட்டுக்கு சமுதாய முறைக் கல்விக் கூடங்கள் நன்மை பயக்கும்" என்றேன் நான்.

"ஓகோ! இங்கிலாந்து அரசியலில் நீங்கள் தனிப்பட்ட முறையில் எந்த ஒரு கட்சியையும் ஆதரிக்கவில்லை போலும்!" என்று சிரித்துக்கொண்டே பதிலளித்தார் அந்த அதிகாரி.

ஆரம்பப் பள்ளி வகுப்புகளுக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். சுறுசுறுப்பும் ஆரோக்கியமும் மிக்க அக் குழந்தைகள், அறைக்குள் நாங்கள் நுழைந்ததும் எழுந்து நின்று, 'குட்மார்னிங் சார்' என்று ஒரே குரலில் வரவேற்றார்கள்.

"இவர் எந்த நாட்டிலிருந்து வந்திருக்கிறார் என்று சொல்ல முடியுமா?" என்று என்னைக் காட்டிக் கேட்டபோது, "தெரியும், தெரியும்" என்று பல குழந்தைகள் கை தூக்கினார்கள்.

"காந்தி நாடு" என்றது ஒரு குழந்தை.

"நேரு நாடு" என்றது இன்னொன்று.

"இந்தியா" என்றது மற்றொன்று.

நம் நாட்டைப்பற்றியும், நம் தலைவர்கள் காந்திஜி, நேருஜி ஆகியவர்களைப் பற்றியும் அந்தக்குழந்தைகள் அறிந்திருக்கிறார்கள் என்பது கண்டு, நான் மிகவும் பூரிப்படைந்தேன்.

ஒரு இலக்கியப் பள்ளிக்கூடத்திற்கும் என்னை அழைத்துச் சென்றார்கள். பதினாறுவது நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்ட புராதனப் பள்ளிக்கூடம் அது. தலைமை ஆசிரியர் பள்ளியில் பல பகுதிகளுக்கு என்னை அழைத்துச் சென்றார். விஞ்ஞான பரிசோதனைச் சாலைகள், நூல் நிலையம் ஆகியவை அனைத்தும் சிறப்பாகவும் பெரிய அளவிலும் அமைக்கப்பட்டிருந்தன. நூல் நிலையங்களில் உள்ள நல்ல புத்தகங்களை மாணவர்கள் தேர்ந்தெடுக்க, நூல் நிலைய ஆசிரியர்கள் பெரிதும் உதவுகிறார்கள்.



அங்கெல்லாம் தலைமை ஆசிரியருக்கு மிகுந்த மதிப்பு உண்டு. தலைமை ஆசிரியருடைய தகுதியைப் பொறுத்துத் தான், பள்ளியின் சிறப்பே இருக்கின்றது என்பது ஆங்கிலேயர் களின் கருத்து. நல்ல தலைமை ஆசிரியர்களைப் பெறப் பலத்த போட்டி இருக்கின்றது. ஈட்டன், ஹாரோ போன்ற பள்ளிகளி லுள்ள தலைமை ஆசிரியர்கள், தேசீய வாழ்க்கையில் பரம்பரை யாக உயர்ந்த இடத்தைப் பெற்று வந்திருக்கிறார்கள்.

பொதுவாக ஆசிரியர்களுடைய நிலை என்ன என்பது பற்றி விசாரித்தேன். நம் நாட்டிலுள்ள குறையேதான் அங்கும் தென்பட்டது. மற்றத் துறையில் உள்ளவர்கள் பெறும் ஊதி யத்தைக் கணக்கிடும்போது, ஆசிரியர்களுக்குக் கிடைக்கக் கூடிய ஊதியம் மிகக் குறைவுதான் என்பதை எடுத்துக் காட்டி னார்கள். செப்டம்பர் மாதத்திய 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' சஞ்சிகையிலும், இதுபற்றிய கட்டுரை ஒன்று வந்திருந்தது.

'உயர்தரப் பள்ளி ஒன்றில் பணியாற்றி வந்த பியூன் ஒருவர், தனது பழைய காரை பள்ளித் தலைமை ஆசிரியருக்கு விற்றுவிட்டு, தனக்காக ஒரு புதியகார் வாங்கிக் கொண்டார்!' இந்த நிகழ்ச்சி ஆசிரியரின் நிலையை எடுத்துக் காட்டவில்லையா?

'அந்தப் பியூன் பள்ளியில் பெறக்கூடிய சம்பளத்தையும், வெளியில் வேலை செய்து பெறுகின்ற ஊதியத்தையும் கணக்கிட் டால், தலைமை ஆசிரியர் பெறுகின்ற ஊதியத்தைவிட அதிக மாக அவர் பெறுகிறார் என்பது தெரியவரும்' என்பதைச் சுட்டிக் காட்டி, 'நிலைமை இவ்வாறு இருந்தால், நம் குழந்தை களை நல்ல பயிற்சி கொடுத்து வளர்ப்பதற்குத் திறமை மிக்க நல்லாசிரியர்களை எப்படிப் பெறமுடியும்?' என்று அங்கலாய்த் திருந்தார்கள். இங்கும் இதே கவலை தரும் நிலைதானே என்று நினைத்து, என் மனத்தை ஓரளவு தேற்றிக் கொண்டேன்.

நான் விஜயம் செய்த கல்வி ஸ்தாபனங்களிலெல்லாம், நிதி, கல்வி ஆகிய இரண்டு இலாகாக்களையும் நான் சேர்ந்து வைத்திருப்பதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தார்கள்.

"இந்தச் சேர்க்கையினால் கல்விக்கு நன்மை ஏற்பட்டிருக் கிறதா?" என்று விசாரித்தார்கள்.

"ஏற்பட்டிருப்பதாகத்தான் பலரும் சொல்லுகிறார்கள்" என்று நான் பதில் சொன்னேன்.

"எங்கள் நாட்டிலும் நிதி மந்திரியும் கல்வி மந்திரியும் ஒருவராக ஏற்பட்டால்தான், எங்களுக்கும் ஒரு சமயம் விமோசனம் ஏற்படுமோ என்னவோ" என்று சொல்லிக் கொண்டதுடன், "உலகிலேயே வேறு எந்த அரசாங்கத்திலும் இந்தக் கூட்டு ஏற்பட்டதில்லை, மிகவும் மெச்சத்தக்க விஷயம்" என்று மீண்டும் அதைக் குறிப்பிட்டார்கள்.

"கல்விக்கு இப்படியாவது ஏதாவது நன்மை ஏற்படட் டுமே என்று, எங்கள் நாட்டில் மிகவும் பெரிய அறிவாளியான திரு ராஜாஜி அவர்கள் செய்த ஏற்பாடுதான் இது" என்று அவர்களுக்குத் தெரிவித்தேன்.



இங்கிலாந்து சுற்றுப் பிரயாணத்தில் கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலைகளுக்குப் போகவில்லை என்றால், இங்கிலாந்தைப் பார்த்ததாகவே சொல்ல முடியாது.

நான் முதலில் ஆக்ஸ்போர்டுக்குச் சென்றிருந்தேன். ஆக்ஸ்போர்டில் மொத்தம் முப்பத்தோரு கல்வி ஸ்தாபனங்கள் இருக்கின்றன. (Colleges, Halls and Societies) இவை அனைத்தும் ஒவ்வொரு வகையில் சிறப்புப் பெற்றவை. நான் அங்கு சென்ற போது கோடை விடுமுறை முடியவில்லை. ஆனால், சில தினங்களில் கல்லூரிகள் திறக்க இருந்தன. ஆகவே மாணவர்கள் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். பழைய சம்பிரதாயங்களைக் கட்டிக் காப்பதுதான் இந்தக் கல்லூரிகளின் சிறப்பாகும். இக் கல்லூரிகள் அனைத்திலும் பயிலும் மாணவர்கள் அங்கேயே தங்கிப் படிக்க வேண்டும் என்பதும் ஒரு சிறப்பாகும்.

ஒரு கல்லூரியில் சாப்பிடும் அறைக்குச் சென்றிருந்தேன். அங்கு உட்காருவதற்கு அகலம் மிகக் குறைந்த குறுகிய நாற்காலி போடப்பட்டிருந்தது.

" ஏன் இவ்வளவு அசௌகரியமான முறையில் போட்டிருக்கிறீர்கள் ?" என்று கேட்டதற்கு, " இது பழைய காலத்திலிருந்து இருக்கிறது. மாற்றாமல் வைத்திருக்கிறோம்" என்றுதான் பதில் சொன்னார்கள். " அப்படியானால் உங்கள் கல்வித் திட்டங்களையும் மாற்றாமல் அப்படியே வைத்துக் கொண்டிருக்கிறீர்களா ?" என்று கேட்டேன். " அதெப்படி முடியும் ?" என்றுதான் அதற்குப் பதில் சொன்னார்கள் !

ஒவ்வொரு கல்லூரியுடனும் சேர்ந்தே ஒரு கோவில் இருக்கிறது. ஆனால், இன்றைக்கு எத்தனை மாணவர்கள் பக்தி நிறைந்த மனத்துடன் மாதா கோவிலுக்குப் போகிறார்கள் என்பது சொல்ல முடியாத ஒன்று !

இன்னொரு நாள் கேம்பிரிட்ஜுக்குச் சென்றேன். தற்போது சீனாவின் தூதுவராக இருக்கும் திரு ஜி. பார்த்தசாரதி அவர்களின் குமாரர் திரு அசோக், அப்போதுதான் அங்கு வந்து சேர்ந்திருந்தார்.

" எல்லாம் சௌகரியமாக இருக்கிறதா ?" என்று அசோக்கைக் கேட்டேன்.

" இருக்கிறது ; ஆனால் குளிப்பதற்குத்தான் சௌகரியம் போதாது. தினமும் குளிப்பது இங்கு வழக்கமே இல்லை. நான் தினமும் குளிப்பது, இங்கிருக்கும் முறைக்கே முரணாக இருக்கிறது" என்று எனக்கேற்பட்ட அனுபவத்தை அவரும் சொன்னார்.

" அதனாலென்ன, போகப் போக இந்த முறைப்படியே இருக்க நீங்களும் பழக்கப்படுத்திக் கொண்டு விடுவீர்கள் " என்று வேடிக்கையாகச் சொன்னேன்.

கேம்பிரிட்ஜில் மிகப் பிரசித்தி பெற்றது கிங்க்ஸ் கல்லூரி. அங்குதான் நமது பிரதமர் பண்டித நேரு மாணவராக இருந்து படித்தது. அதைப்பார்க்காமல் வரலாமா? அங்கும் சென்றேன்.



நம் நாட்டிலும் இதைப் போன்று பாட புத்தகங்கள் தயார் செய்வதன் மூலமாகத்தான், ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் கல்வித் தரத்தை உயர்த்த முடியும். நம் நாட்டில் இத்துறையில் இருக்கும் பெரும் குறை, யார் வேண்டுமானாலும் புத்தகங்கள் பிரசுரிக்க முன் வந்து விடுவதுதான். புத்தகங்கள் எழுதுவதிலும் யார்எழுதுவது என்ற கட்டுப்பாடு கிடையாது; புத்தகங்கள் எந்த அடிப்படையில் எழுதப்பட வேண்டும் என்ற வழிமுறையும் வகுக்கப்படவில்லை.

இங்கிலாந்தில் இருக்கின்ற முறையில் பாட புத்தகங்கள் இருக்க வேண்டும் என்று சொன்னால், பெரும் அளவில் முதலீடு செய்து, சிறப்பான அச்சு இயந்திரங்கள், அவற்றை இயக்க நல்ல நிர்வாக அமைப்பு, பாட அமைப்புகளுக்கான ஆராய்ச்சிக் குழு ஆகிய ஏற்பாடுகளுடன் புத்தகத்தயாரிப்பில் ஈடுபட்டால்தான் முடியும். இந்த அளவுக்கு முதலீடு செய்து தனியார் துறையில் ஆரம்பப் பள்ளிகளுக்கான பாட புத்தகங்கள் தயார் செய்யமுடியுமா? ஒரு வேளை, இன்றைக்கு இருக்கக் கூடிய எல்லாப்புத்தக பிரசுர கம்பெனிகளும் ஒன்று சேர்ந்தால் இந்த நோக்கம் நிறைவேறலாம். இல்லாவிடில், சர்க்கார்தான் அந்தப் பொறுப்பை ஏற்க வேண்டியதா யிருக்கும். ஆரம்பக் கல்வியில் இருக்கக்கூடிய பிரச்னைகளே இவ்வளவு மகத்தானது! இதை நல்ல முறையில் சாதித்தால்தான், நல்லதொரு கல்வித் திட்டத்திற்கு நாம் அஸ்திவாரம் கோலியவர்கள் ஆவோம்!

## தொழிற் புரட்சி

மனித சமுதாய வரலாற்றில் ஏற்பட்ட பெரிய திருப்பத்திற்கு தொழிற் புரட்சி அடிப்படையாகும். இந்தப் புரட்சிக்கான வித்து, பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளிலேயே இடப்பட்டாலும், இதனுடைய உண்மையான வளர்ச்சி பதினெட்டாவது நூற்றாண்டில் தான் ஆரம்பமானதாகச் சொல்ல முடியும். நீராவி இயந்திரங்கள், நிலக்கரி இவற்றின் துணை கொண்டுதான், நவீன தொழில் யுகம் ஆரம்பமாயிற்று. அதோடு, இந்தத் தொழிற் புரட்சிக்கு இங்கிலாந்துதான் பிறப்பிடமாகவும் அமைந்தது.

உலகின் மற்ற நாடுகள் தொழிற் துறையில் பெருமளவுக்கு முன்னேற்றம் அடைந்திருந்தாலும், இன்று உலகில் ஒரு முக்கிய தொழிற் பிரதேசமாக இங்கிலாந்து விளங்கி வருகிறது. அதன் தொழில் வளங்கள் அனைத்தையும் கண்டறிவதென்றால், பல மாதங்கள், ஏன் பல வருடங்கள் கூட ஆகலாம்!

இருப்பினும் எனக்குக் கிடைத்த குறுகிய காலத்தில், சில முக்கிய தொழில் பகுதிகளைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது.

செப்டம்பர் மாதம் பதினெட்டாம் தேதியன்று லண்டனிலிருந்து ரயில் மார்க்கமாக நியூகாஸிலுக்குப் புறப்பட்டேன். 'கொல்லர் தெருவில் ஊசி விற்கிற மாதிரி' என்று தமிழில் உலவி வரும் ஒரு பழமொழியைப் போல, ஆங்கிலத்தில்



‘நியூகாஸிலுக்கு நிலக்கரி கொண்டு போவது போல’ (Carrying coal to Newcastle)என்று ஒரு பழமொழி இருக்கிறது. ஆமாம்! நியூகாஸில் பகுதிதான் நிலக்கரிக்குப் பெயர் போனது. அதை யொட்டிப் பெரிய கனரகத் தொழில்கள் அங்கு ஏற்பட்டிருக் கின்றன. முக்கியமாக கப்பல் கட்டும் தளங்களும், கனரகப் பொறி இயல் தொழில்களும், மின்சார இயந்திரத் தயாரிப்பு களும் பெரிய அளவில் அங்கு நடை பெற்று வருகின்றன.

இந்த நியூகாஸில் நகரம் டைல் நதிக் கரையில் அமைந் திருக்கிறது. நகரத்தினுடைய பெயரே ‘டைல் மேலுள்ள நியூ காஸில்’ (New Castle Upon Tyle) என்பது தான். அங்கு நடைபெற்று வரும் கப்பல் கட்டும் தொழிலை நேரில் சென்று பார்த்தேன். மாபெரும் வர்த்தகக் கப்பல்களைக் கட்டிக் கொண்டிருந்தார்கள் அங்கே.

நியூகாஸில் பகுதியில் இப்படிப் பெரும் தொழில்கள் பல அமைந்திருந்த போதும், மற்றப் பகுதிகளைவிட அங்கு வேலை யில்லாப் பிரச்னை அதிகமாக இருந்து வந்திருக்கின்றது. பெரும் தொழில்களால் மட்டும் மக்களுக்குப் போதிய அளவு வேலை வாய்ப்புக்கள் ஏற்படுவதில்லை ; பற்பல சிறிய உப தொழில்கள் ஏற்படுவதன் மூலம் தான் மக்களுக்கு வேலை வாய்ப்புக்கள் பெரும் அளவில் ஏற்பட முடியும் என்பதைத்தான் இது எடுத் துக் காட்டுகிறது. இதைத் தவிர்ப்பதற்காக சர்க்கார் இங்கு ஒரு புதிய திட்டத்தை வகுத்திருக்கிறார்கள். ‘நார்த் ஈஸ்டர்ன் டிரேடிங் சொஸைட்டி’ என்ற ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, அதன் மூலமாகச் சிறிய தொழில்கள் ஏற்படுத்துவதற்கான தொழிற் பண்ணையை அமைத்துள்ளார்கள். இத் தொழிற் பண்ணைக்கும் நான் சென்று, அங்கு உள்ள நிர்வாக அமைப்பு, தொழிற்கூட அமைப்புக்கள் ஆகியவற்றைக் கண்டேன்.

முக்கியமாக ‘எலெக்ட்ரானிக்ஸ்’ கருவிகள் செய்யும் ஒரு தொழிற்சாலை என் கவனத்தைக் கவர்ந்தது. ஒன்றிரண்டு பேர்களுடன் சிறிய அளவில் ஆரம்பிக்கப்பட்ட இத் தொழிற் சாலை, இப்போது நூறு பேருக்குமேல் பணிபுரியும் அளவுக்குப் பெருகியிருக்கிறது. இந்தியாவிலிருந்து சென்றிருக்கும் இளைஞர் ஒருவரையும் அங்கு நான் கண்டேன். அத் தொழிற்சாலை மானேஜர் இந்திய இளைஞனின் திறமையைப் பற்றிப் புகழ்ந்து கூறினார். இந்தத் தொழிற் பண்ணையைப் பார்த்துத் தான், நம்முடைய கிண்டி தொழிற்பேட்டை அமைக்கப்பெற்றது. நான் கண்ட ‘டீம்வாலி எஸ்டேட்’ தொழிற் பண்ணையை விட நம்முடைய கிண்டி தொழிற் பேட்டை சிறந்த முறையில் அமைந்திருக்கிறது என்பதுதான் என்கருத்து. மற்றவர்களுக்கு ஏற்படும் அனுபவத்தையும் நாம் பயன் படுத்திக் கொள்ளு கிறோம் அல்லவா?

நான் சென்ற இரண்டாவது தொழிற் பிரதேசம், கிளாஸ்கோ நகரப் பகுதி. கிளாஸ்கோ என்ற பெயரைக் கேட் டதுமே நமக்கு 9001 நம்பர் மல் நினைவுக்கு வருகிறதல்லவா?



மிகவும் மெல்லிய உயர்ந்த ரக வெள்ளைத் துணியாகிய கிளாஸ்கோ மல்லை அணிவதுதான், 1920—30ல் நாகரிகமாகக் கருதப் பட்டு வந்தது. ' கட்டினா கிளாஸ்கோ மல் கட்டணும் ஐயா. மத்ததெல்லாம் துணியேயில்லை, வெறும் கோணி!' என்று பேசப்பட்டு வந்த அந்தக் காலம் மாறி விட்டாலும், அந்த நினைவுகள் மாறவில்லையே! ஆகவே, கிளாஸ்கோ நகரை அடைந்ததும், முதலில் அந்த மல் தயாராகும் மில் எங்கிருக் கிறது என்று விசாரித்தேன். அதற்கு அவர்கள் என்ன பதில் சொன்னார்கள் தெரியுமா? ' நாங்கள் அம்மாதிரி பெயரையே கேள்விப்பட்டதில்லை ' என்றார்கள். உண்மைதான்! கிளாஸ்கோ நகரம் துணிக்குப் பெயர் போனதல்ல! அங்கும் கனரகத் தொழில்கள் தான் மிகுந்து காணப்பட்டன. மான் செஸ்டர் நகரம்தான் நெசவுத் தொழிலுக்குப் பெயர் போனது! மான்செஸ்டர் துணியைத்தான் கிளாஸ்கோவின் பெயரில் விளம்பரப் படுத்தி விட்டார்கள் போலும்!

கால்வில்லிஸ் (Colvilles) என்ற இரும்புத் தொழிற் சாலைக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். அத் தொழிற் சாலைக்குத் தேவையான இரும்புக் கனி, வெளிநாடுகளிலிருந்து தான் தருவிக்கப்படுகின்றது. அதைக் கொண்டு இரும்பும், உருக்குத் தகடுகளும் தயார் செய்கிறார்கள். கப்பல் கட்டுதல், உருக்குத் தகடுகள் தயாரித்தல் போன்ற தொழில்களுக்குத் தேவையானவை, அங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. இந் தப் பெரிய தொழிற்சாலை ஏற்பட்டுப் பல்லாண்டுகள் ஆகின்ற காரணத்தால், அங்கு உள்ள இயந்திரங்கள் பழங் காலத்தவையாகவே இருக்கின்றன. அவற்றையெல்லாம் மாற்றி நவீன இயந்திரங்கள் அமைப்பதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டுள்ளதாக அவர்கள் தெரிவித்தார்கள். இந்தத் தொழிற்சாலையில் இப்பொழுதுகூட மிகக் குறைந்த அளவில் தான் தொழிலாளர்கள் பணிபுரிகிறார்கள். எல்லாவற்றையும் இயந்திரங்களே செய்து விடுகின்றன. அப்படியிருக்க, நவீன இயந்திரங்கள் வந்தால், இப்போதிருப்பதில் கால் பங்கு கூட ஆட்கள் தேவைப்படாது என்றார்கள்.

கிளாஸ்கோ நகரம் கிளைட் நதிக்கரையில் அமைந் திருக்கிறது. அந் நதிக்கு இரு கரையிலும் கப்பல் கட்டும் தளங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒரு விசைப் படகில், நதி யின் வழியாகச் சென்று அத் தொழிற்சாலைகளைக் காண ஏற் பாடு செய்திருந்தார்கள்.

பற்பல கப்பல்கள் கட்டப்படும் அந்த இடத்தில், ஒரு பக் கத்தில் ஒரு பெரும் கப்பலை உடைத்துக்கொண்டிருக்கும் காட்சி யைக் கண்டு ஆச்சரியப்பட்டேன். ' ஏன் இப்படிச் செய்கிறார் கள்?' என்று விசாரித்ததற்கு, 'பெரும் யுத்தக் கப்பல்களின் காலம் தீர்ந்து விட்டது. தற்காலத்து யுத்த முறைகளுக்கு இந் தப் பெரிய கப்பல்கள் பயனற்றவை. வேகமாகச் செல்லும் சிறு கப்பல்கள்தான் இப்போதைய தேவை ' என்று அறிந்தேன்.

தொழில் வளர்ச்சிக்கு மிகவும் தேவையானது மின் சக்தி. மின் சக்தியைத் தற்போது இரு விதங்களில் உற்பத்தி செய்கிறார்கள். ஒன்று, அதிக உயரத்திலிருந்து கீழே விழும் நீரின் சக்தியை உபயோகித்து மின்சார உற்பத்தி இயந்திரங்களை இயக்குவித்து, மின் சக்தியை உண்டாக்குவது. இரண்டாவது அதிக அமுக்க சக்தியுள்ள நீராவியின் மூலமாக மின்சார உற்பத்தி இயந்திரங்களை இயக்குவது. இந்த நீராவித் தயாரிப்பு, நிலக்கரியை அல்லது எண்ணெயை எரிப்பதன் மூலம் நடைபெறுகிறது. இங்கிலாந்தில் பெரும்பாலும் நிலக்கரியை உபயோகித்துத்தான் இதுவரை மின்சார சக்தியை உற்பத்தி செய்து வந்தார்கள். இரண்டாவது யுத்த காலத்துக்குப் பின், நிலக்கரி கிடைப்பது குறைந்து வருகிறது, அத்துடன் அதை வெட்டி எடுக்கும் செலவும் அதிகமாகின்றது என்ற காரணங்களால் வேறு முறையைக் கையாள முடியுமா என்பது பற்றி ஆராய்ச்சி நடத்தினார்கள். அதன் காரணமாக, அணுசக்தியைக் கொண்டு மின்சாரம் தயாரிப்பது என்ற முடிவுக்கு வந்தார்கள்.

அணு சக்தி மூலம் மின்சாரம் என்று சொல்லும்போது அணு சக்தியை நேரடியாக இயந்திரங்களில் உபயோகப்படுத்தி மின் சக்தியாக மாற்றுவது என்றுதான் நாம் எல்லோரும் நினைக்கிறோம். ஆனால் அது அவ்வாறு அல்ல! தண்ணீரைச் சூடேற்றி நீராவியாக மாற்றுவதற்குத் தான் அணு சக்தியைப் பயன்படுத்துகிறார்கள். மற்ற முறைகளெல்லாம் பழையபடியே தான். அணு சக்தியை உற்பத்தி செய்வதும், அதன் கிரணங்கள் வெளியே வந்ததும் ஏற்படக்கூடிய தீமைகளைப் பாதுகாப்பதும்தான், இதிலுள்ள முக்கியமான நுணுக்கம். லண்டன் நகரில் இருக்கும்போதே 'அடாமிக் எனர்ஜி அதாரிடி' என்ற அணு சக்தி ஸ்தாபனத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு அணு சக்தியை மக்களின் நன்மைக்காக சமாதான முறையில் எந்தெந்த வகையில் பயன்படுத்தலாம் என்பதைச் சினிமா படங்கள் மூலமும், மாதிரி உபகரணங்கள் மூலமும் விளக்கிக் காட்டினார்கள். அத்துடன் கிளாஸ்கோ நகரத்துக்குப் பக்கத்தில் கட்டப்பட்டு வரும் ஹண்டர்ஸ்டன் அணு சக்தி நிலையத்திற்கும் என்னை அழைத்துச் சென்றார்கள். இங்கிலாந்தில் கட்டப்படும் அணு சக்தி நிலையங்களிலே இதுதான் மிகப் பெரியது. மூன்று லட்சத்து அறுபதினாயிரம் கிலோவாட் மின் சக்தி இதன் மூலம் உற்பத்தி ஆகும்!

நிலையம் கட்டப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் இருந்ததால், பல நுணுக்கங்களைக் காணக்கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. கட்டி முடிந்ததற்குப் பிறகு நிலையத்தின் வெளித் தோற்றத்தைத்தான் காண முடியும். அதிலும் முக்கியமாக அணு சக்தி உற்பத்தி ஆகும் உலைக்குப் பக்கத்தில் போவதுகூட முடியாத காரியம். பிரமாண்டமான அமைப்பு. தண்ணீரைக் காய்ச்சுவதற்கான பாய்லர்கள் இருநூறு டன், முன்னூறு டன் எடையுள்ளவை. இதைப்போன்று எட்டு பாய்லர்கள் அமைத்து வருகிறார்கள். இவற்றைத் தரை மட்டத்திற்கு

நூறு அடிக்குமேல் பொருத்த வேண்டும். அதற்காக, ஒரு தடவையில் 250 டன் வரை தூக்கி வைக்கக் கூடிய சுமை தூக்கிகளை அமைத்திருக்கிறார்கள். நம் சென்னைத் துறைமுகத்தில் 60 டன் சுமை தூக்கியைக் கண்டே நாம் பிரமிப்படைகிறோம். அப்படியிருக்க 250 டன் சுமை தூக்கி என்றால்.. !

நம் நாட்டிலும் அணுசக்தி நிலையங்கள் ஏற்படுத்த முயன்று வருகிறோம். நம் ராஜ்யத்தில்கூட ஒன்று அமைக்க வேண்டும் என்ற யோசனை இருந்து வருகிறது. ஆகவே இதனுடைய நுட்பங்களையும், செலவாகும் தொகையையும் ஆராய்ந்து பார்க்கும் அவா எனக்கேற்பட்டது. சாதாரணமான முறையில் மின் சக்தியை உற்பத்தி செய்வதைவிட, இம் முறையில் செலவு கணிசமாக அதிகமாகின்றது என்பதற்கான கணக்கைக் காண்பித்தார்கள். ஹண்டர்ஸ்டன் அணுசக்தி நிலையத்திற்கு நான்கு கோடியிலிருந்து ஐந்து கோடி வரை செலவாகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இதில் கணக்கிட முடியாததொன்று, இந்த இயந்திரங்களின் ஆயுட்காலம். இருபதாண்டுகள் இயங்கலாம் என்ற அடிப்படையில் செலவைக் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆனால் அது வெறும் யூகமே ! இருபத்தைந்தாண்டுகளும் வரலாம் ; பதினைந்தாண்டுகளிலும் பழுதடையலாம் ! இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் அணுசக்தி மூலமாக மின்சக்தி உற்பத்தி செய்வது மிகைப்பட்ட செலவாகிறது என்ற முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்கள். ஆகவே, புதிதாக இந்நிலையங்கள் ஏற்படுத்துவதை தற்போதைக்கு நிறுத்தி யிருக்கிறார்கள். ஆனால் இவ்வுற்பத்தியை இன்னும் சிக்கனமான முறையில் செய்வதற்குப் பெரும் அளவுக்கு ஆராய்ச்சிகள் உலகெங்கும் நடைபெற்று வருகின்றன. அவ்வாராய்ச்சியின் காரணமாக, உற்பத்தியின் செலவைக் கணிசமாகக் குறைக்க முடியும் என்றும் நம்புகிறார்கள். அத்துடன் இந்த ஆராய்ச்சி ஒன்றிரண்டு ஆண்டுகளில் வெற்றி அடைந்து விடும் என்றும் எதிர் பார்க்கிறார்கள். ஆகவே, நாமும் கூட இந்த விஷயத்தில் கொஞ்சம் அவசரப்படாமல் இருப்பது நல்லது என்பதே என்னுடைய கருத்து.

அடுத்து நான் சென்றது, பர்மிங்காம், கவன்ட்ரியை அடுத்துள்ள தொழிற் பகுதிகள். கவன்ட்ரி முக்கியமாக மோட்டார் கார் தொழிலுக்குப் பெயர் போனது. எல்லா முக்கிய கார்களும் அங்குதான் தயாராகின்றன. பர்மிங்காமில் உருக்கு எஞ்சினியரிங் தொழிற்சாலைகள் பெரிய அளவில் அமைந்திருக்கின்றன.

சென்னை ஆவடியில் உருக்குக் குழாய்கள் செய்யும் தொழிற்சாலை ஒன்று அமைக்கப்பட்டிருப்பதை நேயர்கள் அறிந்திருக்கலாம். அதன் தாய் ஸ்தாபனம் பர்மிங்காமில் தான் அமைந்திருக்கிறது. இந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த மிஸ்டர் யங் என்பவர், எனக்கு விருந்தொன்று ஏற்பாடு செய்து சிறப்பாக உபசரித்தார்.



லண்டன் பாராளுமன்றக் கட்டடம். தேம்ஸ் நதியின் தெற்குக் கரையிலிருந்து தெரியும் தோற்றம் இது. வலது புறத்தில் புகழ்பெற்ற 'பிக் பென்'னின் தோற்றத்தையும், இடது கோடியில் வெஸ்ட் மினிஸ்டர் மாதா கோவிலின் தோற்றத்தையும் காணலாம்.



குழந்தைகள் நலனில் இங்கிலாந்து தனி அக்கறை எடுத்துக் கொள்கிறது. அங்கு குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்கப்படுகிறது.

● பார்ன்பரோ விமான நிலையத்தில் நடந்த விமானக் கண்காட்சியில் பல வகையான விமானங்கள் பங்கெடுத்துக் கொண்டன.





இங்கிலாந்துநாட்டு நிதிமந்திரி ரைட்ஆனரபிள் ஸெல்வின் லாயிட் அவர்களைச் சந்தித்து உரையாடினார், சென்னை நிதி அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள்.

எடின்பரோ நகரில் உள்ள பிரின்ஸஸ் வீதியும், சர் வால்டர் ஸ்காட் மெமோரியலும்.



லண்டனுக்குப் பக்கத்தில் இருக்கும் கொடாக் பிலிம் தொழிற்சாலைக்குச் சென்றிருந்தேன். உதகமண்டலத்தில் கச்சா பிலிம்தொழிற்சாலைஒன்றுநாம்ஆரம்பித்திருக்கிறோமே ஆகவே பிலிம் தொழிற்சாலை எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காண்பதில் எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. ஆனால் அந்தத் தொழிற்சாலையில்எதையும்என்னால்காணவே முடியவில்லை! ஓர்இயந்திரத்தைக்கூட நான் சரியாகப்பார்க்கவில்லை. எப்படிக் காண்பது?எல்லாஇயந்திரங்களையும் இருட்டில் அல்லவா வைத்திருக்கிறார்கள். வெளிச்சத்துக்கும் பிலிமுக்கும் என்றுமே ஒத்துக் கொள்ளாதே! ஜன்ம விரோதமல்லவா? தொழிற்சாலைமுழுவதும்'ஏர் கண்டிஷன்' செய்யப்பட்டு, சீதோஷ்ண நிலையைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தார்கள். சிறிதளது தூசிகூடஉள்ளேசெல்லமுடியாது. நாம் உள்ளே செல்வதானால்கூட,அதற்கெனவே தயாரிக்கப்பட்டுள்ள தனிப்பட்ட கோட்டை மாட்டிக் கொண்டுதான் செல்லவேண்டும். இருட்டில் நடமாடினால் ஆட்கள் மோதிக் கொண்டுவிடுவார்களே! அதைத் தவிர்க்க, நடப்பவர்கள் எல்லாம் மெதுவாக சீட்டி அடித்துக் கொண்டு நடக்கிறார்கள். இருட்டில் எந்த அளவுக்குக் காண முடியுமோ, அந்த அளவுக்குத்தான் அனைத்தையும் கண்டேன். ஆனாலும், ஒரு கச்சா பிலிம் தொழிற்சாலை பொதுவாக எவ்வாறு அமைய வேண்டும் என்பதை என்னால் தெரிந்துகொள்ள முடிந்தது.

தொழில் வளர்ச்சியின் ஆரம்ப காலத்தில் இருக்கும்நம் நாட்டிலிருந்து சென்ற எனக்கு, பெருமளவுக்குத் தொழில் வளர்ச்சி அடைந்துள்ள இங்கிலாந்தைச் சுற்றிப் பார்த்தது பெரும் படிப்பினையாக இருந்தது. நாம் இன்றைக்கு ஏற்படுத்தி இருக்கக்கூடிய தொழில் எவ்வளவு சிறிய அளவில் இருக்கிறது என்பதும் நன்கு தெளிவாயிற்று.

இன்னும்பல்லாண்டுகள் பெருமுயற்சி செய்வதன்மூலமாகத்தான், மேல்நாடுகள் அடைந்திருக்கக்கூடிய தொழில் வளத்தை நாமும் பெற முடியும்.

'தொழில் வளம் பெருக, தொழில் அறிவு முக்கியம். தொழில் அறிவு, விஞ்ஞான ஆராய்ச்சியின் அடிப்படையில் தான் ஏற்படுகிறது. ஆகவே, நம் நாடு இத்துறையில் முன்னேற வேண்டுமென்று சொன்னால், விஞ்ஞானப் படிப்பு, விஞ்ஞான ஆராய்ச்சி, அதன் அடிப்படையில் ஏற்படுகின்ற தொழில் நுணுக்கம், அத்தொழில் நுணுக்கத்தைக்கொண்ட இயந்திரங்கள் இவை அனைத்தும் பெருகவேண்டும். இவற்றில்தான் நம் திட்டங்களின் அடிப்படையே இருக்கின்றது.

**விவசாய வளர்ச்சி**

இரண்டாவது யுத்தகாலத்திற்கு முன்பு, இங்கிலாந்தில்விவசாயம்பிற்போக்கான நிலையில்தான்இருந்துவந்தது. தனக்கு வேண்டிய பெரும் பகுதி உணவை, வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதன் மூலம்தான், அவர்களால்

மக்களுக்கு உணவளிக்க முடிந்தது. ஆனால், இரண்டாவது யுத்த காலத்தில் ஏற்பட்ட இறக்குமதி நெருக்கடி காரணமாக இந்நிலையைத் தவிர்க்க வேண்டுமென்கிற அவசியம் அவர்களுக்கு ஏற்பட்டது. அதனால்தான், விவசாய அபிவிருத்தியின் மூலமாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு அவர்கள் பெரு முயற்சி எடுத்து வருகிறார்கள். சென்ற பத்தாண்டுகளில், விவசாய உற்பத்தி அறுபது சதவிகிதம் பெருகி இருப்பதாகவும் அவர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள்.

இன்றைக்குப் பிரிட்டன் இயந்திரத் தொழில் நிறைந்த ஒரு பெரு நாடாக விளங்கிய போதிலும், விவசாயமும் அங்கு ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கக் கூடிய மக்களின் தொகை, பல்வேறு இதர தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களின் தொகையில் நான்கு சதவிகிதம்தான். அதே போல், விவசாய உற்பத்திப் பொருள்களின் மதிப்பும், தேசிய மொத்த வருமானத்தில் நான்கு சதவிகிதமாகத் தான் இருக்கிறது. நம் நாட்டிலோ, நூற்றுக்கு எழுபது பேர் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். நமது தேசிய வருமானத்தில் விவசாயத் துறையின் பங்கு, நாற்பத்தைந்து சதவிகிதம். இப்புள்ளி விவரங்களை நான் இங்கு விளக்குவதன் நோக்கமே, பிரிட்டன் தொழிற் துறையில் இன்று எந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டும் பொருட்டுத்தான்.

இங்கிலாந்தில் இப்படி விவசாய உற்பத்தி கணிசமாக உயர்ந்த பின்பும், இன்றும் அவர்கள் பாதி அளவுக்குமேல் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்துதான் வருகிறார்கள். எனவேதான், விவசாய அபிவிருத்திக்கான முயற்சிகள் அங்கு தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. சமீப காலத்தில், தொழில் அபிவிருத்தியைவிட விவசாய அபிவிருத்தி கூடுதலாக ஏற்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

இங்கிலாந்தில் மொத்தம் ஐந்து லட்சத்து இருபத்து மூவாயிரம் விவசாயப் பண்ணைகள் இருக்கின்றன. இவற்றில் அறுபது சதவிகிதம் ஐம்பது ஏக்கராவுக்குக் குறைந்தவை; பதினெட்டு சதவிகிதம் நூறு ஏக்கராவுக்கு மேற்பட்டவை; மூன்று சதவிகிதம் முன்னூறு ஏக்கராவுக்கு மேற்பட்டவை. விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் மக்களின் தொகை சுமார் பத்து லட்சம். அவர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் சொந்த நிலத்தை உழுபவர்கள். மற்றவர்கள் பெரும்பாலும் ஊதியத்திற்கு உழைப்பவர்கள்தாம்!



விவசாயத் தொழிலை அபிவிருத்தி செய்வதற்கு சர்க்கார் பல நடவடிக்கைகளை எடுத்திருக்கின்றனர். முதன் முதலாக விவசாயத்தில் ஈடுபட்டிருக்கக்கூடிய மக்கள், விவசாய நுணுக்கங்களை அறிந்து பயிற்சி பெற்றவர்களாக இருந்தால்தான், உண்மையான முன்னேற்றம் அடைய முடியும் என்பதை உணர்ந்திருக்கின்றனர். நாமோ தொழிலில் ஈடுபடுகிறவர்

களுக்குத்தான் பயிற்சி அவசியம், விவசாயத்தில் யார் வேண்டுமானாலும் ஈடுபடலாம் என்ற எண்ணத்தில் இருக்கிறோம்.

தொழில் நுணுக்கத்தைப் போல், விவசாய நுணுக்கமும் மிகவும் முக்கியமானது என்பதை இன்றைக்கு மேல் நாடுகள் நன்கு உணர்ந்திருக்கின்றன. ஆகவே, விவசாயப் பயிற்சி கொடுக்கக்கூடிய பல நிலையங்கள், பிரிட்டனில் இன்றைக்கு நடைபெற்று வருகின்றன. இங்கிலாந்து வேல்ஸ் பகுதிகளில் நான்கு விவசாயப் பள்ளிகள் இயங்கி வருகின்றன.

இந்தப் பள்ளிகளில் அந்த வட்டாரத்தில் இருக்கும் விவசாயப் பிரச்னைகளை விவாதிக்கிறார்கள். புதிதாக ஏற்பட்டிருக்கும் விவசாய முன்னேற்றங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுகிறார்கள். விவசாயிகளுக்கு ஏற்படும் கஷ்டங்களை நீக்கும் முறைகள் நன்கு விவாதித்து வகுக்கப்படுகின்றன. இப்படிப்பட்ட மகாநாடுகள் ஒவ்வொரு பள்ளியிலும் வருஷத்திற்கு இரண்டு மூன்று நடைபெறுகின்றன.

இவை தவிர, பயிர்களுக்கு வரக்கூடிய நோய்களைப் பற்றிய ஆராய்ச்சிகளின் விளைவை விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்லி தடுப்பு நடவடிக்கைகளையும், நோய் ஏற்பட்டால் அதை நீக்கும் முறை பற்றியும் போதிக்கிறார்கள்.

டர்ஹாம் வட்டாரப் பகுதியில் நடைபெற்று வருகின்ற ஒரு விவசாயப் பள்ளிக்குச் சென்றிருந்தேன். அங்கு விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்குச் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கப்பட்டு வருவதையும் கண்டேன். குறைந்தது இரண்டு வருஷமாவது விவசாயப் பண்ணைகளில் வேலை செய்தவர்களைத்தான், இப்பள்ளிகளில் எடுத்துக் கொள்கிறார்கள். பள்ளிகளில் சேர்த்துக் கொள்வதற்கு முன்பு மாணவர்களை ஒரு வருட காலம் வாரத்திற்கு ஒன்றிரண்டு மணி நேரம் இப்பள்ளிக்கு வந்து விவசாயத்தைப் பற்றிய வகுப்புகளில் பங்கு எடுத்துக் கொள்ளச் செய்கிறார்கள். அதற்குப் பின்னர்தான் அவர்கள் பள்ளியில் சேர்ந்து ஒரு வருஷ காலம் பயிற்சி பெறுகிறார்கள். இப் பயிற்சிக் காலத்தில், மாணவர்களுக்கு ஏற்படக்கூடிய செலவுகள் அனைத்தையும், சர்க்காரே ஏற்றுக் கொள்கின்றது.

இம்மாதிரிப் பள்ளிகளுடன் பெரிய விவசாயப் பண்ணைகள் இணைக்கப்பட்டிருக்கின்றன. நான் சென்றிருந்த பள்ளிக்கு நானூற்றைம்பது ஏக்கரா விஸ்தீர்ணமுள்ள ஒரு பண்ணை இருந்தது. இந்தப் பண்ணையிலும் சாதாரணப் பண்ணைகளைப் போலத்தான் விவசாயம் செய்கிறார்கள். இதை நடத்தும் பொறுப்பையும் பள்ளி மாணவர்களே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இப்படிச் செய்வதன் மூலம் விவசாய முறையில் அனுபவ ரீதியாகப் பலவற்றைப் புரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு மாணவர்களுக்கு ஏற்படுகிறது. பண்ணைகளில் கால் நடை வளர்ப்பும் நடைபெறுகிறது. அவற்றிலும் மாணவர்கள் பயிற்சி பெறுகிறார்கள்.



இங்கிலாந்தில் நல்ல பால் உற்பத்திக்கு முதல் இடம் கொடுக்கப்படுகிறது. கறவைப் பசுக்களைப் பராமரிப்பதிலும், கறந்த பாலைப் பக்குவப் படுத்தக்கூடிய முறைகளிலும் மாண வர்களுக்குப் பயிற்சி கொடுக்கிறார்கள். அங்கு பால் கறப்பது இயந்திரங்கள் மூலமாகத்தான். பால் கறக்கும் இடங்கள் வெகு சுத்தமாக வைக்கப்பட்டிருக்கின்றன. எல்லோருமே நல்ல பால் சாப்பிட வேண்டும் என்பதை மக்களுக்கு வலியுறுத் தக் கூடிய முறையில், 'நாள் தவறினாலும் தவறலாம், பால் சாப்பிடுவது தவறக்கூடாது' என்ற விளம்பரப் பலகைகளை ஆங்காங்கே தொங்கவிட்டிருக்கிறார்கள். எல்லாச் சிற்றுண்டி நிலையங்களிலும் தரமுள்ள பால் கிடைக்க ஏற்பாடு செய்திருக் கிறார்கள். பால் விற்பனைக்கென்று தனி நிலையங்களும் இருக் கின்றன. குழந்தைகள் ஆரோக்கியமாக வளருவதற்கு நல்ல பால் அவசியம் அல்லவா? ஆகவே, நாட்டில் பிறக்கிற எல்லாக் குழந்தைகளுக்கும் பால் வழங்கக்கூடிய ஏற்பாடுகளைப் பரவ லாகச் செய்திருக்கிறார்கள்.

விவசாயத் தொழிலாளர்களுக்குக் கிடைக்கக்கூடிய குறைந்த ஊதியம் வாரத்திற்கு ஏழு பவுன்; அதாவது தொண் ணூற்றைந்து ரூபாய். தொழிற் துறையில் கிடைக்கக்கூடிய குறைந்த ஊதியம் பத்து பவுன். ஆனாலும் விவசாயத் தொழி லாளர்களுக்குக் குறைந்த வாடகைக் குடியிருப்பு வசதிகள் கிடைக்கின்றன. பால், காய்கறி ஆகியவையும் குறைந்த விலைக் குக் கிடைக்கின்ற காரணத்தால், விவசாயத் தொழிலாளர் களுக்கும், தொழிற் துறையில் வேலை செய்கிறவர்களுக்கும் ஊதியத்தில் அதிக வித்தியாசம் இல்லை.

இப்படிப் பயிற்சி பெற்ற பின், எல்லோரும் மறுபடியும் அவரவர்கள் வேலை செய்துவந்த பண்ணைகளில் போய் அமர்ந்து விடுகின்றனர். நம் நாட்டில் இவ்வாறு ஏதாவது பயிற்சி பெற்று விட்டார்களென்றால், உடனே சர்க்கார் வேலைக்குத் தான் மனுப்போட்டு முயற்சிப்பார்கள். ஒருநாளும் விவசாயப் பண்ணைகளைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டார்கள்.

நிலங்களினுடைய வளத்தை அனுசரித்து, அங்கு என் னென்ன பயிர்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்பதைத் தீர் மானித்த பிறகே, காரியங்களில் ஈடுபடுகிறார்கள்.

சாதாரணமாகச் சம வெளியில் இருக்கக்கூடிய நிலங்க ளெல்லாம் நல்ல வளமுள்ள பூமிகளாகவே இருக்கின்றன. மழையும் போதுமான அளவு பருவ காலங்களில் பெய்கின்றது. சீதோஷ்ண நிலை விவசாயத்திற்கு அனுசரணையாகவே அமைந் துள்ளது. தனியாக பாசன வசதிகள் செய்ய வேண்டிய அவ சியமே அங்கு கிடையாது. பாசன வாய்க்கால்களுக்குப் பதி லாக, வடிகால்களைத்தான் நாம் அங்கு காண முடியும்.




சாதாரணமாக இருக்கக்கூடிய நிலங்களை ஏழு ஆண்டுகள் உணவுப் பொருள் தானியங்களுக்காகவும், மூன்றாண்டுகள் மேய்ச்சலுக்காகவும் உபயோகப் படுத்துகின்றனர். பயிர்

செய்யக்கூடிய ஏழு ஆண்டுகளிலும் மாறிமாறி எவ்வாறு பயிர் செய்ய வேண்டுமென்பதைப்பற்றியும் விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்லப்படுகின்றது. அத்துடன் ஒவ்வொரு பயிருக்கும் நிலவளத்தை அனுசரித்து எந்த விதமான உரம், எந்த அளவிற்குப் போட வேண்டுமென்பதும் விவசாயி களுக்கு விளக்கமாகச் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன.

இப்படிச் செய்வதனுல், விவசாய உற்பத்தியை விஞ் ஞான அடிப்படையில் பெருக்குவதற்கான எல்லா வழிகளை யும் விவசாயிகள் அறிந்து, நடைமுறையில் கொண்டு வருவ தற்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

மூன்று வருஷங்கள் புல்தரையாகஇருக்கும்போதுமுதல் ஆண்டு கறவைப்பசுக்களை மேய்ப்பதற்கும்,இரண்டாவது ஆண்டுஇறைச்சிக்காக வளர்க்கப்படும் மாடு,ஆடுமேய்ப்ப தற்கும், மூன்ருவதுஆண்டில்புல்லை வெட்டி பக்குவப்படுத்தி குளிர்கால உபயோகத்திற்காகவும் பயன்படுத்துகிருர்கள். மாடுகளைமேய்க்கும்போதுகூட,குறிப்பிட்டஎல்லேக்குள்தான் அவை மேயவேண்டும் என்பதற்கு ஏற்பாடு செய்கிருர்கள். சிலபண்ணைகளில்இதற்காகக் குறைந்த மின் சக்தி பாயும் கம்பிவேலிகளைப்பயன்படுத்துகிருர்கள். ஆடுமாடுகள் அவ் வேலிக்குப் பக்கத்தில் சென்ருல் அதிர்ச்சிஅடையுமல்லவா?

மலைப் பிரதேசங்களில் சில பகுதிகள் எந்த விதமான பயிர்செய்வதற்கும்பயனற்ற பூமியாகஇருக்கின்றன.அங்கு கால் நடை வளர்ப்பதில் மட்டும்தான் ஈடுபடுகிருர்கள்.

ஆடுமாடுகளின்எண்ணிக்கையைக்கொண்டு, மேய்கின்ற புல் தரையைக் கணக்கிடுவது அங்கு வழக்கமில்லை.அதற்கு மாருக,ஏக்கராவுக்குஎத்தனை பால்உற்பத்திஆயிற்று, அல் லதுஎத்தனைபவுண்டுஇறைச்சிகிடைத்ததுஎன்கிறஅடிப்படை யில்தான்அதைக்கணக்கிடுகிருர்கள். இதன்மூலம்நிலத்தை எவ்வளவு லாபகரமாக உபயோகிக்க முடியும் என்பதை உணர்ந்து விவசாயத்தைநடத்தும் வாய்ப்பு ஏற்படுகிறது.

நம் நாட்டில் ஆடுமாடுகள் ஏராளமாக உள்ளன.ஆனுல் அவற்றின் தரத்தைக் கவனிப்போமேயானுல், உலகிலேயே மிகவும் தரம் குறைந்த கால் நடைகளைத்தான் நம்நாட்டில் காண்போம். இதன் காரணமாகத் தீனியும்அதிகம்விரயமா கிறது; பலன் கிடைப்பதும் மிகக் குறைவாக இருக்கிறது. கால் நடை செல்வத்தின்தரத்தை உயர்த்தி,எண்ணிக்கை யைக்குறைப்பதன் மூலமாகத்தான்,நல்ல பலன் ஏற்பட முடி யும் என்பதை நாம் உணர்ந்து, அதற்கான நடவடிக்கைகள் எடுப்பது மிகவும் அவசியம். அதற்கான பல திட்டங்களை நாம் இன்றைக்கு வகுத்துள்ளோம். அவற்றைப் பயன் படுத்தப் பொது மக்கள் முன் வரவேண்டும்.

விவசாய உற்பத்தியில்வெவ்வேறு சத்துள்ள உணவுகள் அங்கேதயாரிக்கிருர்கள்.ஆகவே,சாதாரணமக்கள் ‘ஏதோ



வயிறு நிறையச் சாப்பிடுகிறோம், அவ்வளவுதான்' என்ற எண்ணத்துடன் வாழாமல், 'நல்ல சத்துள்ள உணவை நாம் உட்கொள்ளுகிறோம். இந்தச்சிறந்த வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது' என்ற மன நிறைவுடன் வாழ்கிறார்கள்.

விவசாய உற்பத்தி பெருகுகின்ற காரணத்தால், விலைக் குறைவு ஏற்படாமல் சர்க்கார் கவனித்துக் கொள்கிறார்கள். குறிப்பிட்ட விலைக்குக் குறைந்தால், அதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்திற்காக சர்க்கார் ஈடு கொடுக்கிறார்கள். தானியங்களைச் சேகரித்து வைக்கவும், ஆடு மாடுகளைக் கட்டுவதற்கான கொட்டகைகளை அமைப்பதிலும், சர்க்கார் பண உதவி செய்கிறார்கள். அதனால் இன்றைக்குப் புதிய புதிய பண்ணைக் கட்டடங்கள் இங்கிலாந்தில் உருவாவதைக் காண முடிகிறது.

ஆட்கள் குறைவாக இருக்கின்ற காரணத்தால், அநேகமாக எந்தெந்த வேலைகளை இயந்திரங்கள் செய்ய முடியுமோ, அவற்றை இயந்திரங்கள் மூலமாகவே செய்து விடுகிறார்கள். அந்த இயந்திரங்களை இயக்கும் வழி முறைகளையும் தொழிலாளர்களுக்கு நன்கு கற்பிக்கின்றார்கள்.

இங்கிலாந்தில் அனைவரும் தங்கள் உணவுடன் ஏதாவது ஒரு பழம் சாப்பிடுகிறார்கள். இதற்காக வெளிநாடுகளிலிருந்து ஏராளமான பழங்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன.

விவசாயத் துறையிலும், பழங்கள், காய்கறிகள், புஷ்பங்கள் இவற்றின் வளர்ச்சியில் போதிய கவனம் செலுத்தப் படுகின்றது. விவசாய உற்பத்தியில் பத்தில் ஒரு பங்கு பழங்கள், காய் கறிகள் மூலம்தான் ஏற்படுகிறது. 1956-57ல் ஆயிரத்து இருநூற்றுமுப்பது லட்சம் பவுன் மதிப்புள்ள பழம், காய்கறிகள் உற்பத்தியாயின என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

நாம் பெரும்பாலும் விவசாயத்தை மட்டும் நம்பி வாழும் மக்கள். இன்றைக்கு நமது வாழ்க்கை நிலை உயர வேண்டுமென்று சொன்னால், அதை விவசாய அபிவிருத்தியின் அடிப்படையில்தான் ஏற்படுத்த முடியும். ஆகவேதான், இன்றைக்கு நம்முடைய திட்டங்களில் விவசாயத்திற்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டுள்ளது. இருப்பினும், நாம் எதிர்பார்த்த அளவு முன்னேற்றம் ஏற்படவில்லை என்பதையும் காண்கிறோம். அதற்குக் காரணம், விவசாயிகளிடையே, விவசாயத்தைப் பற்றிய அறிவுவளர்ச்சி போதிய அளவு ஏற்படாததுதான்.

தலைமுறை தலைமுறையாகக் கையாளப்பட்டு வந்த முறையையே இன்றும் உபயோகித்து வருகிறோம். பழங்கால விவசாயக் கருவிகள்தான் இன்றும் உபயோகப் படுத்தப்பட்டு வருகின்றன. நவீன விவசாய முறைகளில் பயிற்சி அவசியம் என்கின்ற உணர்ச்சியும் நம்மிடம் இன்னும் ஏற்படவில்லை.

சிறிய நாடாகியஇங்கிலாந்தில், வருடமொன்றுக்கு இரண்டாயிரம் விவசாயத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி கொடுத்து வெளியே அனுப்புகிறார்கள். இதற்குமேல் விவசாயக் கல்லூரி



களிலும் பலர் உயர்ந்த படிப்புப் படிக்கின்றார்கள். நம் நாட்டில் விவசாயக் கல்லூரிகள் இருந்தாலும், சாதாரண விவசாயிக ளுக்குப் பயிற்சி கொடுக்கக்கூடிய பள்ளிகள் எத்தனை உள்ளன?

ஒவ்வொரு நிலப்பகுதியின் மண் வளத்தையும் பரிசோ தித்து, அம் மண்ணில் எந்த சக்தி அதிகம், எது குறைவு, எந்த விதமான உரம் உபயோகப் படுத்தவேண்டும், எந்தெந்தப் பயிர்கள் உற்பத்தி செய்யலாம் என்பதையெல்லாம் ஆராய்ச்சி அடிப்படையில் விவசாயிகளுக்குக் கற்பிப்பது, நாம் முக்கிய மாகக் கவனம் செலுத்த வேண்டிய மற்றொன்றாகும்

விவசாயம் என்றால் தானாக இயங்கிவிடும் என்ற எண்ணம் நம்மிடமிருந்து மாறவேண்டும். விவசாயமும்,விவசாய வளர்ச் சியும் விஞ்ஞான அறிவைப் பொறுத்துத் தான் இருக்கின்றன என்பதை அறிந்து, அதற்கேற்ற சிறந்த நடவடிக்கைகளை நாம் எடுப்பதன் மூலம்தான், நம் நாட்டில் உண்மையான விவசாய வளர்ச்சி ஏற்பட முடியும்.




உலகப் புகழ்பெற்ற ஆங்கில நாடகாசிரியர் வில்லியம் ஷேக்ஸ்பியர் பிறந்த இடம் இங்கிலாந்தில், ஏன் உலகிலேயே பிரசித்திபெற்ற ஸ்தலமாகும். ஆண்டுதோறும் லட்சக்கணக் கான மக்கள் அவ்வூருக்குச் சென்று, அந்த உலக மகா கவிஞ ருக்குத் தங்கள் மரியாதையைச் செலுத்தி வருகிறார்கள். ஷேக்ஸ்பியர் பிறந்த வீடு, தேசிய சொத்தாக்கப்பட்டுப் பாது காக்கப் படுகின்றது. அந்த வீட்டிலுள்ள அறைகளெல்லாம் ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலத்தில் எப்படி இருந்தனவோ, அப் படியே வைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டும் ஏப் ரல் மாதத்திலிருந்து நவம்பர் மாதம் முடிய, தொடர்ந்து மகாகவி ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களை அங்குள்ள ஒரு நாடக அரங்கில் நடித்துக் காட்ட ஏற்பாடு செய்துள்ளார்கள்.

ஆண்டு தோறும் மூன்று நான்கு முக்கிய நாடகங்களைத் தேர்ந்தெடுத்து, சிறந்த நடிகர்களைக் கொண்டு அவற்றை நடித்துக் காட்டுகிறார்கள். அத்துடன் அடுத்த ஆண்டு எந் தெந்த நாடகங்கள் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளன என்பதை யும் ஓராண்டுக்கு முன்பே விளம்பரப்படுத்தி விடுகிறார்கள். ஒரு நாடகத்திற்கு டிக்கெட் வேண்டுமென்று சொன்னால், பல வாரங்களுக்கு முன்பே வாங்கியாக வேண்டும். இல்லா விட் டால் நாடகம் பார்ப்பது சிரமம்தான்! ஒவ்வொரு நாளும் கொட்டகை நிரம்பி விடுகிறது. திடீரென்று நாடகம் பார்க்க வேண்டுமென்று சொன்னால், கள்ள மார்க்கெட்டில் தான் இரண்டு மூன்று மடங்கு பணம் கொடுத்து டிக்கெட் வாங்கி யாக வேண்டும். இங்கிலாந்தில் கூட இந்த மாதிரி இடங்களில் 'பிளாக் மார்க்கெட்' இருப்பதாகக் கேள்விப்பட்டேன்!

ஷேக்ஸ்பியர் பிறந்த இந்தப் புனித ஸ்தலமான (Stratford upon Avon) 'ஸ்டராட்போர்ட் அபான் ஆவனு'க்குப் போகா மல் திரும்ப முடியுமா? கவன்ட்ரியிலிருந்து காரில் அக்டோபர்



முதல் தேதி கிளம்பினேன். ஷேக்ஸ்பியர் பிறந்து வளர்ந்த வீடு, அவர் காதலித்து மணந்த திருமதி ஆன் ஹத்தவே வாழ்ந்த வீடு ஆகியவற்றையெல்லாம் கண்டேன். இவற்றையெல்லாம் காணக் கட்டணம் வசூலிக்கிறார்கள். அதைக் கொண்டே அவற்றைப் பராமரிக்கப் போதுமான நிதி திரட்டி விடுகிறார்கள். அத்துடன் ஷேக்ஸ்பியரின் நாடக புத்தகங்களை அங்கு விற்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். எல்லோரையும் போலவே நானும் அங்கு சென்றதன் ஞாபகார்த்தமாக ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் அனைத்தும் அடங்கிய புத்தகம் ஒன்றை வாங்கிக் கொண்டேன்.

ஷேக்ஸ்பியர் பிறந்து வாழ்ந்த அந்தக் கிராமத்தில் எல்லா நாட்டு மக்களையும் காண முடிந்தது. ஆங்கில இலக்கியத்தைப் பற்றி அறிந்த அனைவருமே, இங்கிலாந்துக்கு விஜயம் செய்யும் போது, அங்கும் விஜயம் செய்கிறார்கள். அதற்கான வசதிகள் பல அங்கு செய்யப்பட்டிருக்கின்றன. பல ஓட்டல்கள், பல நூற்றாண்டுகளாக நடத்தப்பட்டு வருகின்றன. முன்னூறு ஆண்டுகளுக்கு மேல் நடந்துவரும் ஓர் ஓட்டலில்தான் நானும் தங்கி உணவருந்தினேன்.

அன்றிரவு 'டிராய்லஸ் அண்ட் கிரஸீடா' என்ற நாடகத்திற்குச் சென்றிருந்தேன். நாடகம் 'ஹெலன் ஆப் டிராய்' என்ற கிரேக்கக் கதையைத் தழுவி எழுதப்பட்டது. கிரேக்கர்கள் டிராய் என்ற நகரத்தை முற்றுகையிடுகின்ற கட்டம் இந் நாடகத்தில் மிகவும் முக்கியமான இடம்.

நாடக மேடைகளில் காட்சி ஜோடனைகள் கிடையாது. அந்தந்தக் காட்சிகளுக்கு ஏற்ப சில ஆசனங்கள், அட்டைப் படங்கள் ஆகியவற்றை நடிக நடிகைகளே கொண்டு வந்து உரிய இடங்களில் போட்டுவிட்டு நடிக்க ஆரம்பிக்கிறார்கள். இந்த ஏற்பாடுகள் எளிமையாக இருந்தாலும், மனத்தைக் கவரக்கூடிய முறையில் இருக்கின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சியானதால், அக்காலத்து உடைகள், அலங்காரங்கள் இவை பற்றி ஆராய்ச்சிகள் பல செய்து, அம்முறையில் அவற்றைத் தயார் செய்கிறார்கள்.

நான் நாடகத்திற்குச் சென்ற தினம் அதில் பங்கெடுத்துக் கொள்ள இருந்த முக்கியநடிகை, உடல்நிலைக் கோளாறு காரணமாக நாடகத்தில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. அவருக்குப் பதிலாக வேறொரு நடிகை நடித்தார். அவர் மிகத் திறம்பட நடித்தார். நாடகத்திற்கு வந்திருந்த அனைவருமே அதைப் பாராட்டிப் பேசிக்கொண்டார்கள். முக்கியமான நடிகரோ, நடிகையோ வராவிட்டால் கூட, நாடகம் நடைபெறுகின்ற நிலையில் இங்கிலாந்து நாடக மேடை இருக்கிறது என்பதை இது எடுத்துக் காட்டியது. நம் நாட்டில் ஒரு நடிகர் வரவில்லையென்றால், சீட்டி அடித்துப் பெரிய கலவரத்தை உடனே உண்டாக்கி விடுவதைப் பார்க்கலாம். சிறு சிறு பாத்திரங்களைத் தாங்கி நடிப்பவர்கள் கூட வெகு திறமையாக நடிக்கிறார்கள்.





ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலம் பதினாறு (1564-1616) பதினேழாம் நூற்றாண்டு. அக்காலத்தில்தான் ஆங்கில நாடகக் கலை வளர்ச்சி பெற்றது. தொழிற்துறையில் வளர்ச்சி ஏற்பட்டது போலவே, கலைத் துறையிலும் ஆங்கிலேயர்கள் முதன்மை பெற்று வந்திருக்கிறார்கள். அதிலும் முக்கியமாக நாடகக்கலை பெருமளவு மக்களிடையே வேரூன்றி இருக்கிறது.

விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக இன்றைக்கு நாடகத்திற்குப் பல போட்டிகள் ஏற்பட்டிருக்கின்றன. முதலில் சினிமா. அதிலும் பேச்சு—பாட்டு சேர்ந்தபோது, நாடகத்திற்கு விரும்பிச்செல்கின்றவர்களின் எண்ணிக்கைகுறைய ஆரம்பித்ததில் ஆச்சரியமில்லைதான். அதன் பின் ரேடியோ வந்தது. தொடர்ந்து டெலிவிஷன் வேறு ! இவ்வளவு கடும் போட்டி இருப்பினும், நாடகக்கலை இன்னும் சிறந்து விளங்குகிறது என்பதை இங்கிலாந்தில் கண்டேன்.

லண்டன் மாநகரில் பல நாடகங்கள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. திருமதி அகாதா கிறிஸ்டி எழுதிய 'எலிப் பொறி' (Mouse Trap) என்ற துப்பறியும் நாடகம் தொடர்ந்து ஏழு வருஷங்களாக இடைவிடாமல் நடந்து வருகின்றது ! இருந்தும் தினமும் கொட்டகை நிறைந்து காணப்படுகிறது. திடுக்கிடக்கூடிய சம்பவங்களைத் திறமையான முறையில் சித்திரித்துக் காட்டினார்கள். இப்படிப் பல வருஷங்கள் நாடகங்கள் தொடர்ந்து நடப்பதே, நாடகங்களுக்கு மக்களிடையே எவ்வளவு மதிப்பு இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறதல்லவா ? பெர்னாட்ஷா எழுதிய 'பிக்மேலியன்' என்ற நாடகத்தை 'மை பேர் லேடி' என்ற தலைப்பில் நாடகமாக நடிக்கிறார்கள். அதுவும் தொடர்ந்து நான்கு வருடங்களாக நடைபெற்று வருகிறது. இன்னும் பல ஆண்டுகள் நடை பெறும் என்றும் எதிர்பார்க்கிறார்கள் ! அந்த நாடகத்தில் லண்டன் நகரத்துக் காட்சிகள் பல தத்ரூபமாகச் சித்திரித்துக் காட்டப்பட்டன. சமுதாயத்தின் உயர் நிலையில் உள்ளவர்களுடைய வாழ்க்கையைக் கேலி செய்து காண்பிக்கும் ஒரு நாடகம் அது. வீதியில் திரிகின்ற ஒரு பிச்சைக்காரப் பெண்ணை, அவள் பேசுகின்ற முறையை மாற்றி ஓர் உயர் குடும்பத்தில் பிறந்த பெண்போல் ஆக்கிவிட முடியும் என்பது தான் நாடகத்தின் மையக் கருத்து. நடிப்புத் திறமையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம் ; அபாரம்தான் !

இவற்றைத் தவிர இன்னும் இரண்டு மூன்று நாடகங்களைக் காணக் கூடிய வாய்ப்பும் எனக்கு ஏற்பட்டது. நாடகத் துறையில் ஆங்கிலேயரிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய உண்டு. எந்த இடத்தில், எந்த வகுப்பில் அமர்ந்திருந்த போதிலும்,காட்சிகள் எல்லோருக்கும் தெரியும் படி கொட்டகைகள் அமைந்திருக்கின்றன. பல நாடகக் கொட்டகைகளில் சுழலும் மேடைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு காட்சி நடை பெற்றுக் கொண்டிருக்கும்போதே



பின்புறத்தில் இன்னொரு காட்சியை அமைத்து விடுகிறார்கள். இந்த ஏற்பாட்டினால் கால இடைவெளியின்றி, நாடகத்தைத் தொடர்ந்து நடத்த முடிகிறது.

மேற்கத்திய நாடுகளில் கோஷ்டிகான சங்கீதம் (Orchestra) மிகவும் பெயர் பெற்றது. ராயல் பெஸ்டிவல் ஹாலில் நடந்த ஒரு சங்கீதக் கச்சேரிக்கும் சென்றிருந்தேன். யுத்த காலத்திற்குப் பின்பு கட்டிய கொட்டகை அது. இரண்டாயிரம் பேருக்கு மேல் அங்கு உட்காரலாம். உலகிலேயே நவீன ஒலி அமைப்பு முறை (Accoustics) சிறந்த முறையில் இங்கு தான் அமைந்திருப்பதாகச் சொன்னார்கள். உள்ளே செல்லும்போதே அச்சடித்த எச்சரிக்கை ஒன்று கையில் கொடுக்கப்படுகிறது. 'கச்சேரி நடக்கின்ற நேரத்தில் யாரும் இருமுவதோ, வேறு எந்தவிதமான ஒலி எழுப்புவதோ கூடாது' என்று அதில் கண்டிருந்தது. காரணம், எந்த இடத்தில் ஒரு சிறு சத்தம் எழுந்தாலும், அது கொட்டகை முழுவதும் கேட்கிறது. கச்சேரி நடக்கின்ற காலத்தில் மக்கள் மிகவும் கட்டுப்பாடுடன் எந்தவிதமான சத்தமும் இன்றி நிசப்தமாக அமர்ந்திருக்கிறார்கள். அது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பதை நானும் கூட அனுபவித்துத் தெரிந்து கொண்டேன். இருமக் கூடாது என்று சொல்லும்போது தானே நமக்கு இருமத் தோன்றுகிறது? மிகவும் முயன்று அதை அடக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. எனக்குத்தான் அப்படி சிரமமாக இருந்தது என்று எண்ணினேன். விசாரித்ததில், அந்த சங்கடம் அனைவருக்குமே இருந்ததாகச் சொன்னார்கள். ஆனாலும் கச்சேரி சிறப்பாக நடை பெறவேண்டுமென்ற எண்ணத்தில், இவற்றை அடக்கிக் கொண்டு தான் அனைவரும் அமர்ந்திருக்கிறார்கள்.

மேல் நாடுகளில் இன்றைக்கு கலைத்துறையில் பெரும் பங்கு கொள்வது டெலிவிஷன் தான். இங்கிலாந்தில் டெலிவிஷன் அமைப்பை நாடு முழுவதும் பரவலாக ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கிராமங்களுக்குச் சென்றால் கூட, அங்கும் பெரும்பான்மையான மக்கள் தங்கள் வீடுகளில் டெலிவிஷனைப் பொருத்தி இருக்கிறார்கள். இதன் காரணமாக, சினிமாவுக்குப் போகிறவர்களின் எண்ணிக்கை கணிசமாகக் குறைந்திருக்கிறது என்று சொன்னார்கள். மூன்று நான்கு வருஷங்களுக்கு முன்பு சினிமா சென்றவர்களின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்குதான் இன்று சினிமா செல்கிறவர்களாக இருக்கிறார்களாம். சினிமாவுக்கு ஏற்பட்ட கதிதான், ரேடியோவுக்கும்.



டெலிவிஷன் மக்களுக்கு ஒரு புதிய பொழுது போக்கு சாதனமாக விளங்குகிறது என்பதோடு மட்டுமல்லாமல், தேசிய விழாக்கள், நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்கவும், பலன் பெறவும் பயன்படுகிறது. சமீபத்தில் நடந்த அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் டெலிவிஷன் பெரும் பணி புரிந்தது. ஜனாதிபதி தேர்தலுக்குப் போட்டியிட்ட இரு அபேட்சகர்களும், தங்கள் கருத்தையும், கொள்கைகளையும் டெலிவிஷன் மூலம் மக்களுக்கு

எடுத்துரைத்தனர். இந்த இரு அபேட்சகர்களும் ஒரு ஸ்டூடியோவில், ஓர் அறையில் உட்கார்ந்து கொண்டு விவாதம் நடத்துவதைத்தான் டெலிவிஷன் மூலமாகக் காட்டுகிறார்கள் என்று நான் நினைத்தேன். ஆனால் உண்மை அதுவல்ல. இருவரும் பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள வெவ்வேறு ஸ்டூடியோக்களில் அமர்ந்து, தங்கள் கருத்துக்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார்கள். டெலிவிஷன் ஏற்பாடுகள் மூலம் இருவரும் ஒரே அறையில் உட்கார்ந்து விவாதிப்பது போல் காட்டப்படுகிறது என்பதைக் கேட்டு நான் மிகவும் ஆச்சரியப்பட்டேன். இந்த அரசியல் நிகழ்ச்சிகள் மட்டுமல்லாமல், குழந்தைகளுக்குத் தேவையான கல்வி நிகழ்ச்சிகளும் டெலிவிஷன் மூலம் காட்டப்படுகின்றன.

இவ்வாறு பயன் படுகின்ற ஓர் அரிய சாதனத்தை நாம் உடனே வரவேற்க வேண்டுமென்ற கருத்துத்தான் பலருக்கும் தோன்றும். ஆனால் இதில் அடங்கியிருக்கும் இன்னொரு உண்மையை ஆராய்ந்தால், நாம் என்ன முடிவுக்கு வருவது என்பதில் நமக்குள் அபிப்பிராய பேதம் ஏற்படலாம்.

நம் நாட்டில் டெலிவிஷன் இல்லாத காரணத்தால் - நான் டெலிவிஷனை அவ்வளவாகப் பார்த்ததில்லை. ஆகவே, நான் லண்டன் நகரை அடைந்ததும், எனது ஓட்டல் அறையில் ஒரு டெலிவிஷன் இயந்திரத்தைப் பொருத்தும்படிக் கேட்டுக் கொண்டேன். எனது அறையில் அதைப் பொருத்த வந்தவர், என்னிடம்பேசிய பேச்சுக்கள் என்னைத் திகைப்பில் ஆழ்த்தின.

'' உங்களுக்கு டெலிவிஷனைப் பார்க்கும் வாய்ப்பு ஏற்படப் போகிறது. இதைப் பார்த்து விட்டு, இது உங்கள் நாட்டில் வராமல் தடுக்கத் தேவையான நடவடிக்கை எடுப்பீர்கள் என்று நம்புகிறேன் '' என்றார் அவர்.

'டெலிவிஷன் வந்த பிறகு கொஞ்ச நஞ்சம் இருந்த குடும்பக் கட்டுப்பாடும் குலைந்து விட்டது. குழந்தைகள் உரிய காலத்தில் தூங்கப் போகாமல், உறக்கத்தைக் கெடுத்துக் கொண்டு, உடலையும் கெடுத்துக்கொண்டு டெலிவிஷனே கதி என்று கிடக்கிறார்கள். அதோடு டெலிவிஷனில் காட்டப்படும் நிகழ்ச்சிகள் பல, குறிப்பாகத் தொடர் கதைகள், குழந்தைகளுக்கு ஏற்றவை அல்ல. பிஞ்சு மனங்களைப் பெருமளவு பாதிக்கக் கூடிய பல காட்சிகள் அதில் காட்டப்படுகின்றன. சினிமா போன்ற காட்சிகளாக இருந்தால், குழந்தைகளை அவற்றிற்குப் போகாமல் தடுக்கலாம். ஆனால் வீட்டிலேயே நடக்கும் காட்சிகளிலிருந்து அவர்களை எப்படித் தடுப்பது ? சிறியவர்களுக்குத்தான் இப்படி என்றால், பெரியவர்களும் வீடே கதி என்று டெலிவிஷன் அருகில் அமர்ந்து, வெளியே கூடச் செல்லாமல், தேக ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொள்கிறார்கள். ஒரு டெலிவிஷன் காட்சி மனத்தைக் கவரக் கூடியதாக இல்லாவிட்டால் கூட, அடுத்ததாவது நல்லது வரும், அல்லது அதற்கடுத்தது சிறப்பாக இருக்கும் என்ற நம்பிக்கையிலேயே



காலத்தை வீணுக்கி வருகிருர்கள். ஒவ்வொரு ஓட்டலிலும் டெலிவிஷனுக்கென்று தனி அறை இருக்கிறது. அதற்கும் சதா கூட்டம்தான்!' டெலிவிஷன் பொருத்த வந்தவரிடமிருந்து அறிந்த விவரங்கள் இவை. எவ்வளவு நல்ல சாதனமாக இருந்தாலும், அதைக் கெட்ட வழியில், மக்களேப் பாதிக்கக் கூடிய முறையில் பயன்படுத்த முடியும் என்பதைத்தான் இது எடுத்துக் காட்டுகிறது. நம் நாட்டில் டெலிவிஷன் வேண்டுமா, வேண்டாமா? உங்களுடைய தீர்ப்பு என்ன?

கலேக்கு அடுத்தபடியாக ஆங்கில மக்களின் பொழுது போக்கு விளேயாட்டுகள், குதிரைப் பந்தயம் ஆகியவைதான். கிரிக்கெட்டுக்கு இங்கிலாந்தில் நல்ல மவுசு உண்டு என்பது அனே வரும் அறிந்த விஷயம்தான். மே மாதம் முதல் செப்டம்பர் முடிய, அங்கு எங்குமே கிரிக்கெட்டுத் தான். அத்துடன் ஹாக்கி, கால் பந்து, டென்னிஸ் முதலியன. விம்பிள்டனும் - அதில் பங்கு கொண்டு முதல் எட்டு ஆட்டக்காரர்களில் ஒருவராக நமது கிருஷ்ணன் வந்ததும் நம் நினேவை விட்டு நீங்கக் கூடிய விஷயம் அல்லவே!

மக்களுடைய வாழ்க்கை இன்பகரமாக அமைவதற்கு நல்ல பொழுது போக்கு எவ்வளவு அவசியம் என்பதை நாம் எல்லோரும் உணரவேண்டும். அப்படிப் பல நல்ல பொழுது போக்குகளில் பங்கு கொள்வதற்கு நம்முடைய குழந்தைகளேச் சிறு வயதிலிருந்தே பழக்கப் படுத்தவேண்டும் சிறந்த பொழுது போக்கில் ஈடுபடும் மனப்பான்மை உள்ளவர்கள்தான் தமக்கிடப்பட்ட பணிகளேயும் சிறப்பாகச் செயலாற்றும் திறன் பெற்றவர்கள் ஆகிருர்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. இத்துறையில் நாம் முன்னேறவேண்டியது எவ்வளவு அவசியம் என்று சொல்லவா வேண்டும்?



முதலாளித்துவ அடிப்படையில் இயங்குகின்ற சமுதாயத்தில், முதலாளிகள் பெரும் பணம் குவிப்பதாகவும், தொழிலாளர்களுடைய வாழ்க்கை தேங்கி நிற்பதாகவும் இருக்கும் என்பது கார்ல்மார்க்ஸின் ஒரு முக்கியமான தத்துவம். ஆனல் இன்று முன்னேற்ற மடைந்துள்ள சமுதாயங்கள், தற்கால தொழில் முறைக்கு இந்தத் தத்துவம் ஒத்ததல்ல என்பதை நிரூபித்துக் காட்டி வருகின்றன. மேற்கத்திய நாடுகளில் சாதாரண மக்களுடைய வாழ்க்கை பெரும் அளவு உயர்ந்திருப்பதே இதற்குச் சான்ருகும். மேற்கத்திய நாடுகளில் போலீஸ் பாது காப்பு சர்க்காராக இருந்த நிலே மாறி, இன்றைக்கு க்ஷேம நல சர்க்கார்களாக விளங்கி வருகின்றன. தற்போது இங்கிலாந்தில் தொழில் வளம், விவசாய வளம் ஏற்பட்டிருக்கிறதென்ருல், இவற்றின் காரணமாக ஏதோ ஒரு சிலர் மட்டும் பெரு வாழ்வு பெற்றிருக்கிருர்கள் என்ற நிலேயில்லாமல், எல்லா மக்களுடைய நிலேயும் உயர்ந்திருக்கிறது என்பதைத்தான் காண்கிருேம். இவ்வாழ்க்கை உயர்வுக்கு சர்க்கார் பல திட்டங்களே



நிறைவேற்றி வருகிறார்கள். தனிப்பட்ட ஸ்தாபனங்களும் இதில் பங்கு கொள்கின்றன. அத்துடன் இரண்டாவது யுத்த காலத்திற்குப் பிற்பாடு, மக்களின் வாழ்க்கைப் பாதுகாப்பிற் காகச் சட்டங்கள் பல நிறைவேற்றப்பட்டிருக்கின்றன.

மேற்கத்திய நாடுகளில் குழந்தைகள் பராமரிப்புக்கு முத லிடம் கொடுக்கிறார்கள். சிசு, கர்ப்பத்தில் இருக்கும்போதே தாய்க்கு நல்ல புஷ்டியான உணவு கிடைப்பதற்காக ஏற்பாடு கள் செய்யப்படுகின்றன. மக்கட் பேறுக்கான மருத்துவ மனை களில் அனைவருக்கும் எளிதில் இடம் கிடைக்கின்றது. பிறந்த குழந்தைக்கும் நல்ல பால், சத்துள்ள வைட்டமின் ஆகியவை கிடைக்கின்றன. இவை தவிர, சேய்நலனுக்காகப் பல ஆரோக் கிய நிலையங்கள் நடைபெற்று வருகின்றன.

நியூகாஸில் என்ற நகரத்தில் அமைக்கப்பட்டிருந்த ஆரோக்கிய நிலையம் ஒன்றிற்குச் சென்று பார்த்தேன். அங்கு குழந்தைகள் வாரத்துக்கு ஒரு முறை கொண்டுவரப்பட்டு, தக்க வைத்தியர்களால் பரிசோதிக்கப்படுகிறார்கள். ஏதாவது நோய் ஏற்படுமேயானால், அதற்கான சிகிச்சை கொடுக்கவும் போதிய வசதி செய்திருக்கிறார்கள். அந்த விடுதியில் இருந்த ஆரோக்கியம் நிறைந்த குழந்தைகளைக் காண்பதற்கே மனத் துக்கு உற்சாகமாகவும், தெம்பாகவும் இருந்தது. குழந்தைப் பருவத்தில் ஆரோக்கியமாக வளர்ந்தால் தானே, பிற்கால வாழ்க்கையும் ஆரோக்கிய முள்ளதாக இருக்கும்?

தாய் தகப்பனற்ற சிறு குழந்தைகளை வளர்ப்பதற்கும் பல நிலையங்களை ஸ்தல ஸ்தாபனங்கள் நடத்தி வருகின்றன. குழந் தைகளை நல்ல முறையில் வளர்க்க முடியாத பெற்றோர்களும், தங்கள் குழந்தைகளை விடுதியில் சேர்த்து விடுகிறார்கள்.

உடல், உளம் வளர்ச்சிக் குறைவான பிற்போக்குக் குழந் தைகளுக்கும் தனி விடுதிகள் நடத்தப்படுகின்றன. அங்கும் குழந்தைகளின் மனோ நிலைக்கும், தேக வளர்ச்சிக்கும் ஏற்பப் பயிற்சிகள் கொடுக்க ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். குழந் தைகளை வளர்ப்பதற்கான வழி வகைகளை வகுக்க இத்துறை யில் நிபுணத்துவம் வாய்ந்த ஆலோசகர்களை இந்நிலையத்துடன் இணைத்திருக்கிறார்கள். இவர்கள் வளர்ந்து பெரியவர்களான வுடன், அவர்களாகவே சம்பாதித்து வாழ்க்கையை நடத்திக் கொள்வதற்கான பயிற்சியும் இங்கு கொடுக்கப் படுகிறது.

பெரியவர்களுக்காக ஏற்படுத்தப் பட்டிருக்கும் சமுதாய நலத் திட்டங்களில் முக்கியமானவை, தேசிய இன்ஷ்யூரன்ஸ் திட்டம். இத்திட்டத்தில் 'இண்டஸ்ட்ரியல் இன்ஜரீஸ் இன்ஷ் யூரன்ஸ்' தேசிய இன்ஷ்யூரன்ஸ், குடும்ப அலவன்ஸ், தேசிய உதவி ஆகிய நான்கு வகை இருக்கின்றன. இதன் மூலமாக எல்லோருமே வாழ்க்கையில் ஓரளவு வசதிகளைப் பெறுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இவற்றில் முக்கியமானது, தேசிய இன்ஷ்யூரன்ஸ் திட்டம். இது இரண்டாவது யுத்த காலத்திற்குப் பின்னர் ஏற்பட்டது.



இந்த இன்ஷ்யூரன்ஸ் தவணைக் கட்டணத்தை மூன்று பிரிவாக்கி இருக்கிறார்கள். ஒன்று, தொழிற்சாலைகளிலோ மற்ற வேறு ஸ்தாபனங்களிலோ வேலைக்கு அமர்ந்து பணியாற்றுபவர்களுக்கு. இவர்கள்தான் பெரும் பகுதியினர். சுமார் இரண்டேகால் கோடி மக்கள் இப்பிரிவில் கட்டணம் செலுத்துகிறார்கள். வாரம் ஒன்றுக்கு பதினெட்டு ஷில்லிங் இரண்டு பென்ஸ் கட்டணம் செலுத்த வேண்டும். பெண்களுக்கு பதினான்கு ஷில்லிங் ஒன்பது பென்ஸ். கட்டணத்தைக் கட்டவேண்டியது வேலைக்கு அமர்த்தியிருப்பவர்களின் பொறுப்பு. இரண்டாவது பகுதியினர் தாங்களாகவே தொழில் நடத்தக்கூடியவர்கள். இவர்களில் ஆண்கள் பன்னிரண்டுஷில்லிங்கும், பெண்கள் பத்து ஷில்லிங்கும் கட்டணம் செலுத்தவேண்டும். இப்பகுதியில் சுமார் பதினைந்து லட்சம் மக்கள் பங்குகொள்கிறார்கள். மூன்றாவது பகுதியினர் வேலையில்லாதிருப்பவர்கள். இவர்களில் ஆண்கள்வாரம்ஒன்றுக்கு ஒன்பது ஷில்லிங் ஏழு பென்ஸும், பெண்கள் ஏழு ஷில்லிங் ஏழு பென்ஸும் கட்டணம் செலுத்துகிறார்கள். வேலையில்லாதவர்கள், அவர்களுக்குக் கொடுக்கப்படும் உதவி நிதியிலிருந்துகட்டணத்தைச்செலுத்துகிறார்கள். இத்திட்டத்தின் கீழ் நோய்வாய்ப் படுகின்ற காலத்திலும் வேலையில்லாதிருக்கும்காலங்களிலும் மக்கட்பேறுகாலத்திலும், விதவைகளாகி விடுகின்ற காலத்திலும் அவரவர்களுடைய தேவையை அனுசரித்து நிதி உதவி கொடுக்கப்படுகின்றது.

ஓய்வு காலப் பென்ஷன் ஆண்களுக்கு அறுபத்தைந்து வயதிற்குப் பிற்பாடும், பெண்களுக்கு அறுபது வயதிற்குப் பிற்பாடும் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு மக்களுடைய வாழ்க்கைக்கான பாதுகாப்புகள் பல, திட்டங்களின் மூலம் கொடுக்கப்படுகின்றன. இதன் காரணமாக, எல்லா மக்களும் வாழ்க்கையின் அத்தியாவசியமான தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது.

முதியோர்களைப் பேணுவதற்காக தனிநிலையங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட சில நிலையங்களுக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். வயது முதிர்ந்தவர்களுக்குத் தேவையான பல வசதிகளுடன் கூடியநிலையங்கள்அவை. டெலிவிஷன்கூட பொருத்தியிருக்கிறார்கள். எழுபது வயதைத்தாண்டியவர்கள்தான்பலர்அங்கே. நூறாண்டுதாண்டியவர்களும் இருந்தார்கள். இவ்வளவு சௌகரியங்கள் இருந்தபோதும்அவர்களைக்காணக்கொஞ்சம்பரிதாபமாகஇருந்தது.



வயதுமுதிர்ந்த கிழவர்கள், கிழவிகளாக ஐம்பது நூறு பேர் ஒரே இடத்தில் வாழ்வது சற்றுக் கடினமான காரியம் தான். தள்ளாத வயதில், அவரவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் பழக்க வழக்கங்களையும், மனப்பான்மைகளையும்சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றிக் கொள்வதென்பது இயலாத காரியம்தான். எனவே பல சமயங்களில் அவர்களுக்குள்இணக்கம்குறைந்து மனக் கசப்பு ஏற்பட்டு விடுகிறது.

இவர்களுக்கெல்லாம், மக்கள் அல்லது சொந்தக்காரர்கள் கிடையாதோ என்று விசாரித்ததில், எல்லோருக்குமே அநேக மாகக் குழந்தைகள், பேரன், பேத்திகள் இருக்கிருர்கள் என்று அறிந்தேன். ஆனல், வயது முதிர்ந்தவர்களைக் குடும் பத்தில் வைத்துக்கொண்டு வாழ, வசதியும் அவகாசமும் இப்போதிருக்கக் கூடிய சமூகச் சூழ்நிலையில் இல்லை. ஆகவே அவர்களை இது போன்ற நிலையங்களுக்கு அனுப்பி வைத்து, அதற்கான கட்டணங்களையும் கூடச் செலுத்தி விடுகிருர்கள். பொருளாதார முன்னேற்றத்தின் காரணமாக ஏற்பட்டிருக்கும் சமூகக் கோளாறுகளில் இது ஒன்று. தாய் தகப்பன்மாரைத் தம்முடன் வைத்துக் கொள்வதை ஒரு பாரமாகக் கருதி, இதைப் போன்ற நிலையங்களுக்கு அனுப்பி விடுகிருர்கள்.

மேற்கத்திய நாட்டு சமுதாயங்களில் ஏற்பட்டிருக்கக் கூடிய முக்கியமான கோளாறு, குடும்ப வாழ்க்கை சில வகை களில் சீரழிந்து விடுவதுதான் என்பதே என் கருத்து. குழந்தை களுக்குக் கூட இதே கதி ஏற்பட்டிருக்கிறது.

வாழ்க்கைக்கான எல்லா வசதிகளையும் பெற வேண்டு மென்ருல், தாய் தகப்பன் இருவருமே தொழில் செய்ய வேண் டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. வீட்டிலேயே குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்கு வேலையாட்களை அமர்த்துவதென்பது முடியாத காரியம். ஆகவே, குழந்தைகளை அவர்களுக்காக ஏற்பட்டிருக்கும் நிலையத்தில் விட்டுச் செல்ல வேண்டியதா கிறது. வேலை முடிந்து குழந்தைகளை வீட்டுக்குக் கூட்டிப்போய் உணவருந்தச் செய்து தூங்க வைக்கத்தான் நேரம் இருக்கிறது.

இதுபோன்ற நிலையங்களில், குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள நல்ல ஏற்பாடுகள் செய்திருந்தபோதிலும்கூட, தாயன்பு பெற்று வளரக் கூடிய வாய்ப்பு குழந்தைகளுக்குக் கிடைப்பதில்லை. இதன் காரணமாகவே, குழந்தைகளுடைய மனே வளர்ச்சியில் பல கோளாறுகள் ஏற்பட்டு வருகின்றன என்று நிபுணர்கள் கருதுகிருர்கள். இக் குறையைப் பிற் காலத்தில் சரி செய்யவும் முடியாது. ஆகவே, இச் சூழ்நிலை யில் வளருகின்ற குழந்தைகளிடத்தில் சில தவருன போக்கு கள் காணப்படுகின்றன. இன்றைய இளைஞர் சமுதாயத்தில் இது ஒரு முக்கியப் பிரச்னையாகத் தென்படுகிறது.

சமுதாய வாழ்க்கை நலனுக்கு அடிப்படையாக உள்ளது, குடும்ப வாழ்க்கை. அது சரியான முறையில் அமையா விட்டால் சமுதாயம் நல்ல முறையில் இயங்குவது முடியாத காரியம். பாட்டன், தகப்பன், மகன் என்கின்ற முறையில் எல்லா வயதுக் கட்டத்தில் உள்ளவர்களும் ஒன்று சேர்ந்து வாழும்போது ஒருவருடைய வாழ்க்கை அனுபவம், மற்றவர் களுக்குப் பயன்படுகிறது. பெரியவர்களுடைய வாழ்க்கை, சிறியவர்களுக்கு வழி காட்டுகிறது. சிறியவர்கள் பெரியவர் களுடைய வாழ்க்கைக்கு இன்பமளிக்கிருர்கள். இந்த முறை யில் ஒன்றுக் கொன்று இணைந்து, வாழ்க்கையில் இன்பத்தைப்



பெறுகிறார்கள். அவ்வாறில்லாது, குடும்பம் பிரிக்கப்பட்டு முதியவர்கள் தனியாகவும், தாய், தகப்பன்மார்கள் தனித்தும், குழந்தைகள் வேறாகவும் வாழ்கின்ற சூழ்நிலை மனித வாழ்க்கைக்கு உபயோகமுள்ளதாகவும், இன்பமுள்ளதாகவும் அமைய முடியாது. இந்தக் குடும்பச் சீர்குலைவு ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், தொழில் வளர்ச்சியும் பொருளாதார வளர்ச்சியும்தான். வேலை செய்யத் திறம் படைத்தவர்கள் எல்லோருமே தொழில் செய்ய வேண்டுமென்கிற ஒரு நிலை ஏற்படும்போது, ஒன்றுபட்ட குடும்பமாக இயங்கக்கூடிய சூழ்நிலை மாறிவிடுகிறது. இது நமக்கு ஒரு பெரும் படிப்பினையாக இருக்க வேண்டும். பொருளாதாரத் துறையில் நம் நாடு வளர வேண்டும் என்று நாம் திட்டங்கள் வகுக்கும்போது, நம்து குடும்ப அமைப்புக்கள் சீர் குலைந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

இரண்டாவது யுத்த காலத்திற்குப்பின் மக்களுக்கான வீட்டு வசதிகளை ஏற்பாடு செய்வதில் பெரும் கவனம் செலுத்தி வருகிறார்கள். சில தொழில் நக்ரங்களில் தொழிலாளர்கள் வாழ்ந்து வந்த பழைய வீடுகளைச் சென்று பார்த்தேன். நம் நாடுகளில் இருக்கக்கூடிய வீடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, அவை ஓரளவு நல்ல முறையில் அமைந்திருந்தாலும் கூட, குளிர் அதிகமாக இருக்கக்கூடிய நாடானதால் அவ் வீடுகள் போதுமான வசதி அற்றதாகவே இருந்தன. தற்போது இந்தப் பழைய வீடுகளையெல்லாம் அழித்து விட்டு, புதிய வீடுகள் கட்டும் திட்டங்களைப் பரவலாக எல்லா நகரங்களிலுமே மேற்கொண்டிருக்கிறார்கள். இந்தப் பொறுப்பை நகர கௌன்ஸில்களே ஏற்றுக் கொண்டிருக்கின்றன. அதற்கான நிதி உதவியை சர்க்காரிடமிருந்தோ, நிதி உதவும் ஸ்தாபனங்களிடமிருந்தோ பெறுகிறார்கள்.

இரண்டாவது யுத்த காலத்தில் முக்கிய தொழில் நகரங்களெல்லாம் பகைவரின் குண்டு வீச்சு மூலம் பெரிதும் பாதிக்கப் பட்டன. தொழிற்சாலைகள் அழிந்ததோடல்லாமல், குடியிருக்கின்ற பகுதிகளும் நாசமாயின. ஆனால் இது ஒரு விஷயத்தில் நன்மையாகவே முடிந்திருக்கிறது. அழிந்த பகுதிகளில் நல்ல முறையில் திட்டமிட்டு, புதிய கட்டடங்களைக் கட்டும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. தொழிலாளர்கள் வசிப்பதற்குப் பெரும்பாலும் பத்துக்கு மேற்பட்ட மாடிகள் கொண்ட கட்டடங்களைக் கட்டி வருகிறார்கள். இரண்டு மூன்று படுக்கை அறை வசதிகள், சாப்பிடத் தனி அறை, குளியலறை, வெந்நீர்க் குழாய் போன்ற பல வசதிகளுடன் கட்டடங்கள் அமைக்கப் பட்டு வருகின்றன. நம் நாட்டில் மத்தியதர வகுப்புக்காரர்கள், ஏன், பணக்காரர்கள் கூட இவ்வளவு சௌகரியமாக வாழ்கிறார்களா என்பது சந்தேகம்தான்.

நகரங்களை நிர்மாணிப்பதில் கூட இப்போதெல்லாம் ஒரு புதிய அமைப்பைச் சில இடங்களில் மேற்கொள்கிறார்கள்.



இங்கிலாந்து தேசம், முடியாட்சிக்குப் பெயர் பெற்றது. மன்னர்களின் எழில் மிகு மாளிகைகள் இன்றும் மக்கள் மனத்தைக் கவருகின்றன. பதினைன்காம் நூற்றுண்டுக் காலத்து 'வின்ட்சர்' மாளிகை'யின் அழகிய முழுத் தோற்றம்.

- லண்டன்மாநகரத்து வானத் தோற்றம்.
- கப்பல் கட்டும் தொழிலில் இங்கிலாந்து பிரசித்தி பெற்றது. சிட்னி துறைமுகத்தில் 'ஓரியாணு' என்கிற ஆங்கிலக் கப்பல் நிற்பதைக் காணலாம்.



கடைவீதியை நகரத்திற்கு மத்தியில்அமைக்கிறார்கள். அங்கு எந்த விதமான வாகனங்களும் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. தூரத்திலேயே வாகனங்களை நிறுத்திவிட்டு, நடந்து சென்று — சில சமயம் அரை மைல் ஒரு மைல் கூட நடக்க வேண்டியிருக்கும் — சாமான்கள் வாங்குகிறார்கள்.

இந்த முறைக்கு முதலில் கொஞ்சம் எதிர்ப்பு இருந்தது. ஆனால் இது மிகவும் சௌகரியமான முறை என்பதை இப்போது எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். இந்த முறையை குடியிருப்புப் பகுதிகளுக்கும் கூட இப்போது புகுத்துகிறார்கள்.

புதிய முறையில் அமைக்கப்படும் குடியிருப்புப் பகுதிக்குள் கார் போன்ற வாகனங்கள் செல்ல முடியாது. நடை பாதைகள் மட்டும் தான் அமைக்கப்படுகின்றன. கார்களெல்லாம் வெளியே நிறுத்தப்படுகின்றன. இதன் மூலம், குழந்தைகளுக்கு ஒரு புதிய சுதந்திரம் ஏற்படுகிறது. வேகமாகச் செல்லும் வாகனங்களின் பயமில்லாமல், குழந்தைகள் நடமாடுகின்றன. சாலைகள் அமைக்கக் கூடிய செலவும் மிச்சமாகிறது. இதனால் வசதிக் குறைவு ஏற்படவில்லை என்றும் எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள். நாமும் கூட நகரங்களின் புதிய குடியிருப்பு வசதிகள் கட்டும்போது, இந்த ஏற்பாட்டை மேற்கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

**வளமையில் வறுமை**

இந்தியாவிலிருந்து மேல் நாடுகளுக்குச் செல்லும் ஒவ்வொருவருடைய மனத்தையும் வெகுவாகக் கவரக்கூடியது, அங்கு காணப்படும் பொருள் வளம்தான். சாதாரணமாக எல்லா மக்களுமே நல்ல வசதிகளுடன் வாழக்கூடிய ஒரு நிலைமையை நாம் அங்கு பார்க்க முடிகிறது. அதை எடுத்துக் காட்டும் முறையில்தான், பல்வேறு பொருள்களை விற்கும் கடைகளும் அங்கு அமைந்திருக்கின்றன. எங்கு நோக்கினும் கடைகள், கடைகள் தான்! குடியிருப்புக்கென்று குறிப்பாக ஒதுக்கப்பட்டுள்ள ஒரு சில இடங்களைத் தவிர, அநேகமாக கட்டடங்களின் கீழ்த் தளங்களிலெல்லாம் கடைகள் தான் காணப்படும். ஒவ்வொரு கடையிலும் வெவ்வேறு வித, வெவ்வேறு ரகப் பொருள்கள் பெருமளவில் வைக்கப்பட்டிருக்கின்றன. அத்தனை கடைகளும் வியாபாரத்திற்காகத்தானே வைக்கப்பட்டிருக்க முடியும்! ஆகவே, வியாபாரமும் அங்கு பெருமளவில் விரிவடைந்திருக்கிறது என்று நம்மால் உணர முடிகிறது. வியாபாரம் அந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறதென்று சொன்னால், மக்களுக்கு அந்த அளவுக்கு வாங்கும் சக்தியும் இருந்தாக வேண்டும். இல்லையென்றால், வியாபாரப் பொருள்கள் தேங்கி அல்லவா போய் விடும்! இதுதான் மேலை நாடுகளில் இன்றையப் பெரும் தொழில் அமைப்பின் அடிப்படை!

பெருமளவில் பொருள்களை உற்பத்தி செய்வதன் அடிப்படையில் தான் பெரும் தொழில்கள் அமைய முடியும். உதாரணமாக, இங்கிலாந்தில் இன்றைக்கு மோட்டார் கார் உற்

பத்தித் தொழிலில்,வருடமொன்றுக்கு சுமார் பதினைன்றரை லட்சத்துக்கு மேற்பட்ட கார்கள் உற்பத்தியாகின்றன. இந்தத் தொழில் தொடர்ந்து நடைபெற வேண்டுமென்று சொன்னால், உற்பத்தியாகின்ற கார்கள் அனைத்தும் விற்ருக வேண்டும். ஓரளவுதான் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாக முடியும். மிகுதி யனைத்தும் உள் நாட்டிலேயே செலவாக வேண்டும். ஆகவே, உள் நாட்டில் மக்களுக்கு வருடமொன்றுக்குக் குறைந்தது ஐந் தாறு லட்சம் புதுக் கார்கள் வாங்கும் சக்தி யிருந்தால்தான், இத் தொழில் தொடர்ந்து நடைபெற முடியும். அதே முறை யில்தான், மற்றப் பொருள்களுடைய உற்பத்தியும்.

ஆகவே, பெரும் தொழில்கள் இயங்க வேண்டுமென்று சொன்னால், அது பொது மக்களுடைய வாழ்க்கைத்தர உயர் வின் அடிப்படையில்தான் அமைய முடியும் என்கின்ற உண்மை யைக் காண்கிறோம். இந்த உண்மையைத்தான், கார்ல்மார்க்ஸ் அன்று தனது சித்தாந்தத்தை எழுதிய சமயத்தில், உணர முடிய வில்லை. ஏனென்ருல், அன்றிருந்த தொழில் அமைப்பின் நிலை முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அன்றைக்கு உற்பத்தி ஒரு சிலருக்காகத்தான் ஏற்பட்டிருந்தது. ஆனால் இன்றைக்கு ஒரு சிலருக்காகவென்று தொழில் வளம் ஏற்பட முடியாது. பொது மக்களின் வாழ்க்கைத்தரம் மேல் நாடுகளில் உயர்ந்திருப்பதற்கு முக்கிய காரணம், இந்த அடிப்படை யான பெரும் தொழில் தத்துவம்தான். இன்னும் தொழில் வளர்ச்சி அதிகமாகப் பெருக வேண்டுமென்று சொன்னால், அந்த அளவுக்குப் பொதுவாக மக்களுடைய வாழ்க்கைத் தர மும் உயர்ந்து கொண்டே போக வேண்டும்.

லண்டன் மாநகரில் பிரக்யாதி பெற்ற பல கடைகள் அமைந்திருக்கின்றன. சிலவற்றிற்குள் சென்று அங்கிருக்கக் கூடிய பொருள்களை யெல்லாம் காண்பதென்ருல், பல நாட்கள் பிடிக்கும். ஒவ்வொரு கடையினரும் ஒவ்வொரு பொருளை விற்பதில் விசேஷத் தேர்ச்சி பெற்றிருக்கிருர்கள்.

தொழில்கள் தொடர்ந்து நடைபெற வேண்டு மென்ருல் உற்பத்தியாகும் பொருள்கள் எல்லாம் விற்ருக வேண்டு மல்லவா ? அதற்காகக் கையாளப்படும் முறை விளம்பரம் தான் ! எங்கு பார்த்தாலும் விளம்பர மயமாகத்தான் காட்சி அளிக்கும். வீதிகளிலே விளம்பரம், பத்திரிகைகளிலே விளம் பரம், சினிமாவிலே விளம்பரம், ரேடியோவிலே விளம்பரம், டெலிவிஷனில் விளம்பரம் ! இப்படிப் பல்வேறு பொருள் களைப் பற்றிய பல்வேறு வகையான விளம்பரங்களை, மக்கள் மனத்தைக் கவர்வதற்காக ஏற்பாடு செய்கிருர்கள்.

அங்கெல்லாம் கடைகளுக்குச் சென்ருல் மட்டும்தான் பொருள்களைப் பார்க்கலாம் என்றில்லை. சாதாரணமாக வீதிகளில் செல்லும்போதே இப்பொருள்கள் கண்ணைக் கவரும் முறையில் கண்ணுடிப் பலகைக்குப் பின்னுல் கண்காட்சியாக வைக்கப்பட்டிருக்கின்றன. இதன் காரணமாகப் பொது

மக்களிடையே, தாம் பார்க்கின்ற வெவ்வேறு பொருள்களை வாங்க வேண்டும் என்கின்ற ஆசை ஏற்படுகிறது. சாதாரண மக்களுக்கு விலை உயர்ந்த பொருள்களை வாங்கக் கூடிய சக்தி இல்லை. ஆகவே தீராத ஆசை ஏற்பட்டு, அது மக்கள் மனத்தை உறுத்திக் கொண்டே இருக்கிறது.

வாழ்க்கைக்கு அத்தியாவசியமான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய வாய்ப்பைப் பெற்றிருந்தாலும், இத் தீராத ஆசையின் காரணமாக வாழ்க்கையில் அதிருப்தி தோன்றுகிறது. பணக்காரர்களாக இருந்தாலும்கூட எல்லாப் பொருள்களையும் வாங்கக்கூடிய சக்தி யாருக்கும் கிடையாது. ஆகவே, அவர்கள் மனத்திலும் இந்தத் தீராத ஆசை குடிகொள்கிறது. அவர்களிடத்திலும் அது ஓயாத அதிருப்தியை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறது. இச் சூழ்நிலையினுல்தான் வளமையில் வறுமையைக் காண்கிறோம். மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்யத் தொழில்வளம் தேவைப்படுகிறது ; தொழில்வளம் பெருக மக்களிடையே ஆசையைத் தூண்ட வேண்டியிருக்கிறது ; அதன் காரணமாகத் தீர்க்க முடியாத ஆசைகள் பெருகுகின்றன ; அதன் விளைவு, வாழ்க்கையில் அதிருப்தி. இதுதான் நாம் அங்கு காணும் வாழ்க்கைச் சுழல் !

இதிலிருந்து தப்ப வழி உண்டா ?

இத்துறையில் இந்தியாதான் மேல் நாடுகளுக்கு வழி காட்ட வாய்ப்புள்ளது. வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்று முயலும்போதே, நம்முடைய ஆசைகளையும் கட்டுப்படுத்த வேண்டுமென்பது நம் முன்னோர்களின் சித்தாந்தம். வறுமையிலும் செம்மையாக வாழவேண்டுமென்பதுதான் இந்திய மக்களின் குறிக்கோள். பொருள் வளத்தின் மூலமாக நல்ல வாழ்க்கை வளம் ஏற்பட வேண்டுமானுல், அப்போதும் இந்த அருள் வழியைக் கடைப் பிடித்தே ஆக வேண்டும் என்பதை இன்றைய மேனுட்டுப் பொருளாதார நிலையும், வாழ்க்கையும் நமக்கு வலியுறுத்திக் காட்டுகின்றன.

இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு திருவள்ளுவர் ‘பொருள் இலார்க்கு இவ் வுலகில்லை, அருளிலார்க்கு அவ்வுலகில்லை’ என்கின்ற அரிய வாக்கை அருளியிருக்கிறுர். ஆனுல், இன்றைக்கு அதைக் கொஞ்சம் மாற்றி ‘பொருள் இலார்க்கு இவ்வுலகில்லை என்பது உண்மைதான்; ஆனுல் அருளிலார்க்கு இவ்வுலகும் இல்லை, அவ்வுலகும் இல்லை’ என்றுதான் சொல்ல வேண்டும். நம் நாட்டில் இன்று ஏற்பட வேண்டியது பொருள் வளம். அதை அடைய, மேலை நாடுகளில் தொழில்வளம் எந்த அடிப்படையில் வளர்ந்திருக்கிறது என்பதை நாம் ஆராய்ந்து அறிவது அவசியம்.

முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு மேலை நாடுகளெல்லாம் நம்மைவிடத் தாழ்வான நிலையில்தான் இருந்தனவென்பது சரித்திரம்கண்ட உண்மை. இருப்பினும், இன்று பொருள் வளத்தில் மேலை நாடுகள் நம்மை விடப் பன்மடங்கு உயர்ந்து



பத்தித் தொழிலில், வருடமொன்றுக்கு சுமார் பதினைன்றரை லட்சத்துக்கு மேற்பட்ட கார்கள் உற்பத்தியாகின்றன. இந்தத் தொழில் தொடர்ந்து நடைபெற வேண்டுமென்று சொன்னால், உற்பத்தியாகின்ற கார்கள் அனைத்தும் விற்பனையாக வேண்டும். ஓரளவுதான் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாக முடியும். மிகுதியனைத்தும் உள் நாட்டிலேயே செலவாக வேண்டும். ஆகவே, உள் நாட்டில் மக்களுக்கு வருடமொன்றுக்குக் குறைந்தது ஐந்தாறு லட்சம் புதுக் கார்கள் வாங்கும் சக்தி யிருந்தால்தான், இத் தொழில் தொடர்ந்து நடைபெற முடியும். அதே முறையில்தான், மற்றப் பொருள்களுடைய உற்பத்தியும்.

ஆகவே, பெரும் தொழில்கள் இயங்க வேண்டுமென்று சொன்னால், அது பொது மக்களுடைய வாழ்க்கைத்தர உயர்வின் அடிப்படையில்தான் அமைய முடியும் என்கின்ற உண்மையைக் காண்கிறோம். இந்த உண்மையைத்தான், கார்ல்மார்க்ஸ் அன்று தனது சித்தாந்தத்தை எழுதிய சமயத்தில், உணர முடியவில்லை. ஏனென்றால், அன்றிருந்த தொழில் அமைப்பின் நிலை முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அன்றைக்கு உற்பத்தி ஒரு சிலருக்காகத்தான் ஏற்பட்டிருந்தது. ஆனால் இன்றைக்கு ஒரு சிலருக்காகவென்று தொழில் வளம் ஏற்பட முடியாது. பொது மக்களின் வாழ்க்கைத்தரம் மேல் நாடுகளில் உயர்ந்திருப்பதற்கு முக்கிய காரணம், இந்த அடிப்படையான பெரும் தொழில் தத்துவம்தான். இன்னும் தொழில் வளர்ச்சி அதிகமாகப் பெருக வேண்டுமென்று சொன்னால், அந்த அளவுக்குப் பொதுவாக மக்களுடைய வாழ்க்கைத் தரமும் உயர்ந்து கொண்டே போக வேண்டும்.

லண்டன் மாநகரில் பிரக்யாதி பெற்ற பல கடைகள் அமைந்திருக்கின்றன. சிலவற்றிற்குள் சென்று அங்கிருக்கக் கூடிய பொருள்களை யெல்லாம் காண்பதென்றால், பல நாட்கள் பிடிக்கும். ஒவ்வொரு கடையினரும் ஒவ்வொரு பொருளை விற்பதில் விசேஷத் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள்.

தொழில்கள் தொடர்ந்து நடைபெற வேண்டு மென்றால் உற்பத்தியாகும் பொருள்கள் எல்லாம் விற்பனையாக வேண்டுமல்லவா? அதற்காகக் கையாளப்படும் முறை விளம்பரம்தான்! எங்கு பார்த்தாலும் விளம்பர மயமாகத்தான் காட்சி அளிக்கும். வீதிகளிலே விளம்பரம், பத்திரிகைகளிலே விளம்பரம், சினிமாவிலே விளம்பரம், ரேடியோவிலே விளம்பரம், டெலிவிஷனில் விளம்பரம்! இப்படிப் பல்வேறு பொருள்களைப் பற்றிய பல்வேறு வகையான விளம்பரங்களை, மக்கள் மனத்தைக் கவர்வதற்காக ஏற்பாடு செய்கிறார்கள்.

அங்கெல்லாம் கடைகளுக்குச் சென்றால் மட்டும்தான் பொருள்களைப் பார்க்கலாம் என்றில்லை. சாதாரணமாக வீதிகளில் செல்லும்போதே இப்பொருள்கள் கண்ணைக் கவரும் முறையில் கண்ணாடிப் பலகைக்குப் பின்னால் கண்காட்சியாக வைக்கப்பட்டிருக்கின்றன. இதன் காரணமாகப் பொது

மக்களிடையே, தாம் பார்க்கின்ற வெவ்வேறு பொருள்களை வாங்க வேண்டும் என்கின்ற ஆசை ஏற்படுகிறது. சாதாரண மக்களுக்கு விலை உயர்ந்த பொருள்களை வாங்கக் கூடிய சக்தி இல்லை. ஆகவே தீராத ஆசை ஏற்பட்டு, அது மக்கள் மனத்தை உறுத்திக் கொண்டே இருக்கிறது.

வாழ்க்கைக்கு அத்தியாவசியமான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய வாய்ப்பைப் பெற்றிருந்தாலும், இத் தீராத ஆசையின் காரணமாக வாழ்க்கையில் அதிருப்தி தோன்று கிறது. பணக்காரர்களாக இருந்தாலும்கூட எல்லாப் பொருள் களையும் வாங்கக்கூடிய சக்தி யாருக்கும் கிடையாது. ஆகவே, அவர்கள் மனத்திலும் இந்தத் தீராத ஆசை குடிகொள்கிறது. அவர்களிடத்திலும் அது ஓயாத அதிருப்தியை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறது. இச் சூழ்நிலையினுல்தான் வளமையில் வறுமையைக் காண்கிறோம். மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்யத் தொழில்வளம் தேவைப்படுகிறது ; தொழில்வளம் பெருக மக்களிடையே ஆசையைத் தூண்ட வேண்டியிருக் கிறது ; அதன் காரணமாகத் தீர்க்க முடியாத ஆசைகள் பெருகுகின்றன ; அதன் விளைவு, வாழ்க்கையில் அதிருப்தி. இதுதான் நாம் அங்கு காணும் வாழ்க்கைச் சுழல் !

இதிலிருந்து தப்ப வழி உண்டா ?

இத்துறையில் இந்தியாதான் மேல் நாடுகளுக்கு வழி காட்ட வாய்ப்புள்ளது. வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்று முயலும்போதே, நம்முடைய ஆசைகளையும் கட்டுப்படுத்த வேண்டுமென்பது நம் முன்னோர்களின் சித்தாந் தம். வறுமையிலும் செம்மையாக வாழவேண்டுமென்பது தான் இந்திய மக்களின் குறிக்கோள். பொருள் வளத்தின் மூலமாக நல்ல வாழ்க்கை வளம் ஏற்பட வேண்டுமானுல், அப் போதும் இந்த அருள் வழியைக் கடைப் பிடித்தே ஆக வேண் டும் என்பதை இன்றைய மேனுட்டுப் பொருளாதார நிலையும், வாழ்க்கையும் நமக்கு வலியுறுத்திக் காட்டுகின்றன.

இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு திரு வள்ளுவர் ' பொருள் இலார்க்கு இவ் வுலகில்லை, அரு ளிலார்க்கு அவ்வுலகில்லை ' என்கின்ற அரிய வாக்கை அருளி யிருக்கிறார். ஆனுல், இன்றைக்கு அதைக் கொஞ்சம் மாற்றி ' பொருள் இலார்க்கு இவ்வுலகில்லை என்பது உண்மைதான்; ஆனுல் அருளிலார்க்கு இவ்வுலகும் இல்லை, அவ்வுலகும் இல்லை' என்றுதான் சொல்ல வேண்டும். நம் நாட்டில் இன்று ஏற்பட வேண்டியது பொருள் வளம். அதை அடைய, மேலை நாடுகளில் தொழில்வளம் எந்த அடிப்படையில் வளர்ந்திருக்கிறது என் பதை நாம் ஆராய்ந்து அறிவது அவசியம்.

முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு மேலை நாடுகளெல்லாம் நம்மைவிடத் தாழ்வான நிலையில்தான் இருந்தனவென்பது சரித்திரம்கண்ட உண்மை. இருப்பினும், இன்று பொருள் வளத்தில் மேலை நாடுகள் நம்மை விடப் பன்மடங்கு உயர்ந்து



விளங்குகின்றன. நம் நாட்டில் மக்களின் சராசரி வருட வருமானம் ரூபாய் முந்நூறு அளவில் தான் இருக்கிறது. மேலை நாடுகளில் நாலாயிரம், ஐயாயிரம் ரூபாயாக உள்ளது. அமெரிக்காவில் பத்தாயிரம் ரூபாய் அளவில் இருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். இந்த வளர்ச்சி ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், விஞ்ஞான அறிவை அடிப்படையாகக் கொண்ட தொழில் வளர்ச்சிதான் !

வெறும் தொழில் நுட்ப அறிவு மட்டும் இருந்தால் போதாது. அத்துடன் கடும் உழைப்பும் சேர்ந்தால்தான் பயன் ஏற்படும் என்பதை மேலை நாடுகளின் தொழில் வளர்ச்சி வரலாறு நமக்கு வலியுறுத்திக் காட்டுகிறது. ஆம் ! வாழ்க்கை வளம் உயர்ந்திருக்கக் கூடிய நிலையிலும், மேலைநாட்டு மக்கள் மிகக் கடுமையாக உழைக்கிறார்கள். தொழிலாளர்கள் மட்டுமல்ல, அனைவருமேதான் !

வேலை செய்கின்ற நேரத்தில் ஏற்றுக்கொண்டிருக்கும் பணியைச் சிறப்புடன், சிரத்தையுடன், சீராக முடிக்க வேண்டும் என்கின்ற உணர்ச்சி மக்களின் மனத்தில் வேரூன்றி இருந்தால்தான், வாழ்க்கை வளத்தை எல்லா மக்களும் அடையக் கூடிய முறையில் பெருக்க முடியும். அப்பேர்ப்பட்ட சூழ்நிலை இருக்கக்கூடிய நாடுகளில்தான், தொழில்வளமும்பெருகி இருக்கிறது என்பதைக் காண்கிறோம். நம் நாட்டிலும் இவ்வாறு கடுமையாக உழைக்க வேண்டும் என்கிற உணர்ச்சி மக்களிடையே பரவ வேண்டியது மிகவும் அவசியம். ஆனால் நம் நாட்டிலோ? இன்றைக்கு எல்லா வகுப்பினருமே உழைக்காமல் பெருவாழ்வு வாழ வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

முதலாளிகள் குறைந்த முதலை வைத்துக் கொண்டு குறைந்த உழைப்பிலேயே பெரிய அளவு லாபத்தை அடைய முயலுகிறார்கள். தொழிலாளர்களும் அப்படித்தான் ; குறைந்த உழைப்பு, அதிக ஊதியம் என்ற மனப்பான்மை தான்! இளைஞர்களுடைய மனத்தையும் இந்த எண்ணம் பீடித்துள்ளது. படிக்காமலேயே பரீட்சையில் தேற வேண்டுமென்ற அவா எழுகிறது. இந்தப் பயங்கரமான சூழ்நிலையைத் தகர்த்தெறிந்தால் தான், எத்துறையிலும் நாம் முன்னேற முடியும்.

மேல் நாடுகளில் நான் கண்ட இன்னொரு முக்கியமான விஷயம், வேலை நேரங்கள். காலை ஒன்பது மணிக்குள் அநேகமாக எல்லாக் காரியாலயங்களுமே ஆரம்பித்து விடுகின்றன. காலை வேளைதான் உழைப்பதற்கு உகந்த நேரம் என்று குளிர்ந்த பிரதேசமான அத் தேசத்தவர்களே உணரும்போது, உஷ்ணப் பிரதேசத்தில் வாழும் நாம், பதினொரு மணிக்கு மேலும், நன்கு உணவருந்திவிட்டு, களைப்பு மேலிட காரியாலயத்திற்குப் போகிறோம்.



வேலை நேரத்தை அதிகாலையில் நிர்ணயிப்பதன் மூலமாகத் தான், நம்முடைய உழைக்கும் திறனைப் பெருக்கிக் கொள்ள முடியும் என்பது என்னுடைய உறுதியான கருத்து. இதற்குப்

பொருள் வசதியோ, அந்நிய மூலதன உதவியோ தேவை யில்லை. இந்தச் சிறு மாறுதலைச் செய்து கொள்வதன் மூலமாக நம் சக்தியைப் பெருமளவில் பெருக்குவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்திக் கொள்கிறோம். அதற்கு நம்முடைய பழக்க வழக் கத்தைச் சற்று மாற்றிக் கொள்ளவேண்டும், அவ்வளவுதான்!

நம்முடைய முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கின்ற பழக்கங்களைக் கூடக் கைவிடத் தயாராக இல்லையென்று சொன் ஞல், முன்னேற்றத்தை அடைவது எப்படி? புதுமையைக் காண்பது எப்படி?

**மக்கள் பண்பாடு**

பரம்பரையாக சட்டத்திற்கும் ஒழுங்கிற்கும் கட்டுப் பட்டு நடப்பதில் தொன்றுதொட்டு பிரசித்தி பெற்றவர்கள் பிரிட்டிஷ் மக்கள். அத்துடன், சம்பிரதாயங்களுக்கும் மதிப் புக் கொடுப்பவர்கள். இன்று பிரிட்டிஷ் சமுதாயத்தில் புரட்சி கரமான மாறுதல்கள் பல ஏற்பட்டிருந்தாலும், அங்கு முடி யாட்சி தான் நடைபெற்று வருகிறது.

இன்றைய சூழ்நிலையில் சட்ட பூர்வமான அதிகாரம் பார்லிமெண்டுக்கும், மந்திரி சபைக்கும்தான் உள்ளது என்று சொன்னுலும், மன்னருக்கு பிரிட்டிஷார் தனிப்பட்ட மரியாதை கொடுக்கிருர்கள். நடக்கும் சர்க்கார் 'மாட்சிமை தங்கிய மன்னரின் சர்க்கார்' என்றுதான் சொல்லப்படுகிறது. ஏன், எதிர்க்கட்சியும்கூட 'மாட்சிமை தங்கிய மன்னரின் எதிர்க் கட்சி' தான்! நம் நாட்டுக் கோயில்களில் இருக்கக்கூடியமூர்த்தி களின் பெயரில்தான் அனைத்தும் நடைபெறுவதுபோல், அங்கு மன்னரின் பெயரில்தான் எல்லாம் நடைபெறுகின்றன. நாம் கடவுளுக்குக் கொடுக்கும் மரியாதையும், பக்தியும் பிரிட்டிஷ் மக்கள் அரசியலில் மன்னருக்குக் கொடுக்கிருர்கள். மன்னரின் பரம்பரை பாத்தியதையும், ஆண்கள் இல்லாத காலத்தில் பெண்களுக்குப் போகிறது. இந்த அடிப்படையில்தான், முத லாம் எலிசபெத், விக்டோரியா மகாராணி, இரண்டாவது எலிசபெத் ராணி ஆகிய மூன்று ராணிகளை இங்கிலாந்து அடைந்தது. மக்களுக்கு மட்டும் அல்லாமல், மன்னர்களுக்கும், ராணிகளுக்கும் கூடச் சம்பிரதாயங்களை அனுஷ்டிக்க வேண் டிய கடமை உண்டு. அதை எதிர்க்கவேண்டிய கட்டாயத்தால், எட்டாம் எட்வர்ட் முடி துறக்க நேர்ந்த சம்பவம் அனைவரும் அறிந்ததே. சமீப காலத்தில் மார்கரெட் இளவரசியும் சம்பிர தாயத்தை மீற முடியாத காரணத்தால்தான், தான் முதலில் காதலித்தவரை மணக்க முடியாமல் போய் விட்டது.

அரச குடும்பங்கள் வாழும் அரண்மனைகள் ஆடம்பரங்க ளுடன்தான் விளங்குகின்றன. லண்டனில் அமைந்துள்ள பக் கிங்ஹாம் அரண்மனையில் பாதுகாப்பு வீரர்கள் நிற்பதைப் பார்ப்பதே ஒரு அலாதிக் காட்சி. வெளிநாட்டிலிருந்து வரக் கூடியவர்கள் எல்லாம், அரண்மனை வாசலில் காவலர் மாறக் கூடிய காட்சியை வெகு ஆவலுடன் சென்று பார்க்கின்றனர்.



மக்கள் சட்டத்தை அனுசரித்து வாழ்க்கை நடத்துவதற்குப் பாதுகாப்பாக இருக்கக்கூடியவை, கோர்ட்டுகளும், போலீசும் தான்! அங்கிருக்கக்கூடிய கோர்ட்டுகளிலேயே தலைமையாக இருப்பது, 'ஹவுஸ் ஆப் லார்ட்ஸ்' தான்! ஆனால் இந்த முழு சபையும் தற்போது நீதி நிர்வாகத்தில் ஈடுபடுவதில்லை. சட்ட நிபுணத்துவம் வாய்ந்த, **'லா லார்ட்ஸ்'** என்று சொல்லக் கூடிய பிரபுக்கள் அங்கம் வகித்து, அப்பீல் கோர்ட்டாக இயங்குகிறார்கள். அதற்குக் கீழ் இருக்கக்கூடியவர்கள் 'ஹைகோர்ட்' என்று சொல்லக்கூடிய உயர் நீதிமன்றத்தைச் சேர்ந்தவர்கள்.

ஒவ்வொரு ஆண்டும் கோடைகால விடுமுறைக்குப் பின் இந்த உயர் நீதிமன்றங்கள் வேலை துவங்க ஒரு விழா நடத்துகிறார்கள். நான் இங்கிலாந்தில் இருக்கும்போது அக்டோபர் நான்காம் தேதியன்று இந் நிகழ்ச்சி நடைபெற்றது. நீதி நிர்வாகத்திற்கு மந்திரி சபையில் பொறுப்பு ஏற்பவர் **'லார்ட் சான்ஸ்லர்'** என்று அழைக்கப்படுகிறார். அவர் எப்போதுமே பிரபுக்கள் சபையில் அங்கம் வகித்து, அச்சபைக்கு அக்கிராசனராகவும் அமைகிறார். தற்போது கில்மர் பிரபு, லார்ட் சான்ஸ்லராகப் பணியாற்றுகிறார்.

இந்த நீதி மன்றத் துவக்க விழாவுக்கு வரவேண்டுமென்று என்னை விசேஷ விருந்தினராக அழைத்திருந்தார்கள். இவ் விழா 'வெஸ்ட் மினிஸ்டர் அபே' என்ற பிரசித்தி பெற்ற மாதா கோயிலில் நடைபெறுகிறது. விழா ஆரம்பத்தில் மாதா கோயிலைச்சேர்ந்த குருமார்கள் அணிவகுத்து வருகிறார்கள். அதன் பின்னர் லார்ட் சான்ஸ்லர் தலைமையில் நீதிபதிகள் அணிவகுத்து வருகிறார்கள். கடைசியாக பிரசித்திபெற்ற வழக்கறிஞர்கள் வரிசையாக வருகிறார்கள். அப்போது மாதா கோயில் ஆர்க்கெஸ்ட்ரா கம்பீரமாக வாசிக்கப்படுகிறது. அங்கு வருகின்ற விருந்தினர்களுக்குத் தனியாக இடம் அமைக்கப் பட்டிருக்கின்றது. குருமார்கள், நீதிபதிகள், வழக்கறிஞர்கள் ஆகியோர் அமர்வதற்கும் ஆசனங்கள் போடப்பட்டிருக்கின்றன. அனைவரும் உரிய இடத்திற்குப் போய் அமர்ந்தவுடன், பிரதம குரு பிரார்த்தனையை ஆரம்பிக்கிறார். எல்லோரும் எழுந்து நின்று பிரார்த்தனையில் கலந்து கொள்ள வேண்டும். பைபிளிலிருந்தும், மற்ற கிறிஸ்தவ மத நூல்களிலிருந்தும் சில பகுதிகள் படிக்கப்படுகின்றன. கடைசியாக நீதிபதிகள் எல்லோரும் 'பாரபட்சமில்லாது, தெய்வ சாட்சியாக மக்களுக்கு நீதி வழங்குவோம்' என்று பிரதிக்ஞை எடுத்துக்கொள்கிறார்கள். இதைத் தொடர்ந்து, ஹவுஸ் ஆப் லார்ட்ஸ் மண்டபத்தில், லார்ட் சான்ஸ்லர் ஒரு விருந்து அளிக்கிறார். அதில் கலந்து கொள்ளக்கூடிய வாய்ப்பும் எனக்குக் கிட்டியது.

லார்ட் சான்ஸ்லர் என்னை அன்புடன் வரவேற்றார். அவர் அன்று காலைதான் நைஜீரியாவின் சுதந்திர விழாவில் பங்கெடுத்துக் கொண்டு, இங்கிலாந்து திரும்பியிருந்தார். நைஜீரியாவின் சுதந்திர விழா பற்றியும், அங்குள்ள மக்களின் உற்சாகத்தைப்

பற்றியும் விரிவாகக் கூறினார். நானும் 1947 ம் ஆண்டு ஆகஸ்ட் 15ம் தேதி நடைபெற்ற நமது முதல் சுதந்திர தின விழாவைப் பற்றி விளக்கமாக அவருக்குக் கூறினேன்.

தங்கள் ஆட்சிக்குக் கீழ் இருக்கக்கூடிய பல நாடுகள் சுதந்திரம் பெற்றதைப் பற்றித் தாங்கள் பெருமை கொள்ளுவதாகவும், சுதந்திரம் பெற்ற பின் நல்ல முறையில் அந்நாடுகள் அபிவிருத்தி அடைந்து வருவதைப் பார்த்துத் தான் மிகவும் மகிழ்ச்சி அடைவதாகவும் அவர் கூறினார். ஆப்பிரிக்காவில் சில நாடுகள், மற்ற ஐரோப்பிய நாடுகளிடமிருந்து சுதந்திரம் பெற்ற பின் பெரும் குழப்ப நிலையில் இருப்பதைப் பற்றிப் பேசிக்கொண்டோம். மற்ற நாடுகளை அடிமைப்படுத்தி ஆட்சி புரிந்து வந்தாலும் கூட, பிரிட்டிஷார் அந்நாட்டு மக்களுக்கு ஓரளவு கல்வி அறிவு கொடுத்தும், சீரான நிர்வாக இயந்திரத்தை அமைத்துக் கொடுத்தும், அத்துடன் அரசியலில் ஈடுபடாது தனித்து இயங்குகின்ற பலம் பொருந்திய ராணுவத்தை ஏற்பாடு செய்து கொடுத்திருப்பதன் மூலம், சுதந்திரம் பெற்ற பின் ஒவ்வொரு நாளும் முன்னேற்றப் பாதையில் செல்லக் கூடிய வழியை வகுத்தும் கொடுத்துள்ளதற்காக நாங்கள் பிரிட்டிஷாருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம் என்று நான் சொன்னபோது, அவருடைய முகமும், உடன் இருந்த ஏனையோருடைய முகமும் மலரக் கண்டேன்.

உயர்நீதி மன்றங்களுக்குக் கீழ் ஒவ்வொரு வட்டாரத்திலும் இயங்கக்கூடிய கோர்ட்டுகள் இருக்கின்றன. நம் நாட்டில் இருப்பதுபோல் கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளும் அங்கு பெருமளவில் பணியாற்றுகிறார்கள். சிறிய கிரிமினல் குற்றங்களை அவர்களே விசாரித்துத் தீர்ப்பளிக்கின்றனர்.

கௌரவ மாஜிஸ்ட்ரேட் கோர்ட் ஒன்றுக்குச் சென்று, சில வழக்கு விசாரணைகளைக் கவனித்தேன். நான் சென்ற சமயம் சில இளைஞர்கள் விசாரிக்கப்பட்டுக் கொண்டிருந்தார்கள். எல்லோருமே தாங்கள் செய்த குற்றங்களை ஒப்புக்கொண்டார்கள். திருடிய குற்றம், ஒருவருடன் ஒருவர் சண்டை போட்டுக் கொண்ட குற்றம் என்பன போன்றவைதான் அங்கு பெரும்பாலும் விசாரிக்கப்பட்டன. நான் சென்ற அன்று, கடைசியாக, 'குடிவெறியில் இருக்கும்போது கார் ஓட்டினார்' என்பதற்காக ஒரு டாக்டர் விசாரிக்கப்பட்டார்.

அந்த டாக்டர், தான் குற்றமே செய்யவில்லை என்று வக்கீல் வைத்து வாதாடினார். 'காரை ஓட்டிக்கொண்டு போகும்போது கார் தாறுமாறாக ஓடிற்று' என்று பலர் கோர்ட் முன் சாட்சிகொடுத்தார்கள். டாக்டரோ, தான் குடித்திருந்தாலும் கூட, தனக்குப் போதையில்லை யென்றும், கார் ஒழுங்காக ஓடாததற்குக் காரணம், தனக்கு இருக்கக்கூடிய ஒரு நோய் என்றும் எதிர்வழக்காடினார். சட்டம் தெரிந்தவன் என்ற முறையில், இந்த வழக்கில் குற்றம் ருஜுவானதாகத்தான் எனக்குத் தோன்றியது.

தீர்ப்பு பின்னுல் சொல்வதாக ஒத்தி வைத்தார்கள். இந்தத் தீர்ப்பு சொன்னவுடன் எனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டேன். பின்னுல் நான் அறிந்தது, குடி போதையால் கார் ஓட்டிய குற்றம் ஏற்படவில்லை யென்றும், ஆனுல் ஒழுங்கற்ற முறையில் கார் ஓட்டியது குற்றம் ஏற்படுத்துகிறதென்றும் தீர்ப்பு சொன்னுர்களாம்! இந்தத் தீர்ப்பைப் பற்றி பின்னுல் ஒரு பத்திரிகையிலும் குறிப்பு ஒன்று வெளியாகி யிருந்தது.

'கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகள் இதைப் போன்ற வழக்குகளை விசாரிக்கும்போது, தாங்களும் கூட ஏதாவது ஒரு சமயத்தில் இத்தகைய ஒரு குற்றத்திற்காகக் கோர்ட் முன் கொண்டு வரப்படலாம் என்ற கருத்துடன் இருக்கிருர்கள். ஆகவே தான், பெரும்பாலும் இதைப்போன்ற குற்றங்களுக்குத் தண்டனை கொடுப்பதில்லை' என்று எழுதி யிருந்தார்கள்.

ஆம்! நீதிபதியாக இருந்தாலும் கூட, தங்களுடைய சூழ்நிலை, மனப்பான்மை, விருப்பு, வெறுப்பு ஆகியவை நீதி வழங்குவதில் புகுந்து விடுகிறது என்பதை அங்கும் கண்டேன்.

மக்கள் சட்டத்தை மீறி நடக்காமல் பார்த்துக்கொள்வது போலீஸ் இலாகாவின் பொறுப்பு. இங்கிலாந்தில் போலீஸ் படையினர் பொதுவாக சர்க்காரின் கீழ் இல்லை. ஒவ்வொரு வட்டார சபையும் தங்களுக்கு வேண்டிய போலீஸ் படையை, தாங்களே ஏற்பாடு செய்து கொள்கிருர்கள். போலீஸ் நிர்வாகமும், அந்த கௌன்ஸிலின் பொறுப்பில் தான் இருக்கிறது. லண்டன் நகர போலீசார் மிகவும் திறமை பெற்றவர்கள். சாதாரணமாக ஆறடி உயரத்துக்கு மேற்பட்டவர்கள் தான் அப்படையில் சேர்க்கப் படுகின்றனர்.

போலீஸ்காரர்கள் எப்போதுமே சாதாரண மக்களுக்கு நண்பர்களாகவும், குற்றம் புரிபவர்களுக்குப் பெரும் பகைவர்களாகவும் காட்சி அளிக்கிருர்கள். இந்தச் சித்தாந்த அடிப்படையில்தான் அவர்கள் பணி புரிகிருர்கள்.

இவ்வாறு சட்டங்களின் அடிப்படையில் வாழ்க்கை கட்டுப்பாடுடன் நடக்கிறது. அதற்கும் மேலாக அவர்களாகவே அமைத்துக் கொள்கின்ற ஒரு கட்டுப்பாடும் தான், பிரிட்டிஷ் மக்களுடைய வாழ்க்கைக்கு ஆக்கம் அளிக்கின்றது என்பதை இங்கிலாந்தில் கண்டேன்.



வீதிகளில் நடந்து செல்வதிலும் அங்கு ஒரு ஒழுங்கு முறையைக் காணலாம். தெருக்களில் எச்சில் துப்புதலைக் காணவே முடியாது! நான் அங்கிருந்த நான்கு வாரங்களில் ஒருவர் கூட இந்தக் கட்டுப்பாட்டை மீறிக் காணவில்லை. நம் நாட்டில் இந்தக் கெட்ட பழக்கம் பெரிய அளவில் இருந்து வருகிறது. ரயில் பெட்டியில் சாதாரணமாக எச்சில் துப்பி விடுகிருர்கள். பிளாட்பாரங்களில் இந்தப் பழக்கம் சர்வ சாதாரணமாகி விட்டது. ரோடுகளிலும், மற்ற இடங்களிலும் இந்தப் பழக்கத்தைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. இன்றைக்கு

முன்னேற்ற மடைந்துவரும் எல்லா நாடுகளிலும், இந்தப் பழக்கம் அடியோடு ஒழிக்கப்பட்டு வருவதைக் காண்கிறோம். சமீபத்தில் சைனா சென்று வந்த ஒரு நண்பர் கூட, சைனாவில் இந்தக் கெட்ட பழக்கம் கிடையாது என்பதை ஒரு பத்திரிகை வாயிலாகச் சுட்டிக் காட்டினார். இந்தக் கெட்ட பழக்கத்தை நாம் எப்படியும் போக்கிக் கொள்ள வேண்டும். இதைச் சட்டம் போட்டுத் தடுக்க முடியுமா ? ஒரு சமயம் குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த நல்ல பழக்கத்தை ஏற்படுத்தினால்தான் இது சாத்தியமாகுமோ என்னவோ ?

பெண்களுக்கு மதிப்புக் கொடுத்தல், மக்களை மரியாதையுடன் நடத்தல் ஆகிய பழக்கங்களையும் பிரிட்டிஷாரிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். வேலைக்காரனை 'டா' போட்டு அழைக்கும் பழக்கம் நம்மிடமிருந்து அகல வேண்டும். மனிதனை மனிதனாக மதிக்கும் மாண்பை, ஒரு பண்பாகவே கொண்டு வாழ்கிறார்கள் அவர்கள். இது அவர்களிடமிருந்து நாம்கற்றுக்கொள்ளவேண்டியஇன்னொருமுக்கியமானவிஷயம்!

லண்டனி
இந்தியர்க

மனித சமுதாய வரலாற்றில், பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியா விடுதலை பெற்றது முக்கிய இடம் பெறும் என்பதில் ஐயமில்லை. இதற்கு முன்பும் அடிமைத் தளையிலிருந்து பல நாடுகள் விடுதலை பெற்றிருக்கின்றன. இருப்பினும், சுதந்திரம் பெற இந்தியா அனுஷ்டித்த முறைகளால் தான், உலக சரித்திரத்திலேயே ஒரு புதுமையாக, இரு சாராருடைய உடன்பாட்டுடனும் இந்திய நாட்டில் சுதந்திர அரசாங்கம் நிறுவப்பட்டது. இதன் காரணமாக, இங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும் இடையே யிருந்த மனக் கசப்புகள் நீங்கி, இன்றைக்கு இரு நாடுகளுக்கிடையேயும் உறுதியான உறவு நிலவி வருவதைக் காண முடிகிறது.

பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் இருந்த ஆங்கிலேயர்களின் எண்ணிக்கையைவிட, இன்று இந்தியாவில் பல மடங்கு அதிகமான ஆங்கிலேயர்கள் பணியாற்றி வருகின்றார்கள். முன்போல சர்க்கார் உத்தியோகங்களில் இருப்பதற்குப் பதிலாக, நாட்டின் பல்வேறு முன்னேற்ற திட்டங்களில் — வர்த்தகத் துறை — கல்வித் துறை — தொழில் துறை — போன்ற பல ஆக்க வேலைகளில் அவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இதே காட்சியைத் தான் இங்கிலாந்திலும் நாம் காண முடிகிறது. இன்று இங்கிலாந்திலே பல்லாயிரக் கணக்கான இந்தியர்கள் வாழ்ந்து வருகிறார்கள். கல்வியும், தொழிற் பயிற்சியும் பெறச் செல்பவர்கள் ஒருபுறம் இருக்க, இங்கிலாந்திலேயே நிரந்தரமாகத் தங்கி வாழ்ந்து வரும் இந்தியர்களின் எண்ணிக்கையும் பெருமளவு பெருகியிருக்கிறது. லண்டன்மா நகரைச் சுற்றி வரப் புறப்படுவோமேயானால், பல்வேறு இடங்களிலே இந்திய மக்களைக் காண முடியும். சில சமயங்களில் நாம் நம் நாட்டிலேயே இருக்கின்றோமோ என்ற உணர்ச்சியும் கூட மனத்தில்



தோன்றுகிறது. லண்டன்மாநகரில் மட்டுமல்ல, நான் சென்ற ஒவ்வொரு பெரிய நகரத்திலும் - இந்திய மாணவர்கள், இந்தியத்தொழிலாளர்கள், இந்திய டாக்டர்கள் என்று பல்வேறு துறையில் பணியாற்றும் இந்தியர்களைச் சந்தித்தேன்.

சுதந்திரம் பெற்ற பின்னும் நாம் பிரிட்டிஷாருடன் இருக்கக் கூடிய தொடர்பை முழுவதும் கத்தரித்துக் கொள்ளாமல், காமன்வெல்த்தில் தொடர்ந்து இருந்து வருகிறோம். இதன் காரணமாக, உலக அரங்கில் நாம் ஆற்றக்கூடிய பணி ஓரளவு சிறப்புறுவதுடன், இங்கிலாந்தில் வாழும் இந்தியர்களுக்கு காமன்வெல்த் குடி மக்கள் என்ற காரணத்தினால் பல உரிமைகள், வசதிகள் கிடைக்கின்றன. அதிகார பூர்வமாக இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள தொடர்பைக் கண்காணிப்பதற்காக ஹைகமிஷன் காரியாலயம் ஒன்று லண்டனில் அமைக்கப்பட்டிருப்பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயம்தான்.

ஒவ்வொரு நாட்டிற்கும் நமது உறவை வலியுறுத்தத் தூதுவர்களை (Ambassadors) அனுப்புகிறோம். அதற்கான காரியாலயங்களும் அமைக்கப்படுகின்றன. காமன்வெல்த் நாடுகளுக்கு அனுப்பப்படும் தூதுவர்களுக்கு ஹைகமிஷனர் என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஹை கமிஷனர்தான் இங்கிலாந்தின் தூதுவர்.

இங்கிலாந்தில் தற்போது இந்திய ஹைகமிஷனராக இருந்து வருபவர், திருமதி விஜயலட்சுமி பண்டிட் அவர்கள் தான். இவர் பாரதப் பெண்மணிகளில் பெரும் புகழ் பெற்றவர். நம்முடைய பிரதமரின் சகோதரி என்கிற முறையில் மட்டுமல்லாது, அவருக்கே உரிய தனித்திறமை, பண்பு இவற்றின் காரணமாக, ஐக்கிய நாட்டுப் பொதுச் சபையின் தலைவராகவும் இருந்து இந்தியாவுக்குப் பெருமை தேடித் தந்தவர் இவர். நான் இங்கிலாந்து சென்றபோது, அவர் இந்தியாவுக்கு வந்திருந்தார். ஆகவே, அவரை இங்கிலாந்தில் சந்திக்க எனக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. அப்போது டிபுடி ஹைகமிஷனர் திரு ஹுசேன் அவர்கள்தான் தாற்காலிக ஹைகமிஷனராகப் பணியாற்றி வந்தார். அவருடைய இல்லத்தில் எனக்காக ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார். பல பிரிட்டிஷ் பிரமுகர்கள் அவ் விருந்துக்கு வந்திருந்தார்கள். அதில் முக்கியமாக என்னுடைய கவனத்தைக் கவர்ந்தவர் இங்கிலாந்தில் புகழ்பெற்ற பத்திரிகையான 'எகானமிஸ்ட்' (The Economist) என்ற பத்திரிகையின் ஆசிரியர் திரு டொனால்ட் டயர்மேன் (Mr. Donald Tyerman) அவர்கள்தான். இந்தியாவில் முன்பு பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் பணியாற்றிய சில கவர்னர்களும், ஐ.ஸி.எஸ். அதிகாரிகளும் கூட விருந்துக்கு வந்திருந்தார்கள்.

இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குச் செல்லும் மாணவர்களுக்குப் பல ஆண்டுகளாக உதவி செய்து வரும் ஸ்தாபனம் ஒய். எம். ஸி. ஏ. இவர்கள் லண்டனில் ஒரு பெரிய கட்டடம் அமைத்து, அங்கு செல்லும் மாணவர்களுக்கு, முதலில் ஆறு

மாதங்களுக்கு அங்கு தங்க வசதி செய்து கொடுக்கிறார்கள். இக்காலத்திற்குள்ளாக வேறு வசதியான இடங்கள் பார்த்துக் கொள்வதற்கு இது மிகவும் அனுகூலமாக இருக்கிறது. தற்போது இந்த ஸ்தாபனத்திற்கு காரியதரிசியாக இருந்து நற்பணியாற்றி வருபவர், திரு மலையபெருமாள் என்பவர். அவர் ஒய். எம். ஸி. ஏ. இந்தியப் பகுதிக்கு முன்பு காரியதரிசியாக இருந்தவர். இந்த ஸ்தாபனத்திலும் எனக்காக ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார்கள். பல இந்தியப் பிரமுகர்களும், மாணவர்களும் இதில் பங்கெடுத்துக் கொண்டனர். விருந்திற்குப் பின்பு, நம் நாட்டில் ஏற்பட்டு வரும் முன்னேற்றங்களைப் பற்றியும், முக்கியப் பிரச்னைகளைப்பற்றியும் பேசும்படி என்னைக் கேட்டுக்கொண்டார்கள். நம் நாட்டு இளைஞர்கள் ஏற்கவேண்டிய பொறுப்பை வலியுறுத்தி அங்கு பேசினேன். அதிலும் முக்கியமாக வெளிநாடுகளுக்குச் சென்று பயிற்சி பெறுகின்றவர்கள் திரும்பவும் தாய் நாடு வந்து, நாட்டுப் பணியில் ஈடுபடவேண்டும் என்பதைப்பற்றி எடுத்துக் கூறினேன். ஏனென்றால், இன்று இது ஒரு முககியப் பிரச்னையாக அமைந்துள்ளது.

வெளி நாடுகளுக்குச் சென்ற நம் நாட்டு இளைஞர்கள் பலர், தாய் நாடு திரும்பத் தயங்குகின்றார்கள். வெளி நாடுகளிலே உயர்ந்த சம்பளத்துடன் வேலை வாய்ப்புகள் அவர்களுக்கு இருக்கின்றன. அதை விட்டு, வறுமையில் ஆழ்ந்திருக்கும் நம் நாட்டுக்கு வந்து, குறைந்த ஊதியத்தில் பணியாற்ற வேண்டுமென்று சொன்னால், அதற்கு ஓரளவு நாட்டுப்பற்றும், தியாக உணர்ச்சியும் அவசியம் தான்!

இன்றைக்குப் பல இந்திய நிபுணர்கள் வெளி நாடுகளில் பல துறைகளில் பணியாற்றி வருகிறார்கள். இங்கோ நாம் வெளி நாட்டு நிபுணர்களை நம்முடைய உதவிக்கு அழைக்கிறோம். அவர்களும் சிறிது காலம் இங்கிருந்து விட்டுத் திரும்பி விடுகின்றனர். ஆகையினால் நல்ல பலன் நமக்குக் கிடைக்காமலும் போய் விடுகின்றது. வெளிநாடு செல்கின்ற நம் இளைஞர்கள் எல்லோரும் நம் நாட்டுக்குத் திரும்பி வந்து, தங்களுடைய அறிவையும், திறமையையும் நாட்டிற்குப் பயன் படும் வகையில் பணியாற்றுவது மிகவும் அவசியம்.

அன்று ஒய். எம். ஸி. ஏ. வில் என்னுடைய பேச்சுக்குப் பின், கேள்விகள் கேட்பதற்கு வாய்ப்பளிக்கப்பட்டது. இந்தியாவைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டார்கள். ஐந்தாண்டுத் திட்டம், நம்முடைய தொழிற் கொள்கை, அரசியல் நிகழ்ச்சிகள் இவைபற்றியெல்லாம் போட்டிபோட்டுக்கொண்டு கேள்விகள் கேட்டார்கள். அவர்கள் உற்சாகத்தைக் கண்டு, எனக்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்வதில் உற்சாகம் ஏற்பட்டது.

தற்போதிருக்கும் ஒய். எம். ஸி. ஏ. கட்டடத்தில் ஒரு சிலருக்குத்தான் இட வசதி அளிக்க முடிகிறது. இட வசதியைப் பெருக்கத் திட்டமிட்டு, புதிய கட்டடங்கள் கட்ட ஏற்பாடு செய்து வருகிறார்கள். இத்திட்டம் வெகு விரைவில் நிறை

வேறி, இந்திய மாணவர்களுக்கும், இங்கிலாந்து செல்லும் இந்திய மக்களுக்கும் இந்த ஸ்தாபனம் நற்பணியாற்றி வரும் என திடமாக நம்புகிறேன்.

இந்திய வர்த்தக சங்கம் ஒன்று லண்டனில் இயங்கி வருகிறது. பல இந்திய வர்த்தகப் பிரமுகர்களை அங்கு சந்திக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அங்கும் இந்தியப் பிரச்னைகளைப் பற்றிப் பேச ஏற்பாடு செய்திருந்தார்கள்.

நம் நாட்டு முன்னேற்றத் திட்டங்களுக்கு அவசியமான அந்நிய நாட்டுச் செலாவணியைப் பெற்றுக் கொள்வதற்கு, நம் நாட்டு ஏற்றுமதி வர்த்தகத்தை விரிவு படுத்திக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். ஆனல், நம் நாட்டு வர்த்தகர்கள் சிலர், நாணயமற்ற முறையில் நடந்து கொள்வதைப்பற்றி அங்கு குறிப்பிட்டார்கள். 'இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்களின் தரம் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. பல சமயங்களில் கலப்படம் செய்து விடுகிருர்கள். ஆகவே, இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்வதென்ருல் தயக்கமாக இருக்கிறது' என்று கூறிஞர்கள். இதைப்பற்றி வர்த்தக சங்கத்தில் குறிப்பிட்டு, நாம் நாணயமாக நம்முடைய வர்த்தகத்தை நடத்துவதற்கும், மற்ற நாடுகளில் நம்மைப்பற்றி நல்லெண்ணத்தையும், நம்பிக்கையையும் ஏற்படுத்துவதற்கும், வர்த்தக சங்கங்கள் பணியாற்றவேண்டிய அவசியத்தை நான் அன்றையப் பேச்சில் வற்புறுத்தினேன்.

இந்தியா சோஷல் சங்கத்தில் அக்டோபர் மூன்ரும் தேதியன்று ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார்கள். அனுப்பப்பட்டிருந்த அழைப்பிதழில் ' தீபாவளி விருந்து ' என்று கண்டிருந்தது. வருடத்திற் கொருமுறை இந்தத் தீபாவளி விருந்து ஏற்பாடு செய்வது வழக்கமாம். நான் அங்கு சென்றிருந்ததையொட்டி, தீபாவளி தினத்தையே மாற்றி வைத்துவிட்டார்கள். நான் பேசும்போது இதைக் குறிப்பிட்டு, 'இந்தியாவிலெல்லாம் அமாவாசையை ஒட்டி தீபாவளி கொண்டாடப்படுகிறது. ஆனல் இங்கு பௌர்ணமியை ஒட்டி இந்த விருந்தை ஏற்பாடு செய்திருப்பதும் ஒருவிதத்தில் பொருந்தும். தீபங்களைக் கொண்டு அலங்கரிப்பதற்குப் பதிலாக, இயற்கைச் சந்திரனே ஒளி கொடுத்துச் சிறப்பாக, செலவில்லாமல் அலங்கரித்து விடுகிருன்' என்றேன். அங்கிருக்கும் மக்கள் நம் நாட்டுப் பண்டிகைகளை மறந்து விடாது கொண்டாடி வருவது மிகவும் பாராட்டத் தக்கதுதான்.



நாங்கள் லண்டனில் இருக்கும்போது, எங்களுக்குப்பெரும் உதவியாக இருந்தவர் திரு கே. எம். நஞ்சப்பா அவர்கள். நம் நாட்டு பிரதம தளபதியாக இருந்த திரு கரியப்பா அவர்களின் இளைய சகோதரர் இவர். சென்னையில் அவரைப் பலரும் அறிந்திருப்பார்கள். ஸ்டேட் பாங்க் காரியதரிசியாகப் பலகாலம் பணியாற்றி இருக்கிருர். தற்போது அவர் லண்டனிலுள்ள இந்தியன் ஸ்டேட் பாங்க் ஸ்தாபனத்திற்கு மானேஜராகப்

பணியாற்றி வருகிறார். அவர் எங்களுக்குச் சௌகரியங்கள் செய்து கொடுத்தது மட்டுமல்ல, லண்டன் செல்கிற பல்வேறு இந்தியர்களுக்கும் பெரும் சேவை செய்து வருகிறார் என்பதைக் கேட்டு, பெருமகிழ்ச்சி அடைந்தேன். அவர் எடுத்துக்கொண்ட முயற்சியின் காரணமாக, எங்களுடைய சுற்றுப் பிரயாணம் வெகு இனிமையாக முடிவடைந்தது.

நியூகாஸில் நகரத்திற்குச் சென்றிருந்தபோது அங்கிருக்கும் இந்திய மாணவர்களைச் சந்திக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்திய மாணவர்கள் சங்கம் ஒன்று அங்கு நடைபெற்று வருகிறது. அதன் சார்பில் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப் பட்டது. விடுமுறை காலமானதால் இருபது இருபத்தைந்து மாணவர்களே அப்போது அங்கு இருந்தனர். இந்தியாவின் பல பகுதிகளிலிருந்து வந்திருந்த இளைஞர்களைச் சந்தித்து, அவர்களுடன் அளவளாவிக் கொண்டிருந்தேன். விஞ்ஞானத் துறையிலும், தொழிற் துறையிலும் பயிற்சி பெற்று வரும் அந்த இளைஞர்களின் உற்சாகத்தையும், ஊக்கத்தையும் கண்டு எனக்கே ஒரு புதிய நம்பிக்கை ஏற்பட்டது.

எடின்பரோ நகருக்குச் சென்றிருந்தபோதும், இந்திய மாணவர்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. எடின்பரோவில் முக்கியமாக வைத்தியத் துறைப் பயிற்சிக்காகச் சென்றிருப்பவர்கள்தான் பெரும்பாலோர். நம் நாட்டில் படித்து வைத்தியப் பட்டம் பெற்ற பின்னர், ஒரு சில முக்கிய பகுதிகளில் விசேஷ பயிற்சி பெறுவதற்காக அங்கு சென்றிருக்கிறார்கள். பயிற்சி பெறுகின்ற காலத்திலேயே இவர்களில் பலருக்கு அங்கிருக்கும் ஆசுபத்திரிகளில் சம்பளத்துடன் வேலையும் கிடைக்கின்றது என்று குறிப்பிட்டார்கள். பொதுவாக இந்திய டாக்டர்களுக்கு இங்கிலாந்திலே நல்ல கிராக்கி இருக்கின்றது என்று கேள்விப்பட்டேன். பல இந்திய டாக்டர்கள் ஸ்திரமாக இங்கிலாந்திலேயே நல்ல வருவாய் பெற்று வாழ்ந்து வருகிறார்கள் என்றும் அறிந்தேன்.

கிளாஸ்கோ நகரிலும் இந்திய மாணவர்களும், பெருமளவில் இந்தியத் தொழிலாளர்களும் வாழ்ந்து வருகின்றனர். திரு வரதாச்சாரியார் (இவர் தற்போது மதுரை தியாகராய கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றி வருகிறார்) அவர்களின் மகன், திரு கோபாலகிருஷ்ணனை கிளாஸ்கோவில் சந்தித்தேன். அவர் என்னை வெகு உற்சாகத்துடன் வரவேற்று, அவர் பயிற்சி பெற்று வருகின்ற கிளாஸ்கோ சர்வகலாசாலைக்கும் அழைத்துச் சென்று காண்பித்தார். அங்கு புதிதாக மாணவ சங்கத்திற்காகக் கட்டப்பட்டிருக்கும் கட்டடத்தைக் காண்பித்தார். பல அடுக்குகள் கொண்ட மாளிகை அது. எல்லா நவீன வசதிகளையும் கொண்டு, மாணவர்களின் சௌகரியத்திற்காக இயங்கி வருகின்றது. விளையாட மைதானங்கள், நடன கூடங்கள், சிற்றுண்டிச்சாலை வசதிகள், நூல் நிலைய வசதிகள் என்று பற்பல! மாணவர்களுடைய வசதிகள்



எந்த அளவுக்குக் கவனிக்கப்படுகின்றன என்பதற்கு, இக் கட்டடங்கள் ஓர் எடுத்துக்காட்டாக இருந்தன.

எனது இங்கிலாந்து சுற்றுப் பிரயாணத்தின்போது, இந்திய சகோதர சகோதரிகளைக் காணுவதிலேயே ஒரு தனி மகிழ்ச்சி இருந்தது. அவர்கள் எல்லோரும், அதிலும் முக்கியமாக இளைஞர்கள், நம் நாட்டு முன்னேற்றப் பணிகளில் ஈடுபடுவதற்கான பயிற்சி பெற்று வருகிறார்கள் என்பதைக் காணும்போது, இந்தியாவினுடைய எதிர் காலத்தைப் பற்றிய புதிய நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. ஆனால், இங்கிலாந்திற்குப் போய் பயிற்சி பெற விரும்பும் இளைஞர்களுக்கு ஒன்று சொல்ல வேண்டியது மிகவும் அவசியம். தற்போது சாதாரண பட்டப் படிப்புக்காக வெளிநாடு செல்ல வேண்டிய அவசியமே கிடையாது. அங்கு செல்வதனால் வீண் செலவுதான் ஆகிறது. நம் நாட்டில் பட்டப் படிப்பை முடித்துக் கொண்டு, இங்கு வசதி இல்லாத சில விசேஷப் பயிற்சிகளுக்காக மட்டுமே வெளி நாடு செல்வதுதான் சிறந்தது. நம் மாணவர்களை வெளி நாடுகளுக்கு அனுப்பும்போது இவ் விஷயத்தை நாம் மனத்தில் கொள்வது மிகவும் அவசியம்.

நான்கு வாரங்கள் இங்கிலாந்தின் பல பகுதிகளுக்குச் சென்று, பல காட்சிகளைக் கண்டு, பல்வேறு தரப்பட்ட மக்களுடன் பழகி, இங்கிலாந்தைப்பற்றி ஓரளவு தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டது, வாழ்க்கையிலேயே எனக்கு நல்லதொரு அனுபவமாக இருந்தது. இந்தக் குறுகிய காலத்தில் இங்கிலாந்தில் உள்ள எல்லாப் பகுதிகளையும் கண்டறிவதென்பது இயலாத காரியம். பல ஆண்டுகள் இருந்தாலும் கூட அதைச் செய்து முடிக்க முடியாது. இருப்பினும், கிடைத்த அவகாசத்தை எந்த அளவுக்கு அதிகமாகப் பயன் படுத்திக் கொள்ள முடியுமோ, அந்த முறையில் எங்கள் பிரயாணத் திட்டத்தை காமன்வெல்த் உறவுஇலாகா ஏற்பாடு செய்திருந்தது. ஒவ்வொரு இடத்திலும் அரசாங்க அதிகாரிகள் எங்களை வரவேற்று, வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்கள். பல இடங்களில் அரசாங்க மரியாதையுடன் வரவேற்பும் வழியனுப்பும் நடைபெற்றன. எல்லாவற்றிற்கும் மேலாக, பிரிட்டிஷ் மக்களுடைய நல்லெண்ணமும், பரந்த மனப்பான்மையுமே என் மனத்தை வெகுவாகக் கவர்ந்தன.

நம் நாட்டிலே நடைபெற வேண்டிய பல முன்னேற்றத் திட்டங்கள் எந்த முறையில் அமைய வேண்டும், எவை எவை தவிர்க்கப்பட வேண்டும் என்கிற பெரும் படிப்பினை எனக்குக் கிடைத்தது. இப்படி இங்கிலாந்து சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு, அக்டோபர் ஐந்தாம் தேதி யன்று இங்கிலாந்திலிருந்து ஸ்வீடன் நாட்டிற்கு விமானம் மூலமாகப் புறப்பட்டேன்.




இங்கிலாந்து போன்ற நாடுகளில் ஒரு நாளையப் பருவ நிலையை இன்னொரு நாள் காண்பதரிது. அடிக்கடி மாறிக் கொண்டே தான் இருக்கும். சாதாரணமாக மக்கள் சந்திக்கும்போது கூட, முதற் பேச்சு பருவ நிலையைப் பற்றியதாகத் தான் இருக்கும். பருவநிலை மாறுதலை மகளிர் மனத்திற்கு ஒத்திட்டு வேடிக்கையாகச் சொல்வது, அம் மக்களின் மரபு.

அதிர்ஷ்டவசமாக நாங்கள் இங்கிலாந்தில் இருக்கின்ற வரை பெரும்பான்மையான தினங்கள் மழையில்லாது, வெயில் அடித்துக் கொண்டிருக்கும் நிலையில்தான் இருந்தது. நான்கு வாரங்களில் மூன்று நாட்கள்தான் மழையினால் பாதிக்கப்பட்டோம். இவ்வாறு நேருவது மிகவும் அரிது என்றார்கள்! ஆனால் இங்கிலாந்திலிருந்து புறப்பட்டவுடன் இந்த அதிர்ஷ்டம் ஓரளவு மாறி விட்டது. ஸ்வீடன் போய்ச் சேரும்வரை வழியெல்லாம் ஒரே மழைதான் ! ஸ்வீடனில் இறங்கும்போதும், மப்பும் மந்தாரமுமான சூழ்நிலையில் நல்ல குளிர் காற்று அடித்துக் கொண்டிருந்தது.

ஸ்வீடன் இங்கிலாந்தைவிட பூமியின் வட கோடியில் இருக்கிறது. வட துருவம்தான் பூமியின் கடைசி வடக்கு எல்லை. அந்த இடத்தில் பகல் ஆறு மாதமாகவும், இரவு ஆறு மாதமாகவும் இருக்கும். வட துருவத்திலிருந்து கீழே வர வர நிலைமை சிறிது சிறிதாக மாறிக் கொண்டே வருகிறது. ஸ்வீடனில் கோடை காலத்தில், அதாவது ஜூன், ஜூலை மாதங்களில் இரவு என்று சொல்லக் கூடியது இரண்டு மணி நேரம் தான் ! இரவு பன்னிரண்டு மணிக்குக்கூட மாலை நேரம் போல் தான் தோற்றம் அளிக்கும். இரவில் தூங்குவதென்றால் அறை முழுவதும் திரை போட்டு இருட்டாக்கிக் கொள்ள வேண்டும். ஸ்வீடனுக்கு அருகே உள்ள நார்வேயில் ஓரிடத்தில் நள்ளிரவில் சூரியனைக் காணலாம். அதற்கு 'நள்ளிரவு சூரியப் பிரதேசம்' (Land of the Mid-night sun) என்று பெயரிடப்பட்டுள்ளது.



குளிர் காலத்தில், அதாவது டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் பகலில் ஒரு மணி அல்லது இரண்டு மணிக்கே இருட்டி விடும். ஒரு சில மணி நேரம் தான் அங்கு வெளிச்சத்தைக் காண முடியும். எனவே, இக்காலங்களில் பகலிலும்கூட விளக்குகள் போட்டுக் கொண்டுதான் வீதிகளில் நடமாட முடியும். நாங்கள் சென்றிருந்த அக்டோபர் மாதம், கோடை நீங்கி குளிர் ஆரம்பமாகும் பருவம். இக் காலங்களில் பகலும் சரி, இரவும் சரி, ஓரளவு சமமாகவே இருக்கும்.

ஸ்வீடன் நாட்டு அழகைக் காண வேண்டுமென்று சொன்ஞல், கோடையில்தான் பார்க்க வேண்டுமாம்! இருப்பினும் எப்போதுமே அந் நாட்டின் இயற்கைக் காட்சிகள் மனத்தைக் கவரக் கூடியவையாக இருக்கின்றன. எங்கு நோக்கினும் அடர்ந்த காடுகள்; ஆங்காங்கே சிறிய ஏரிகள். சமுத்திரக் கரையை ஒட்டி, ஆயிரக் கணக்கான சின்னஞ் சிறு அழகிய தீவுகளும் காணப்படுகின்றன.

ஸ்வீடன் நாட்டில் சுமார் எழுபது லட்சம் மக்கள் வசிக்கிறுர்கள். அங்கு சதுர மைல் ஒன்றுக்கு வாழும் மக்களின் தொகை, நாற்பத்தெட்டுதான்! அத்துடன் இயற்கை வளங்களும் மிகுந்திருக்கும் நாடு அது. முக்கியமாக ஸ்வீடன் இரும்புக் கனிக்குப் பெயர் போனது; அளவிலும் தரத்திலும் கூடத்தான்! இந் நாட்டிலிருந்து இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு இரும்புக் கனி ஏற்றுமதி செய்யப்படுகிறது. மரமும் இங்கிருந்து ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இவ்வாறு மூலப் பொருள்களின் ஏற்றுமதி மூலமே, ஸ்வீடனுக்குப் பெரிய வருவாய் கிடைக்கின்றது. அத்துடன் நல்ல தொழில் வளமும் இந் நாட்டில் பெருகியுள்ளது. ஸ்வீடன் உருக்குத் தொழில் உலகப் பிரசித்தி பெற்றதாயிற்றே! தினமும் நாம் உபயோகப்படுத்தும் ப்ளேடுகளுக்கான உருக்குத் தகடுகள்கூட, ஸ்வீடனில்தான் தயாராகின்றன.

உலகின் மற்றப் பகுதிகளில் விஞ்ஞான அறிவும், தொழில் நுணுக்கமும் அபிவிருத்தி அடைந்து வந்தபோதிலும், இன்னும் ஸ்வீடன்தான் உருக்கு செய்யும் தொழில் நுணுக்கத்தின் முன்னணியில் இருந்து வருகிறது. 'இவ் விஷயத்தில் எங்களை எட்டிப் பிடிக்க எவரும் இல்லை' என்று அந்நாட்டு மக்கள் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறுர்கள்.

உருக்கு உற்பத்தி பெருமளவு பெருகியிருப்பதால், உருக்கை அடிப்படையாகக் கொண்ட பல பெரும் தொழிற்சாலைகள் ஸ்வீடனில் உருவாகியிருக்கின்றன.



ஸ்வீடன் தேசத்தில் மூன்று நாட்களே தங்க முடிந்ததால் ஒரு சில தொழிற் கூடங்களை மட்டும்தான் என்ஞல் சென்று காண முடிந்தது. லஸ்டராஸ் என்ற இடத்தில் அமைந்திருக்கும் அசியா (Asea) என்ற தொழிற்சாலைக்குச் சென்றிருந்தேன். மின்சார உற்பத்திக்கான பெரிய பெரிய இயந்திரங்கள் இங்கு செய்யப்படுகின்றன. உலகத்தில் பல பகுதிகளிலிருந்தும் இத்



● ஸ்வீடன் நாடு இயற்கை எழிலுக்குப் பெயர் பெற்றது பசுமையும் வளமையும் மிக்க அந்நாட்டு எழிலை ஒரு

- ஸ்வீடிஷ் 'ஆபரா ஹவுஸில்' நடைபெறும் ஒரு நடன நிகழ்ச்சி.
- பனிமான் கூட்டத்தைத் தேடிச் செல்லும் லாப்லாந்தியர்.



தொழிற்சாலைக்கு ஆர்டர் வந்து குவிந்த வண்ணம் இருக்கின்றன. அமெரிக்கா, ரஷ்யா, இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளுக்குக் கூட இவர்கள் இயந்திரங்கள் செய்து அனுப்புகிறார்கள். இந்தியாவுக்குத் தேவையான பல இயந்திரங்களையும் இவர்கள் அனுப்பி இருக்கிறார்கள். இந்தக் கம்பெனியார் இப்போது பங்களூரில் சில கன ரக இயந்திரங்களைச் செய்வதற்காக கிர்லாஸ்கருடன் கூட்டுச் சேர்ந்து ஒரு தொழிற்சாலை அமைத்து வருகிறார்கள். நம் நகரிலும் கூட இதன் கிளை ஸ்தாபனம் ஒன்று இருக்கிறது. திரு வி.ஏ. சந்திரன் அவர்கள், அக்கம்பெனிக்குப் பிரதிநிதியாக இங்கு பணியாற்றி வருகிறார்கள். நாங்கள் ஸ்வீடன் வருவது குறித்து அக் கம்பெனி நிர்வாகஸ்தர்களுக்குத் தெரிவித்து, எங்களைச் சிறப்பாக வரவேற்கும்படி ஏற்பாடு செய்திருந்தார் திருவாளர் சந்திரன். மிகச் சிறந்த வரவேற்பு. அவர்கள் எங்களைத் தொழிற்சாலையில் பல பகுதிகளுக்கும் அழைத்துச் சென்றார்கள். இக் கம்பெனியின் இன்னும் பல தொழிற்சாலைகள் ஸ்வீடன் நாட்டின் பல் வேறு பகுதிகளில் அமைந்திருப்பதாகச் சொன்னார்கள்.

அட்லாஸ் காப்கோ (Atlas Copco) என்ற இன்னொரு தொழிற்சாலைக்குச் சென்றிருந்தோம். இங்கு பாறைகளைத் துளைத்து, சுரங்க வேலைக்குத் தேவையான இயந்திரங்களைத் தயாரிக்கிறார்கள். இந்த இயந்திரங்களைப் பரீட்சித்துப் பார்க்க, அங்கு ஒரு பாதாள செயற்கைச் சுரங்கத்தையே அமைத்திருக்கிறார்கள், பூமியைக் குடைந்து, கீழே சென்று பாறையை வெட்டி எடுத்து, அவர்கள் தயார் செய்யும் இயந்திரங்களைப் பரீட்சித்துப் பார்க்க இந்த ஏற்பாடு. இது போன்ற பெரிய துளை இயந்திரங்கள் செய்வதோடு மட்டுமல்லாமல், மிக நுணுக்கமான சிறு சிறு இயந்திரங்களையும் இவர்கள் தயாரிக்கிறார்கள். நம் பற்களிலே துளை போடக் கூடிய மிக அற்புதமான சிறு இயந்திரத்தை எங்களுக்குக் காட்டினார்கள்.

நம் பிரதமர் அவர்கள் சில ஆண்டுகளுக்கு முன்பு ஸ்வீடனுக்குச் சென்றிருந்தபோது, இந்தத் தொழிற்சாலைக்கும் விஜயம் செய்திருந்தார். பிரதமர் நேருஜியின் விஜயத்தை கலர் சினிமாப் படமாகப் பிடித்து வைத்திருக்கிறார்கள். அதை எங்களுக்குப் போட்டுக் காட்டினார்கள். நம்முடைய பிரதமருக்கே ஒரு தனி முகராசி. நம் நாட்டில்தான் அவரைக் காணக் கூட்டம் என்று நாம் நினைத்துவிடக் கூடாது. ஸ்வீடனிலும் அவர் சென்ற எல்லா இடங்களிலும் ஏகப்பட்ட கூட்டம்.

இந்தக் கம்பெனி நிர்வாகஸ்தர்கள் ஏற்பாடு செய்திருந்த விருந்து மேஜையின் மீது, நம் நாட்டுக்கொடியையும், ஸ்வீடன் நாட்டுக் கொடியையும் பறக்க விட்டிருந்தார்கள்.

ஸ்வீடன் இன்றைக்குத் தொழில் வளம் மிகுந்த நாடுகளில் முக்கியமானதாக விளங்கி வருகிறது. விவசாயத் துறையிலேயும் ஸ்வீடிஷ் மக்கள் பெரும் அளவு முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள். விவசாயிகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து



கொடுக்கக் கூட்டுறவு இயக்கம் பயன்படுகிறது. விவசாயப் பொருள்களை விற்பனை செய்யவும் கூட்டுறவுச் சங்கங்கள் மூல மாகவே ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இன்றைக்கு ஸ்வீட னில் ஏற்பட்டிருக்கக்கூடிய விவசாய முன்னேற்றத்துக்குக் கார ணம், கூட்டுறவு இயக்கம் நன்கு பரவி இருப்பதுதான்.

ஸ்வீடன் நாட்டினர் கால் நடை வளர்ப்பிலும் நல்ல அபி விருத்தி அடைந்திருக்கிறார்கள். அதிலும் முக்கியமாகப் பால் உற்பத்தியைப் பெருக்கக் கூட்டுறவுப் பண்ணைகளைப் பெருமள வில் அமைத்துள்ளார்கள். ஸ்வீடனின் தலைநகரான ஸ்டாக் ஹோமுக்குப் பக்கத்தில், பால் வழங்கும் நிலையம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள். அந்த நிலையம் கூட்டுறவு அடிப்படை யில் அமைக்கப்பட்டிருக்கிறது. 25,000 அங்கத்தினர்கள் இதில் சேர்ந்திருக்கிறார்கள். இரண்டரை லட்சம் பசுக்கள், அந்தச் சங்க அங்கத்தினர்களின் உடைமையாக இருக்கின்றன. இப் பசுக்களின் பாலை இயந்திரம் மூலம் பதம் செய்து விற்கிறார் கள். இரண்டு தரப்பட்ட பால் அங்கு தயாராகிறது. ஒன்று, நல்ல கொழுப்புச் சத்துடன் கூடிய பால். இன்னொன்று வெண்ணெயை எடுத்துவிட்ட பால். கண்ணாடிப் புட்டிகளிலே யும் காகிதப் பைகளிலேயும் பாலை அடைத்து விற்பனை செய்கி றார்கள். பாலை புட்டியில் அடைத்து முத்திரை வைக்கும் வேலையை, இயந்திரம் செய்கிறது. ஸ்டாக்ஹோம் நகருக்கு வேண்டிய சுத்தமான பாலின் தொண்ணூறு சத விகிதத்தை இந்தப் பால் பண்ணையே கொடுக்கிறதென்பதைக் கேள்விப் பட்டபோது, எனக்குக் கொஞ்சம் பொறுமையே ஏற்பட்டது. நம் நகரில் தரமான பால் கிடைப்பது எவ்வளவு அரிதென் பதை யாரும் அறிவார்கள். நமது இக்குறையை நீக்குவதற் காகச் சென்னைக்கு அருகில் மாதவரம் பால் பண்ணையை நிறுவி இருக்கிறோம். இருந்தும், இது நகரின் பால் தேவையை ஐந்து சத விகிதம் கூடப் பூர்த்தி செய்வதில்லை.

ஸ்வீடன் நாடு பல விஷயங்களில் அதிர்ஷ்டம் பெற்றது. ஐரோப்பா கண்டத்தில் சென்ற இரண்டு நூற்றாண்டுகளில் எத்தனையோ யுத்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால், ஸ்வீடனோ எந்த யுத்தத்திலும் அகப்பட்டுக் கொள்ளவில்லை. சென்ற யுத்தத்திலும் கூட அது நடுநிலைமை நாடாகத்தான் விளங்கி வந்தது. இருப்பினும் அங்கு, நாட்டுப் பாதுகாப்புக் காக எல்லா மக்களுக்கும் கட்டாய ராணுவப் பயிற்சி கொடுக் கப்படுகிறது. யுத்தமே ஏற்படாத காரணத்தால், நாட்டின் முழு சக்தியும் பொருளாதார அபிவிருத்தியில் உபயோகப் படுத்தப்பட்டு வருகிறது. அத்துடன், சிறந்த விஞ்ஞானி களும் தொழில் நிபுணர்களும் அங்கு தோன்றி, நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவியுள்ளார்கள். இப்படி இயற்கை வளம், குடிவளம் இரண்டும் இருக்கும் காரணத்தால், இன்றைக்கு ஸ்வீடன் பொருளாதாரத் துறையில் அமெரிக்கா வுடன் போட்டியிடக் கூடிய அளவுக்கு முன்னேறி யுள்ளது.

ஸ்வீடன் நாட்டின் தலைநகரம் ஸ்டாக்ஹோம். லண்டன், பாரிஸ் முதலிய நகரங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் ஸ்டாக்ஹோமை ஒரு சிறிய நகரமாகத்தான் கருத வேண்டும். அதன் ஜனத்தொகை சுமார் எட்டு லட்சம். ஸ்டாக்ஹோம் உலகிலேயே மிக அழகிய நகரங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது. இங்கிலாந்தில் எடின்பரோ நகரம்தான் மிகவும் எழில் பெற்றது. ஸ்டாக்ஹோம் நகரத்தை அதற்கு இணையென்றே சொல்லலாம்.

அக்டோபர் மாதம் ஐந்தாம் தேதி அன்று ஸ்டாக்ஹோம் அருகிலுள்ள 'ப்ரோமா' என்ற விமான நிலையத்தில் சென்று இறங்கினேன். ஸ்வீடனில் நம் நாட்டுத் தூதுவராகப் பணியாற்றி வரும் திரு கேவல்சிங் அவர்களும், ஸ்வீடன் அரசாங்க அதிகாரிகளும் என்னை அங்கு வரவேற்றனர்.

திரு கேவல்சிங்கை தமிழ் நாட்டு மக்கள் நன்கு அறிந்திருப்பார்கள். பாண்டிச்சேரியில் இந்தியப் பிரதிநிதியாகப் பணியாற்றியவர் அவர். அவருடைய காலத்தில் தான் பிரெஞ்சு ஆட்சியிலிருந்து விடுபடுவதற்கான போராட்டம் மக்களால் அதி தீவிரமாக நடத்தப் பெற்றது. அவருடைய பதவிக் காலத்திலேயே பிரெஞ்சு அரசாங்கமும் பாண்டிச்சேரி பகுதியை இந்தியாவிடம் ஒப்படைத்துவிட்டு விலகிக் கொண்டது. இந்த விடுதலை இயக்கத்திற்கு திரு கேவல்சிங் எவ்வளவு பலமளித்தார் என்பதை நாடு உணர்ந்திருக்கும். விடுதலை பெற்ற பின் அங்கு கமிஷனராக இருந்து சில காலம் பணியாற்றினுர் அவர். எனவே, அவரையும் அவர் மனைவியாரையும் நான் நன்கு அறிந்திருந்தேன். அவர்கள் வீட்டிலேயே எனக்குத் தங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள்.

திரு கேவல்சிங் அவர்களுடைய இல்லத்தில் எனக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குள் சென்றதும், 'ஊரில் எல்லோரும் சௌக்கியமா ?' என்ற தமிழ்க் குரல் ஒன்று கேட்டது. நான் ஆச்சரியத்துடன் குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தேன். அங்கு பணியாள் ஒருவர் கைகூப்பி நின்றிருந்தார். தமிழ்க் குரல் கொடுத்த அவரை 'சொந்த ஊர் எது ?' என்று விசாரித்தேன். ' தாம்பரம் ' என்று பதிலளித்தார் அவர். பாண்டிச்சேரியில் திரு கேவல் சிங் அவர்களிடம் பணிபுரிந்து விட்டு, அவருடனேயே ஸ்வீடனுக்கு வந்து விட்டதாகவும் தெரிவித்தார். 'ஸ்வீடன் நாட்டு வாழ்க்கை யெல்லாம் எப்படி ?' என்று அவரை விசாரித்ததற்கு, 'அதையேன் கேட்கிறீர்கள்? ஒரே குளிர் மயம். நமக்கு இந்த ஊரெல்லாம் ஒத்து வராதுங்க' என்று பதிலளித்தார். அத்துடன் ' இங்கு கிடைக்கக் கூடிய சௌகரியங்களெல்லாம் நம் ஊரிலே கிடைப்பதில்லை. இவையெல்லாம் நம் ஊருக்கு எப்போது வரப் போகின்றன ?' என்றும் வினவினுர் அவர். ஆமாம் ! ஏழைகளாக இங்கு கஷ்ட வாழ்க்கை நடத்திய பின் வெளி

நாட்டைப் பார்க்க நேர்ந்த எவரும் இயற்கையாகக் கேட்கக் கூடிய கேள்விதான் அது.

அன்று இரவு சாப்பிட்டபோது எனக்கு நம் ஊரில் இருப்ப தாகவே தோன்றியது. எல்லாம் நம் ஊர் சமையல்...ரசம்... சாம்பார்.....வகையராக்கள். அதைவிட மகிழ்ச்சிகரமான விஷயம், மறு நாள் காலைச் சிற்றுண்டிக்கு இட்லி கிடைத்தது தான். அடேயப்பா ! ஒரு மாதம் இட்லியையே காணுமல் இருந்துவிட்டு, அன்று அதை ருசித்தது எப்படி இருந்தது தெரியுமா ? தேவாமிர்தம் போங்கள் !

ஸ்வீடன் இயற்கை வளமும் குடி வளமும் நிரம்பிய நாடு என்று முன்னரே குறிப்பிட்டிருந்தேன். குடி வளம் என்று சொல்லும்போது, வெறும் எண்ணிக்கையால் அல்ல ; மக்க ளிடையே ஏற்பட்டுள்ள அறிவு, திறமை, வளர்ச்சி ஆகியவை தான் அந் நாட்டினுடைய முன்னேற்றத்திற்கே அடிப்படை யாக இருக்கின்றன. ஸ்வீடன் நாட்டில் இன்னொரு விசேஷம் என்னவென்றல், அது முதலாளித்துவ முறையிலோ, கம்யூ னிஸ முறையிலோ இயங்கவில்லை. ஜனநாயக சோஷலிஸ அடிப்படையில், கூட்டுறவு இயக்கத்தைப் பெருமளவில் பயன் படுத்தியே ஸ்வீடன் நாடு எல்லா முன்னேற்றங்களையும் கண் டிருக்கிறது. உயர்ந்த பதவி, அல்லது பெரிய தொழில் நடத்தக் கூடியவர்களுடைய வருவாய்க்கும், சாதாரண மக்களின் வருவாய்க்கும் பெருத்த வித்தியாசம் கிடையாது. அத்துடன், உலகிலேயே அதிக வரி விகிதம் ஸ்வீடன் நாட்டில்தான் என்று சொல்லுகிருர்கள்.

மக்களுக்கு வேண்டிய எல்லாவித அத்தியாவசிய தேவை களுக்கும் சர்க்காரே ஈடு கொடுக்கிறது. சிசு தாயின் வயிற்றில் கரு நிலையிலிருக்கும் போதிலிருந்து, இவ்வுலகை நீத்து இடு காட்டுக்குச் செல்லும் வரையில் உண்டான அத்தியாவசியத் தேவைகள் அனைத்தையும் அரசாங்கமே கவனித்துக் கொள் கிறது. குழந்தை பிறந்தவுடன் அதன் வளர்ப்புக்கான உதவித் தொகை ; சற்று வளர்ந்தவுடன் அதன் படிப்புக்கான செல வுத் தொகை ; படிப்பு முடிந்து தொழிலில் ஈடுபடுகின்ற வரை வாழ்க்கை நடத்துவதற்கான உதவி ; தொழிலில் அமர்ந்த பின்னும் இடையில் வேலை இல்லாது போய் விட் டால் தேவையான உதவி ஆகிய அனைத்தும், அந் நாட்டில் சர்க்கார் பொறுப்பில் தான் இருக்கிறது.

இவை தவிர நோய்வாய்ப்பட்ட காலத்தில் சிகிச்சைச் செலவும், முதுமையில் பென்ஷனும், இறந்த பின் சவ அடக் கச் செலவும் கூட சர்க்காருடையதுதான் ! ஆகவே அங்கிருக் கும் சமுதாய அமைப்பு குடிமக்களுக்கு ஓரளவு வாழ்க்கைப் பிரச்னையே இல்லாத முறையில் அமைந்துள்ளது. இப்படிப் பட்ட நிலையை யார்தான் வரவேற்க மாட்டார்கள் என்று தான் நாம் நினைப்போம். ஆனுல், இந்த வசதிகளின் காரண மாகவே பல புதிய பிரச்னைகள் அங்கு தோன்றியுள்ளன என்று



எனக்கு எடுத்துச் சொன்னூர்கள். வாழ்க்கையிலே சிறிது ஏமாற்றம் ஏற்பட்டால் கூட அந்நாட்டு மக்களால் அதைச் சகித்துக் கொள்ள முடிவதில்லையாம்! அதன் காரணமாக, மூளை குழம்பி விடுபவர்களும், தற்கொலை செய்து கொள்கிற வர்களும் கூட பலர் உண்டாம். உலகிலேயே தற்கொலை செய்து கொள்பவர்களின் எண்ணிக்கை ஸ்வீடன் நாட்டில் தான் உயர்வாக இருக்கிறது என்றும் அறிந்தேன். இளைஞர் களுக்கு, வாழ்க்கையில் அவர்களுக்கே உரித்தான துணிச்ச லுடன் வாழ சாதாரண வாழ்க்கையில் இடமில்லாத காரணத் தால், வெவ்வேறு சிறு குற்றங்கள் புரிவதில் ஈடுபட்டு, அதைப் பெரும் சாகசமாகவே கருதி, மனத் திருப்தி அடைய முயலு கிறுர்களாம். எனவே தான் ஸ்வீடனில் இளம் குற்றவாளிகள் ஓரளவு பெருகி யிருக்கிறுர்கள் என்பதையும் அங்குள்ளவர்கள் எனக்கு எடுத்துச் சொன்னுர்கள். பிரச்னையே இல்லாத வாழ்க்கை இருக்கக் கூடாது—இருக்க முடியாது என்பதைத் தான் இது எனக்கு எடுத்துக் காட்டியது. ஆனுல், பொதுவாக பிரச்னைகள் வறுமை மிகுந்த நாடுகளில் ஒருவிதம், வளமை மிகுந்த நாடுகளில் இன்னெரு விதம்!

சோஷலிஸ அடிப்படையில் அங்கு சமுதாயம் அமைந் திருந்தால் கூட, இன்னும் ஸ்வீடனில் நடப்பது முடியரசு தான். ஆனுல் இங்கிலாந்தில் உள்ளதுபோல் இங்கு அரசருக்கு எந்தவித அதிகாரமும் கிடையாது. பார்லிமெண்டுக்குத்தான் பரிபூர்ண அதிகாரம். பார்லிமெண்டுக்குப் பொறுப்புள்ள மந் திரி சபைதான், நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்துகிறது.

ஸ்வீடன் நாட்டுப் பிரதமர் திரு எர்லாண்டர் சென்னைக்கு வந்திருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். இங்கு கொடுத்த அரசாங்க விருந்தில் அவரை வரவேற்றுப் பேசக் கூடிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. நான் ஸ்வீடனுக்கு வருவ தாகக் கேள்விப்பட்டதுமே, தன்னைச் சந்திக்க வேண்டுமென்று தகவல்கொடுத்திருந்தார். ஆனுல் அவருக்கு அவசரமாகப் பல அயல் நாட்டுப் பிரமுகர்களைச் சந்திக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டதால், நான் சென்ற சமயம் அவரால் ஸ்டாக் ஹோமில் இருக்க முடியவில்லை. எனவே என்னைச் சந்திக்கும் படி அவருடைய நிதி மந்திரியிடம் சொல்லி இருந்தார்.

திரு கேவல்சிங் அவர்கள் என்னை ஸ்வீடன் நிதி மந்திரி யிடம் அழைத்துச் செல்லும்போது, 'இவர் அதிகமாகப் பேச மாட்டார். நாம் பத்து நிமிஷத்துக்குள் பேச்சை முடித்துக் கொண்டு திரும்பி விடலாம்' என்றுர். ஆனுல் நான் அங்கு சென்று — இந்தியாவைப்பற்றியும், இந்தியாவின் திட்டங் களைப் பற்றியும் பேச ஆரம்பித்ததும், நேரம் போனதே தெரி யாமல், ஒரு மணி நேரத்துக்கு மேல் என்னுடன் பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் திரும்பும்போது 'இது நீங்கள் புரிந்த அதிசய சாதனை' என்றுர் திரு கேவல்சிங்.



சோஷலிஸக் கட்சி ஸ்வீடனில் பதவியிலிருக்கிறது. நான் அங்கு சென்ற சில காலத்திற்கு முன்புதான், அந்நாட்டில் பொதுத் தேர்தல் நடந்து முடிந்திருந்தது. அந்தத் தேர்தலுக்கு முன்பு, '' இனி இந்தக் கட்சி ஜெயிக்கவே முடியாது. மக்கள் எல்லோரும் வரி கொடுத்து, வரி கொடுத்து அப் பளுவைத் தாங்க முடியாது இக் கட்சியை விலக்கிவிடப் போகிறார்கள் '' என்று பலரும் ஜோசியம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சோஷலிஸக் கட்சித் தேர்தல் பிரசாரமும், ' நாங்கள் இனிமேல் வரி போடப் போவதில்லை. வரியைக் குறைக்கப் போகிறோம் ' என்ற தோரணையில் இல்லை. ' மேலும் வரி போடுவோம். மக்களுக்கான சலுகைகளைச் செய்து கொடுப்போம் ' என்ற ரீதியில்தான் அவர்கள் தேர்தல் பிரசாரம் இருந்தது. முடிவில், முன்பு இருந்ததை விட அதிக ஆதரவு பெற்று, சோஷலிஸக் கட்சி பெரும் பலத்துடன் வெற்றி பெற்றது. இது ஸ்வீடன் மக்களுக்கு ஆச்சரியமாக இல்லை. ஆனால், அந்நிய நாட்டில் இருந்த முதலாளித்துவ மனப்பான்மை கொண்ட சிலருக்கு, இது பெரிய ஆச்சரியத்தை விளைவித்தது.

நம் நாட்டிலும் கூட வரிப் பளுவைப் பற்றிப் பேசுவதைக் கேட்கிறோம். இப்படி வரிமேல் வரி போடுகின்ற சர்க்காரை உடனே அகற்ற வேண்டும் என்ற பிரசாரமும் நடை பெற்று வருகிறது. ஸ்வீடன் மக்களைப்போல்தான் நம் நாட்டு மக்களுடைய கருத்தும் இருக்குமா என்பதைப் பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும். ஆனால், அடிப்படைக் கருத்துக்கள் உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் ஒன்றுதான் என்பது எனது திடமான நம்பிக்கை.

வாரத்தில் ஐந்து நாட்கள்தான் ஸ்வீடன் மக்கள் வேலை செய்கிறார்கள். சனி, ஞாயிறு அநேகமாக விடுமுறை நாட்களாகத்தான் இருக்கின்றன. ஐந்து நாட்களில் நாற்பத்திரண்டு மணி நேர வேலை. சாதாரணத்தொழிலாளிக்கு ஒரு மணி நேர வேலைக்கு நாலரை ரூபாய் அளவில் ஊதியம் கிடைக்கிறது. இதுதான் குறைந்த ஊதியம். அங்கெல்லாம் ஊதியம் மணிக் கணக்கில்தான் கணக்கிட்டுக் கொடுக்கப்படுகிறது. மக்கள் எல்லோருக்கும் நல்ல குடியிருப்பு வசதிகள் செய்து கொடுத்து விடுகிறார்கள். இத்தகைய வாழ்க்கைத் தர உயர்வுக்குக் காரணம், நான் முன்பு குறிப்பிட்டதுபோல், விவசாயத் துறையிலும், தொழில் நுட்பத் துறையிலும் ஸ்வீடன் நாட்டு மக்கள் பெருமளவு முன்னேறி இருப்பதுதான்.

நம் நாட்டில் மக்கள் எண்ணிக்கை ஏராளம். அவர்களுக்கான வேலை வாய்ப்பு மிகக் குறைவு. கோடிக்கணக்கான மக்கள் செய்ய வேலை இல்லாது திண்டாடுகின்ற நிலை இங்கு. ஆனால் ஸ்வீடனில் எல்லாத் தொழிற்சாலைகளிலும் வேலை செய்யப் போதுமான மக்கள் இல்லை. அங்கு கிடைக்கக்கூடிய அதிக ஊதியத்தின் காரணமாக, வெளிநாடுகளில் இருந்தும் கூட நிறைய மக்கள் ஸ்வீடனுக்கு வருகின்றனர். வளமிகுந்த



இங்கிலாந்திலிருந்து கூட பலர் அங்கு வாழ்க்கை நடத்த வந்திருக்கின்றனராம்! இத்தாலியிலிருந்து பல்லாயிரக் கணக்கான மக்கள் ஸ்வீடனுக்குப் பணி புரிய வந்துள்ளார்கள்.

ஆண்கள்—பெண்கள் என்ற வித்தியாசமில்லாது அனைவருக்கும் அங்கு வேலை வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. இந் நிலையும் சமுதாயத்தில் ஒரு புதிய பிரச்னையை ஏற்படுத்தியுள்ளது. பெண்களுக்கு சம வாய்ப்புடன் தொழில் புரியும் சந்தர்ப்பம் ஏற்படுகின்ற காரணத்தால், அவர்கள் திருமணம் செய்துகொள்ளவே பிரியப்படுவதில்லை. மணமின்றி சுதந்திரமாக வாழ ஆசைப்படுகிறார்கள். அதன் காரணமாக குழந்தைகள் பிறப்பது மிகவும் குறைந்து விட்டது. ஏற்கெனவே மக்கள் தொகை மிகக் குறைவு; இதனால் அது மேலும் குறைகிறது. இதைத் தவிர்ப்பது எப்படி என்பதே ஸ்வீடனில் ஒரு பெரிய சமுதாயப் பிரச்னையாகி விட்டது. இதைச் சமாளிக்க, கலியாணமாகாத பெண்களுக்குக் குழந்தை பிறந்தாலும் குற்றமாகக் கருதுவதில்லை என்ற ஒரு நிலையை ஏற்படுத்தினார்கள். அத்துடன், இப்படிப் பிறக்கின்ற குழந்தைகளுக்கு, மணந்து கொண்ட தம்பதிகளுக்குப் பிறக்கின்ற குழந்தைகளுக்குக் கொடுப்பதை விட, அதிகமான உதவித் தொகை கொடுக்கவும் முன் வந்துள்ளார்கள். அதன் விளைவு, சில சமயங்களில் மணமானவர்கள் கூட, தாங்கள் பெற்ற குழந்தைகளை (அதிக உதவி நிதி பெறுவதற்காக) மணமாகாத நிலையில் பிறந்த குழந்தை என்று சொல்ல முன் வருகிறார்களாம்! சமுதாயத்தில் எந்தெந்த விதமான கோளாறுகளெல்லாம் நிகழக்கூடும் என்பது இதிலிருந்து நன்கு விளங்குகிறதல்லவா?

ஸ்வீடனில் சில நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்த போது, ''இவ்வளவு வசதிகளை யெல்லாம் பெற்றிருக்கிறீர்களே, உங்கள் வாழ்க்கையிலே வசதிக் குறைவுகள் இருக்க முடியாதே'' என்று சொன்னேன்.

''என்ன இவ்வாறு சொல்லி விட்டீர்கள்? எங்களுக்கு இன்னும் தீராத பல குறைகள் இருக்கின்றன'' என்று சொன்னார்கள். அதை அறிய ஆவல் கொண்டேன்.

தற்போது அநேகமாக அங்கிருக்கும் ஒவ்வொருவரும் சொந்தமாகக் கார் வைத்திருக்கிறார்கள். அத்துடன் மிக சௌகரியமான பஸ் போக்குவரத்து வசதிகளும் உண்டு. வீட்டுக்கு வீடு டெலிவிஷன் வேறு! இவ்வளவு இருந்தும், விடுமுறை நாட்களில் வெளியே சென்று உல்லாசமாகப் பொழுதைக் கழிக்க வசதியில்லையே என்று குறைப்பட்டுக்கொண்டார்கள். அநேகமாக எல்லா மக்களும் விடுமுறை நாட்களில் கடலிலே அமைந்திருக்கின்ற தீவுகளுக்குச் சென்று, அங்கு காலத்தைக் கழிக்கின்றனர். இத்தீவுகளில் மக்கள் தங்குவதற்கென்று வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. பொதுவாக அமைக்கப்பட்டிருக்கும் இவ்வசதிகளை எல்லோரும் பயன்படுத்திக் கொள்வதற்குப் பதிலாக, இன்று ஒவ்வொருவரும் தங்களுக்கென்றி



தனித்தனி விடுமுறைக் குடில்கள் (Holiday Huts) வேண்டு மென்று விரும்புகின்றனர். ஒரு சில பகுதியினருக்குத்தான் இந்த வசதிகள் செய்துகொள்ள முடிந்திருக்கிறது. ஆகவே, பெரும்பான்மையான மக்கள் இந்த விடுமுறைக் குடில்கள் இல் லாது அவஸ்தைப் படுகின்றனர் என்று சொன்னார்கள். அத் துடன் இத்தீவுகளுக்குச் செல்ல ஒவ்வொருவரும் தங்களுக் கென தனி விசைப் படகுகள் வைத்துக்கொள்ள விரும்புகிறார் கள். பெரும்பகுதி மக்களுக்கு இவ் விசைப் படகுகள் இல்லாத குறை பெரும் குறையாகக் காட்சி அளிக்கிறது. எப்படி இருக் கிறது நிலை? கூழுக்கு உப்பில்லை என்றும், அல்வாவுக்கு நெய் போதவில்லை என்றும் வருந்துபவர்களுடைய நிலைதானே இது!

சில சம்பிரதாயங்கள்

ஸ்வீடன் நாட்டில் வருவாய் உயர்ந்திருப்பதுபோல் விலைவாசிகளும் உயர்ந்திருக்கின்றன. சாதாரணமாக வீட்டில் வேலையாட்களையே பார்க்க முடியாது. துணிகளை வெளுக்கப் போடுவதென்று சொன்னால், கொடுக்கின்ற கூலிக்குப் புதுத் துணியே வாங்கிக் கொள்ளக்கூடிய நிலைதான்!

எனக்கு ஒரு சிறிய அனுபவம் ஏற்பட்டது. கிராப் செய்து கொள்ள வேண்டியிருந்தது. அங்குதான் வெட்டிக் கொள் வோமே என்று எண்ணி, ஏற்பாடு செய்யச் சொன்னேன். முதல்தரமான சலூன் ஒன்றுக்குப் போன் மூலம் ஏற்பாடு செய்ய முயன்றார்கள். அங்கிருந்த கிராக்கியில், ஒருநாள் பொறுத்துத் தான் இடம் கிடைக்கும் என்று பதில் வந்தது. இன்னொரு இரண்டாந் தரமான இடத்தில் ஏற்பாடு செய்தார் கள். அங்கு போய் கிராப் செய்து கொண்டேன். அப் பணி யைப் பெரும்பாலும் பெண்கள்தான் அங்கு செய்கிறார்கள். பணி முடிந்ததும் பில் கொண்டு வந்து கொடுத்தார்கள். எனக்கு அப்படியே தூக்கிவாரிப்போட்டது. நம் ஊர் நாணயக் கணக்கில், பில் பதினாறு ரூபாய்க்குமேல் இருந்தது. பேசாமல் பணத்தைக் கொடுத்துவிட்டு வந்தேன். சரி, அந்த முதல்தர மான சலூனையும் பார்த்து விடலாமே என்று ஒரு முதல்தர சலூனைக் காணச் சென்றேன். அங்கு ஒவ்வொரு கண்ணாடி அறைக்குள்ளும், தலையில் ஒரு பெரிய பாரத்தை வைத்துக் கொண்டு, முகமெல்லாம் பெரிய கட்டுப் போட்டுக்கொண்டு பெண்கள் உட்கார்ந்திருக்கும் காட்சியைக் கண்டேன். ‘இது என்ன?’ என்று விசாரித்தபோது, ‘அழகு படுத்திக் கொள் வது’ என்று பதில் சொன்னார்கள். ஆமாம்! முகத்தில் சுருக்கமில்லாது வழவழப்பாகச் செய்யப் பல புதிய முறைகள் அங்கு கையாளப் படுகின்றன. பல மணி நேர வேதனையைப் பொருட்படுத்தாமல் இச் சிகிச்சைக்கு உட்படுகிறார்கள் பெண் கள். எல்லாம் அழகாக இருக்கும் ஆசையில்தான்! அந்த சலூனில் பொருத்தப்பட்டிருந்த பல்வேறு இயந்திரங்களைக் கண்டதும், தொழில் நிபுணர்கள் தான் அவற்றைக் கையாள முடியும் என்றே நினைக்கத் தோன்றியது.



மக்கள் எல்லோருமே சுத்தமான, சுகாதாரம் மிகுந்த, சத்துள்ள உணவைத்தான் சாப்பிடுகிறார்கள். நோய் வந்தால் கவனிக்கத் திறமை மிக்க வைத்தியர்கள், வைத்திய வசதிகள். இதன் காரணமாக, மக்களின் சராசரி வயது மிக உயர்ந்திருக்கிறது. உலகிலேயே ஸ்வீடன் நாட்டில் தான் மக்கள் அதிக நாட்கள் வாழ்கின்றார்கள் என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டார்கள். ஆண்களின் சராசரி வயது எழுபத்திரண்டு ; பெண்களின் சராசரி வயது எழுபத்தைந்து. ஒரு கூட்டத்திற்குப் போயிருந்தபோது, அங்கு பெரும்பாலும் வயது முதிர்ந்த பெண்கள், அதாவது எழுபது வயதைத் தாண்டியவர்கள்தான் கூடியிருந்தார்கள். இவ்வளவு வயதானவர்களிடம் என்ன பேசுவதென்று புரியவில்லை எனக்கு. இவ்வளவு வயது முதிர்ந்தவர்களைக் காண்பதிலே எனக்கு மிகவும் சந்தோஷம் என்று சொன்னால், எந்தப் பெண்ணும் கோபித்துக் கொள்வாள். ஆகவே, நான் பேசும்போது, '' இங்கு நீங்கள் எவ்வளவு வயதானாலும் இளமையாகத் தோற்றமளிக்கும் ரகசியத்தைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்களே, அதை எங்கள் நாட்டுக்கும் சொல்லிக் கொடுக்கமாட்டீர்களா ?'' என்று கேட்டேன். அப்போது பார்க்க வேண்டுமே ! எல்லாக் கிழங்களும் தாங்கள் யுவதிகள் என்றே எண்ணிப் புன்சிரிப்பைத் தவழ விட்டுக்கொண்டனர் !

ஸ்வீடனில் உள்ள மக்கள் இந்திய மக்களிடம் அதிக மரியாதையும் அன்பும் வைத்திருக்கிறார்கள். நம் நாட்டிலும், அதிலும் முக்கியமாகத் தமிழ் நாட்டில் பல பகுதிகளில் பல ஸ்வீடிஷ் பாதிரிமார்கள் கல்வி ஸ்தாபனங்களையும், வைத்திய நிலையங்களையும் வைத்து நடத்தி வருகிறார்கள். இங்கு சேவை புரிந்து வந்த பலர் ஸ்வீடனுக்குச் சென்று, அங்கு வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் ஸ்வீடிஷ் இந்திய சங்கம் என்ற ஒன்றை நிறுவி, இந்தியாவிலிருந்து வரும் மக்களுக்கு உதவி செய்வதுடன், இந்தியப் பிரமுகர்களுக்கு விருந்துகளும் ஏற்பாடு செய்கிறார்கள். எனக்குக் கூட ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார்கள். விருந்துக்குப் பின்னர் என்னைப் பேசும்படிக் கேட்டுக் கொண்டார்கள். நம் நாட்டுப் பிரச்னைகளைப் பற்றியும், அவர்கள் நாட்டுச் சிறப்பைப் பற்றியும் பேசிவிட்டு, வாழ்க்கை நல்ல முறையில் அமைய வேண்டுமென்று சொன்னால், பொருளாதார வளர்ச்சி மட்டும் இருந்தால் போதாது, ஆன்மீக வளர்ச்சியும் அவசியம் என்பதை வலியுறுத்தினேன். அதை அனைவரும் கரகோஷம் செய்து வரவேற்றார்கள்.

பணியாற்றிய பலர், என்னை வரவேற்கும் முறையில் பேசினார்கள். கடைசியாக ஒரு பெண்மணி எழுந்திருந்து, '' நான் சென்னை அமைச்சரைப் பாட்டுப்பாடி வரவேற்கப் போகிறேன் '' என்று பாட ஆரம்பித்தார்கள். ' வாழ்க தமிழ் நாடு ' என்ற தமிழ்ப் பாட்டை நல்ல தமிழ் உச்சரிப்புடன் பாடினார்கள். பிறகு அவர்கள் தமிழிலேயே சொன்னார்கள் : '' கோவை ஜில்லாவில், ஸ்வீடிஷ் மிஷன்



நடத்தி வரும் ப்ள்ளியில், பல்லாண்டுகள் பணியாற்றி இருக்கிறேன். அப்பள்ளிக்கு நீங்களும் வந்திருக்கிறீர்கள்'' என்று. அதைக் கேட்டதும் எனக்கு மட்டிலா மகிழ்ச்சி ஏற்பட்டது.

முதியோர்களுக்குக் கல்வி புகட்டும் ஒரு கல்வி நிலையத்தைப் பார்ப்பதற்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். ஸ்டாக்ஹோம் நகரிலிருந்து பத்து மைல் தூரத்தில் நல்ல இயற்கைச் சூழ்நிலையில் அது அமைந்திருந்தது. அதன் அருகாமையில் இருந்த ஒரு பெரிய ஏரி, அதனுடைய வனப்பை அதிகப்படுத்தியது. நான் அங்கு சென்றபோது அதன் தலைமை ஆசிரியர் என்னை வரவேற்று அந்தப் பள்ளி எந்த அடிப்படையில் நடைபெறுகிறது என்பதை விளக்கினார். நம் நாட்டில்தான் படிக்காத மக்கள் கோடிக்கணக்கில் இருக்கின்றனர். எனவே, இங்கு முதியோர் கல்வி என்றால் அதன் தேவையைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அனைவருக்கும் கட்டாயக் கல்வி கொடுக்கும் ஸ்வீடன் நாட்டில் இத்திட்டத்திற்கு என்ன தேவை என அவரை வினவினேன். முதியோர்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்க இந்தக் கல்வி நிலையம் ஏற்படுத்தப் படவில்லை. படித்தவர்கள், புதிய சில பயிற்சிகளைப் பெற விரும்புவார்களேயானால் அப் பயிற்சிகளைக் கொடுப்பதற்காகத்தான் இத்திட்டம் பரீட்சார்த்தமாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்று தெரிவித்தார் அத் தலைமை ஆசிரியர்.

ஆண் - பெண் இரு சாராரும் இக் கல்வி நிலையத்தில் படிக்கிறார்கள். இந்தியாவிலிருந்து சென்றுள்ள ஒரு பெண்மணியும் அங்கு பயிற்சி பெற்று வந்தார். அத்துடன் சமுதாய நலப் பணியில் ஈடுபட்டிருந்த ஓர் இந்திய அதிகாரியும், இம்முறையை நேராகக் கண்டு செல்வதற்காக அங்கு வந்திருந்தார். எல்லோரும் அங்கேயே தங்கி யிருந்து, கல்வி பெற விடுதிகள் ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தச் செலவை சர்க்காரே ஏற்றுக்கொள்கிறது. நல்ல தரமுள்ள, வெவ்வேறு துறைகளில் நிபுணத்துவம் வாய்ந்த பல ஆசிரியர்கள் அங்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். பயிற்சித் திட்டங்களெல்லாம் நல்ல முறையில்தான் வகுத்திருக்கிறார்கள். இருப்பினும், அங்கு செலவழிக்கப் படுகின்ற தொகைக்குப் போதுமான பலன் கிடைக்கிறதா என்பது எனக்குக் கொஞ்சம் சந்தேகந்தான்! ஆனால் அந்நாட்டு மக்களுக்கு இருக்கக்கூடிய பொருள் வளத்தில் அவர்கள் இதைப் பற்றி அதிகம் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. வறுமை மிகுந்த நம் நாட்டில்தான், எந்தத் திட்டமாக இருந்தாலும், ஒவ்வொன்றுக்கும் கணக்குப் போட்டுப் பார்த்து, செலவுக்கான பலன் இருக்கிறதா என்று கவனிக்க வேண்டியிருக்கிறது.




ஸ்டாக்ஹோமுக்குச் செல்கிறவர்கள் அங்கு கூட்டுறவு முறையில் நடத்தப்படுகின்ற 'டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸை'ப் பார்ப்பது மிகவும் அவசியம். நான் எனது சுற்றுப் பிரயாணத்தில் பார்த்த கடைகளிலேயே அது மிகவும் பெரிதாக இருந்தது அங்கு கிடைக்காத சாமான்களே இல்லை. முக்கிய

மாக கண்ணாடி சாமான்கள் பகுதிகளைக் கண்டேன். உபயோகத்திற்கும், அழகிற்குமான பலவித கண்ணைக் கவரும் கண்ணாடிப் பொருள்கள் அங்கு இருந்தன. அவற்றின் விலையைக் கேட்டால், நாம் அவற்றின் அருகில்கூடப் போக மாட்டோம்!

ஸ்வீடன் நாட்டில் வனவளம் அதிகமாக இருப்பதனால், மரத்தை ஒட்டிய பல தொழில்கள் அங்கு நடைபெறுகின்றன. மேஜை, நாற்காலி போன்ற சாமான்கள் செய்வதில் ஸ்வீடன் உலகப் புகழ் பெற்றிருக்கிறது. வெறும் அழகுப் பொருளாக மட்டுமல்லாமல், சிறந்த உபயோகமுள்ள பொருள்களாக அவற்றைத் தயாரிக்கிறார்கள். ரஷ்யா, அமெரிக்கா போன்ற நாடுகளுக்கும் அங்கிருந்து மரச் சாமான்களைப் பெருமளவில் ஏற்றுமதி செய்கிறார்கள். வெளிநாட்டு மக்களின் மனத்தைக் கவர்வதற்காக, பொருள்களின் பாணியை அவ்வப்போது மாற்றிக்கொண்டே வருகிறார்கள். அதற்கான ஆராய்ச்சி நிலையங்களும் பல அமைத்திருக்கிறார்கள்.

என்னுடைய ஸ்வீடன் வரவை ஒட்டி திரு கேவல் சிங் ஒரு விசேஷ விருந்து ஏற்பாடு செய்திருந்தார். இங்கிலாந்து மக்கள் தான் சம்பிரதாயங்களுக்கு அதிக மதிப்புக் கொடுப்பவர்கள் என்று நான் நினைத்திருந்தேன். ஆனால் ஸ்வீடன் மக்கள் இவ் விஷயத்தில் ஆங்கிலேயர்களையும் தோற்கடித்து விடுகிறார்கள். எந்த வரிசையில் விருந்தினர்களை உட்கார வைக்க வேண்டுமென்பதே அங்கு ஒரு பெரிய பிரச்னை. இதில் சிறு தவறு ஏற்பட்டாலும் கூட, தங்களுடைய அந்தஸ்தே குறைக்கப்பட்டு அவமானப் படுத்தப்பட்டு விட்டதாகக் கருதுகின்றார்கள். விருந்துக்கு முன் வழங்கப்படும் 'சூப்' சாப்பிட்டு முடிந்தவுடன், விருந்தளிப்பவர் ஒரு வரவேற்புரை நிகழ்த்த வேண்டும். அந்த வரவேற்புரையில், வந்திருக்கின்றவர்களில் யார் மிகவும் உயர் பதவியில் இருக்கின்றாரோ, அவரைக் குறித்துத் தான் முதலில் பேச வேண்டும். அதன்பின் வரிசையாக ஒவ்வொரு விருந்தினரையும் சிறப்பித்துப் பேசி வரவேற்க வேண்டும். விருந்தின் கடைசி உணவு பரிமாறப்படுமுன், விருந்தினர் பதில் உரை நிகழ்த்த வேண்டும். இவ்வாறு விருந்துகளில் பேசுவதே அங்கு ஒரு தனிக் கலையாக வளர்ந்திருக்கிறது. விருந்தின் மத்தியில் ஒருவருக்கொருவர் நல்லாசி கூறி **(Drinking for the health)** பானம் அருந்த வேண்டும். அதிலும்கூட சம்பிரதாயங்கள் உண்டு. பதவியில் உயர்ந்தவர்தான், தனக்குக் கீழே இருக்கக்கூடிய ஒருவருக்கு முதலில் நல்லாசி கூறமுடியும்.

இன்னொரு வழக்கம் கூட சில விருந்துகளில் அனுஷ்டிக்கப் படுவதாகச் சொன்னார்கள். நல்லாசி கூறிக்கொள்பவர்கள் இருவருமே ஒரு நிற பானத்தை அருந்துபவர்களாகத்தான் இருக்க வேண்டுமாம்! சிவப்பு நிற பானம் வைத்திருக்கும் ஒருவருக்கு நல்லாசி கூற விரும்பினால், தானும் சிவப்பு நிற பானத்தை வைத்துக் கொண்டுதான் ஆசிகூற முற்பட வேண்டுமாம்! தற்போது இது அவ்வளவு கண்டிப்பாக அனுஷ்டிக்கப்



படுவதில்லை என்கிறார்கள்! இவ்வாறு ஒருவர் நல்லாசி கூறிய பின், மூன்று நிமிடங்களுக்குள்ளாக அவருக்குத் திருப்பி நல்லாசி வழங்கிவிட வேண்டும். அப்படிச் செய்யத் தவறினால், பெரியவரை அவமதித்த குற்றத்திற்கு அவர் உள்ளாக நேரிடும். ஆண்களுக்குள் இஷ்டம்போல் நல்லாசி கூறலாம், அல்லது விட்டு விடலாம். ஆனால் பெண்கள் எல்லோருக்குமே இப் பெருமையை ஒவ்வொருவரும் அளித்தாக வேண்டும்.

ஸ்வீடனில் நல்லாசி கூறுவதற்குப் பெயர் என்ன தெரியுமா? 'ஸ்கோல்டிங்' (Scolding). ஆங்கிலத்தில் இப்பதத்திற்கு திட்டுதல் என்று பெயர். ஆகையினால் நான் தமாஷாக, 'நல்லாசி கூறுவதைப் போய் திட்டுவது' என்று வைத்திருக்கிறீர்களே என்றேன். அதற்கு விளக்கம் கூறினார்கள். 'ஸ்கோல்டிங் என்பது ஸ்வீடிஷ் பதம். நாகரிகம் முற்றாத காலத்தில் ஸ்வீடிஷ் மக்கள் தங்களுடைய எதிரியைக் கொன்று, அவனுடைய மண்டை ஓட்டில் பானத்தைப் பருகி, அம்முறையில் நல்லாசி கூறுவது வழக்கமாக இருந்தது. அதை யொட்டித்தான் இந்தப் பதம் உபயோகத்திற்கு வந்துள்ளது' என்று ஓர் ஆராய்ச்சியாளர் சொன்னார். இது எவ்வளவு தூரம் உண்மை என்று எனக்குத் தெரியாது.

இப்படிப் பல சம்பிரதாயங்களுடன் அங்கு விருந்து நடைபெறுவதால், விருந்து என்று சொன்னாலே இரண்டு மணி நேரத்தை அதற்கென்று ஒதுக்கி வைத்துவிடவேண்டும். விருந்தினராக இருக்கின்ற முறையில் ஒவ்வொருவரும் தகுந்தபடிப் பேசுவதற்கும், பழகுவதற்கும் கற்றுக் கொள்ள வேண்டும். இந்தக் கஷ்டம் எனக்கும் ஏற்பட்டது. "வயிறு நிறைய நல்ல உணவு அருந்திவிட்டுப் பேசச் சொல்வதுபோல் தண்டனை வேறு ஒன்றும் கிடையாது. நன்றாகப் பேசினால், சாப்பிட்ட உணவுக்கே குறை சொல்வதுபோல்தான் இருக்கும். ஏனென்றால் வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டு புத்திசாலித்தனமாகப் பேசுவது இயலாத காரியம்" என்று கூட ஓரிடத்தில் நான் தமாஷாகச் சொன்னேன்.

இரவு விருந்து சாப்பிட்டவுடன் கலைந்து போவதென்பது அங்கு கிடையாது. விருந்துக்குப் பிறகு பல மணி நேரம் ஏதாவது பேசிக்கொண்டே பொழுதைக் கழிப்பார்கள்.

விருந்துகளில் மலர்களைக்கொண்டு அலங்கரிப்பதில் ஸ்வீடனில் விசேஷ கவனம் செலுத்துகிறார்கள். எனவே, அந்நாட்டில் பூ வியாபாரம் மிக முக்கியமானதாக இருக்கிறது. பனிக் காலங்களிலும் கூட வெளிநாடுகளிலிருந்து விமான மூலம் ஏராளமாகப் புஷ்பங்களைத் தருவிக்கிறார்கள். அவற்றின் விலையும் மிகவும் உயர்ந்திருப்பதில் ஆச்சரியம் இல்லையே! திரு கேவல் சிங் எனக்களித்த விருந்தில், புஷ்பத்திற்கு மட்டும் நூற்றைம்பது ரூபாய் செலவு செய்திருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! விருந்துகளில் விருந்தினர்களுக்கு ஏற்ப



அலங்காரம் செய்யாவிட்டால், அது மிகவும் மதிப்புக் குறை வான செயலாகக் கருதப்படுகிறது.

திருவாளர் கேவல் சிங் எனக்கு அளித்த விருந்திற்கு அயல்நாட்டுத் தூதுவர்கள் - பிரமுகர்கள் - பெரும் பதவியில் இருப்பவர்கள் - அவர்களுடைய மனைவிமார்கள் - பல முக்கி யஸ்தர்கள் வந்திருந்தார்கள். விருந்துக்கு உட்காருவதற்கு முன்பே, விருந்தினர்கள் யார் யார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் அவர்களிடம் பேசுவ தற்கு சௌகரியமாயிருக்கும். அநேகமாக எல்லோருக்கும் அங்கு ஆங்கில மொழி தெரிந்திருக்கிற காரணத்தால், மொழிப் பிரச்னை ஏற்படவில்லை. மற்ற விருந்தினர்களும் யாருக்காக விருந்து அளிக்கப்படுகிறதோ, அவரைப் பற்றிய முழு விவரங்களையும் அறிந்து கொண்டு விடுகிறார்கள். அவர்களுடன் நாம் பேசிக் கொண்டிருக்கும்போது, நம் முடன் பல ஆண்டுகள் பழகியவர்கள் போல் அளவளாவு கிறார்கள். நம்முடைய கொள்கை, நாம் வகிக்கும் பதவி இவை பற்றிய நுணுக்கமான விவரங்களை யெல்லாம் நன்கு அறிந்து விடுகிறார்கள்.

ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கும்போது நான் ஒரு கருத்தை வெளியிட்டேன். அவர் உடனே, ''ஆம், இக் கருத்தை உங்களுடைய பெங்களூர் காங்கிரஸ் மகா நாட்டுப் பிரசங்கத்தில் கண்டேன்'' என்று சொன்னபோது, எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஆமாம்! அந்த அளவுக்குத் தயார் செய்து கொண்டு பேச வருகிறார்கள். அநேகமாக எல்லா நாட் டிலும் இந்த முறை அனுசரிக்கப்படுவதைக் கண்டேன். நாமும் நம் வெளிநாட்டு விருந்தினர்களை உபசரிக்கும்போது அவர்க ளைப் பற்றிய முழு விவரங்களையும் தெரிந்து கொள்வது அவசி யம் என்பதைத்தான் இது எனக்கு உணர்த்தியது.

லார்ட் மவுண்ட்பேட்டன் பிரபு இந்தியாவில் கவர்னர் ஜெனரலாக இருந்தபோது நடந்த நிகழ்ச்சி ஒன்று என் நினை வுக்கு வருகிறது. அப்போது நம் ராஜ்ய முதன் மந்திரியாக இருந்த திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார், கவர்னர் ஜெனர லைக் காணச் சென்றார்கள். திரு ராமசாமி ரெட்டியார் அவர் களுக்கு காப்பி போன்ற பானங்கள் பிடிக்காதென்பதைத் தெரிந்து வைத்துக்கொண்டு, 'அவருக்கு எலுமிச்சம்பழ சர்பத் மிகவும் பிரியம். கொண்டுவந்துகொடுங்கள்' என்றார் மவுண்ட் பேட்டன் பிரபு. இப்படி விருந்தினர்களை உபசரிப்பதை ஒரு கலையாகவே கொண்டிருக்கிறார்கள் மேலை நாட்டினர்.

அன்று விருந்துக்கு கெய்ஸர் (Geijer) என்ற தொழில் இயக் கத் தலைவர் வந்திருந்தார். உலகத் தொழில் இயக்கத்தில் மிக வும் முக்கியத்துவம் பெற்றவர் அவர். சமீபத்தில் இந்தியா வுக்கு வந்து, இங்குள்ள தொழில் இயக்க மகாநாடுகளில்



கலந்து கொண்டு, இங்கு தொழில் இயக்கங்கள் எப்படி நடக்கின்றன என்பதையும் ஆராய்ந்தார். அவருடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, இந்தியத் தொழில் இயக்கங்களிலுள்ள குறைகளைக் குறிப்பிட்டார்.

முதற் குறை, ''ஒரு தொழிலிலே, ஒரே தொழில் ஸ்தாபனத்திலே, பல சங்கங்கள் இயங்குவது. இதன் காரணமாக, தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களின் நன்மையைப் பாதுகாக்க முடியாமல் போய்விடுகிறது. அத்துடன் மட்டுமல்லாது, போட்டி போட்டுக்கொண்டு தொழிலாளர்களைத் தங்கள் சங்கங்களில் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக, பொறுப்பற்ற கோரிக்கைகளை விடுவதும், தொழிலாளர்களை ஒழுக்கத்துடனும், கட்டுப்பாடுடனும் நடந்துகொள்ளக் கூடிய முறைகளை அமைத்து அதை அமல் நடத்த முடியாத நிலையும் ஏற்படுகிறது. இன்னொரு குறை, தொழிற் சங்கங்கள் அரசியல் கட்சி அடிப்படையில் ஏற்படுத்தப்பட்டிருப்பது. இதன் காரணமாக தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களின் நன்மைக்காக இயங்க வேண்டும் என்ற நிலை மாறி, அரசியல் கட்சிகளின் கைப்பாவைகளாக உபயோகப்படுத்த ஏதுவாகின்றன'' என்றார் அவர்.

''இவை பற்றியெல்லாம் இந்தியத் தொழிலாளர் தலைவர்களிடம் விவாதித்தீர்களா ?'' என்று கேட்டேன்.

''விவாதித்தேன். ஆனால் என்ன பலன் ஏற்படுமென்று என்னால் சொல்ல முடியாது'' என்றார் அவர்.

லின்ட்பெரி என்ற இன்னொரு பிரமுகரையும் அங்கு சந்தித்தேன். இவர் ஸ்வீடன் நாட்டின் பொதுத் துறை நிலையங்களுக்கு அதிபராகப் பணியாற்றி வருகிறார். ஸ்வீடன் நாட்டில் நம் நாட்டைப் போல் பல தொழில்கள் பொதுத்துறையிலும், தனியார் துறையிலும் இயங்கி வருகின்றன. ஆகவே, அந் நாட்டினருடைய அனுபவம் நமக்கு உபயோகமாயிருக்கும் என்று நினைத்து, அதுபற்றி லின்ட்பெரி அவர்களிடம் விரிவாகப் பேசிக்கொண்டிருந்தேன். பொதுத் துறைபற்றி திரு லின்ட்பெரி அவர்கள் சொன்ன முக்கியமான கருத்து என்னுடைய மனத்தைக் கவர்ந்தது.

பொதுத் துறையாக இருந்தாலும் சரி, தனியார் துறையாக இருந்தாலும் சரி, ஒரு தொழில் ஸ்தாபனம் நடைபெற வேண்டியது ஒரே முறையில்தான். தொழில் ஸ்தாபனத்தை ஏற்று நடத்தக்கூடியவர்கள், முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு, அந்த முழுப் பொறுப்பையும் நிறைவேற்றக் கூடிய அதிகாரம் பெற்றவர்களாக இருக்க வேண்டும். தொழில் ஸ்தாபனங்களில் ஏற்படக்கூடிய பிரச்னைகளுக்கு உடனடியாக அவ்வப்போது தீர்வு கண்டு, தொடர்ந்து நடவடிக்கை எடுக்கப் படவேண்டும். இதிலே சில சமயங்களில் தவறுகளும் ஏற்படலாம். இத் தவறுகளைத் திருத்திக் கொள்ளவும் உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்.

பொதுத் துறை என்று சொன்னவுடனே, தொழில் ஸ்தாபனமும் ஒரு சர்க்கார் இலாகாவைப்போல் இயங்க வேண்டும் என்று நினைத்தால், அத்தொழில் உருப்படாது. ஒவ்வொரு விஷயத்திற்கும் சர்க்காருக்கு எழுதி, இலாகாவினருடைய உத்தரவையோ, மந்திரியின் உத்தரவையோ பின் பற்றித்தான் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று சொன்னால், தொழில் சீர் குலைந்து விடும்.

சமீப காலத்தில் நம் நாட்டிலுள்ள பொதுத் துறை ஸ்தாபனங்களைப் பற்றி அமெரிக்க பொருளாதார நிபுணர் கால்ப்ரெயித் (Galbraith) இந்த அடிப்படையில்தான் அவருடைய கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்.

முக்கியமாகக் கவனிக்கப் படவேண்டிய இன்னொரு விஷயம், பொதுத்துறை தொழில் ஸ்தாபனங்களைப் பற்றி, பார்லிமெண்டுக்கு இருக்கக்கூடிய பொறுப்பு, தொழில் ஸ்தாபனங்களில் நடக்கக்கூடிய ஒவ்வொரு விஷயத்தைப்பற்றியும் பார்லிமெண்டில் விவாதிப்பது, அதைப்பற்றிக் கேள்விகள் கேட்பது என்கிற ஒரு நிலை ஏற்படுமேயானால், தொழில் ஸ்தாபனங்களைப் பொறுப்பேற்று நடத்துகின்றவர்கள் தைரியமாக, நிலைமைக்கு ஏற்ப எக்காரியத்தையும் செய்ய முடியாது. பார்லிமெண்டில் என்ன குறை சொல்லி விடுவார்களோ என்ற பயம் இருந்து கொண்டேதான் இருக்கும். ஆகவே, பொறுப்பைத் தட்டிக் கழிக்கக்கூடிய மனப்பான்மைதான் வளரும். 'நமக்கெதற்கு இந்தத் தொல்லை? சர்க்காருடைய உத்தரவைப் பெற்று அவர்கள் சொல்கிறபடி செய்து விடலாம்' என்ற எண்ணம்தான் வளரும்.

இந்த அடிப்படையில் தொழில்கள் நடத்துவதென்பது இயலாத காரியம். ஒருவரிடம் பொறுப்பை ஒப்புவித்த பிறகு, அந்தப் பொறுப்பை அவர்கள் சரியாக நிர்வகிக்காவிட்டால், வேண்டுமானால் அவரை நீக்கி விடலாம். ஆனால் இடையே குறுக்கிடுவது தொழில் நிர்வாகம் சீர்குலைந்து போவதற்குத் தான் ஏதுவாகிறது. இப்படிப் பல கருத்துக்களைத் தெளிவாக எடுத்துச் சொன்னார் திரு லின்ட்பெரி அவர்கள்.

இக்குறைகள் இல்லாவிட்டால் ஒரு தொழில் எந்தத் துறையில் நடந்தாலும் - பொதுத் துறையாகட்டும், தனியார் துறையாகட்டும் - அதைப்பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை என்றார் அவர். இவையனைத்தும் நம்மால் கவனிக்கப் படவேண்டிய முக்கிய விஷயங்கள்.

ஸ்வீடன் போன்ற தொழில் துறையில் அதிக முன்னேற்றம் அடைந்து இருக்கக்கூடிய நாடுகள் இந்தியாவுக்கு எவ்வாறு உதவ முடியும் என்பதுபற்றி அங்கு வந்திருந்த நண்பர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். ஸ்வீடனில் மக்கள் எண்ணிக்கை குறைவாக இருக்கக் கூடிய காரணத்தினால், குறைந்த ஆட்களைக் கொண்டே இயந்திரங்களின் மூலமாகவே உற்பத்தியைப்

பெருக்க வேண்டும் என்கின்ற அடிப்படையில் தொழில்கள் முன்னேற்றம் அடைந்து வருகின்றன. ஒரு தொழிற்சாலையில் ஒரு சில தொழிலாளர்களைக் குறைத்து வேலை செய்ய முடியும் என்கின்ற முறையில் புதிய இயந்திரம் ஏதாவது சிருஷ்டிக்கப் படுமேயானால், பழைய இயந்திரங்களை எடுத்தெறிந்து விட்டு, அந்தப் புதிய இயந்திரங்களை அமைப்பதற்குத் தயங்குவதே கிடையாது. அங்கு இயந்திர சக்திக்குக் குறைவில்லை; ஆள் எண்ணிக்கைக் குறைவுதான் அதிகம்.

'இவ்வாறு ஒதுக்கப்படுகின்ற இயந்திரங்கள், இந்தியா போன்ற நாடுகளுக்கு உபயோகமாக இருக்கும்; ஓரளவு சரச மான விலைக்கும் அவற்றைப் பெற முடியும். ஒதுக்கப்பட்ட இயந்திரங்கள், எனவே அவை பயன் படாது என்று நினைக்க வேண்டிய அவசியமே இல்லை. இதைப் பரிசீலனை செய்து, ஸ்வீடனில் புறக்கணிக்கப்படும் இயந்திரங்கள் இந்தியாவில் பெரும் அளவு உபயோகிக்க ஏற்பாடு செய்யலாம்' என்கின்ற கருத்து அங்கு வெளியிடப்பட்டது. இது நல்ல முறை என்று எனக்குத் தோன்றியது. சமீபகாலத்தில் வெளிவந்த ஒரு புத்த கத்திலும் இக் கருத்தைக் கண்டேன். இதுபற்றி ஸ்வீடன் நிதி மந்திரி அவர்களிடமும் விவாதித்தேன். இவ்வாறு கிடைக்கக் கூடிய இயந்திரங்கள் யாவை, எந்த அளவில் கிடைக்கும் என் பன போன்ற புள்ளி விவரங்களை எடுத்து அனுப்பும்படி நம் தூதுவராலயத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

அக்டோபர் மாதம் எட்டாம் தேதியன்று ஸ்வீடன் நாட்டை விட்டுப் புறப்படுவதாகத் திட்டமிட்டிருந்தேன். முதலில் காலை எட்டு முப்பத்தைந்துக்குப் புறப்படக்கூடிய விமானத்தில் கிளம்புவதாக ஏற்பாடு. ஆனால் பின்னல் ஏழரை மணிக்கே புறப்படுகின்ற இன்னொரு விமானத்தில் பிரயாணம் செய்வதென மாற்றி அமைக்கப்பட்டது. அதை நானும் கவ னிக்கவில்லை, தூதுவராலயத்தினரும்கவனிக்கவில்லை.எட்டரை மணிக்குப் புறப்படவேண்டுமென்றுதான் பிரயாணக் குறிப்பில் கண்டிருந்தது. அன்று காலை ஏழு மணிக்குத் தான் அந்தத் தவறு கண்டு பிடிக்கப்பட்டது. அவசர அவசரமாக விமான நிலையத்திற்குப் போனோம். ஆனால் நாங்கள் போவதற்குள் விமானம் புறப்பட்டுப் போய் விட்டது.

என்ன செய்வதென்றே விளங்கவில்லை. அங்கிருந்த விமான நிலையத்தார் உடனடியாக வந்து, நிலைமையைத் தெரிந்து கொண்டவுடன், அடுத்த விமானத்தில் போக ஏற்பாடு செய்ய முற்பட்டார்கள். பல இடங்களுக்கு டெலிபோன் செய்தி பறந்தது. அடுத்த பதினைந்து நிமிடங்களுக்குள்ளாக, எட் டரை மணிக்குப் புறப்பட இருக்கும் விமானத்தில் இடம் ஏற் பாடு செய்து, அதற்கு இணைப்பாக டென்மார்க் நாட்டில் கோபன்ஹேகன் விமான நிலையத்திலிருந்து ஜெர்மன் நகர ஹாம்பர்க்கிற்கு புறப்படக்கூடிய விமானத்திற்கு இடம் ரிசர்வ் செய்து எங்களுக்கு அறிவித்தார்கள். இதற்குச் செலுத்தப்பட







- கிழக்கு பெர்லினுக்கும் மேற்கு பெர்லினுக்கும் எல்லையாக அமைந்துள்ள பிராண்டன்பர்க் வாயில்.

- மேற்கு ஜெர்மனியில் உள்ள 'டெமாக்' தொழிற்சாலை நிர்வாகிகளுடன் அமைச்சர் பேசிக் கொண்டிருக்கிறுர். நம் நாட்டு ரூர்கேலா இரும்பு உருக்குத் தொழிற்சாலைக்கு முக்கியமாக உதவு பவர்கள், இந்த 'டெமாக்' கம்பெனியார்தான்.



வேண்டிய அதிகக் கட்டணம் எவ்வளவு என்று விசாரித்தேன். ''இதற்கெதற்கு அதிகக் கட்டணம், பழைய டிக்கெட்டே போதும் '' என்று சொல்லிவிட்டார்கள்.

இது எங்களுக்கென்று செய்யப்பட்ட ஏற்பாடு மட்டுமல்ல, இதே போல் தான் மற்றவர்களுக்கும் வசதி செய்து தருகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். இதை நம் நாட்டு விமான சர்விஸ் நிலையத்தாரும் கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

ஸ்வீடனிலிருந்து ஹாம்பர்க் போய்ச் சேருவதற்கு, குறிப்பிட்ட நேரத்திற்குமேல் இரண்டு மணி நேரமே தாமதமாயிற்று.

திரு கேவல் சிங், மற்ற ஸ்வீடன் அதிகாரிகள் ஆகியவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, மறுபடியும் வந்து பார்க்க வேண்டிய ஒரு நாடு என்ற எண்ணத்துடன் ஜெர்மனிக்குப் புறப்பட்டேன்.





நம்முடைய வாழ் நாளிலேயே இரண்டு பெரிய உலக மகா யுத்தங்கள் ஏற்பட்டு, மனித வர்க்கத்தையே நடு நடுங்க வைத்து விட்டதைக் கண்டோம். இந்த இரண்டு மகா யுத்தங்களுக்கும் முக்கிய காரணமாக இருந்தது ஜெர்மனிதான்! ஆனால் இந்த இரண்டு யுத்தங்களிலும் ஜெர்மனி தோற்றது. *1918*ல், முதல் உலக மகா யுத்தத்தில் தோற்ற பின் ஜெர்மனியின் ராணுவ பலம் வளராமல் இருப்பதற்காக ஜெர்மன் நாட்டின் மீது கட்டுப்பாடுகள் பல திணிக்கப்பட்டன. ஆனால் அவை எல்லாவற்றையும் மீறி, இருபது ஆண்டுகளுக்குள் பிரமிக்கத் தக்க ராணுவ பலத்தைப் பெற்று, மறுமுறையும் யுத்தம் ஒன்றைத் துவக்கக் கூடிய சக்தியைப் பெற்று விட்டது ஜெர்மனி.

எனவேதான், இரண்டாவது மகா யுத்தத்தில் ஜெர்மனி தோல்வியுற்ற போது, இப்பேர்ப்பட்ட நிலே மீண்டும் நேராதிருக்க, நேச நாட்டுத் தலைவர்கள் ஒன்றுகூடி ஒரு வழி வகுத்தனர். பாட்ஸ்டாம் ஒப்பந்தப்படி, ஜெர்மனி நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், ரஷ்யா ஆகிய நான்கு நாடுகளின் ஆதிக்கத்துக்கும் உட்பட்டது. ஜெர்மனியின் மேற்குப் பகுதியை அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகள் ஆக்கிரமிக்க, கிழக்குப் பகுதியை ரஷ்யா தனது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தது.

*1949*ல் அமெரிக்கா-இங்கிலாந்து-பிரான்ஸ் ஆகிய நாடுகளின் ஆதிக்கத்தின் கீழ் இருந்த மேற்கு ஜெர்மனிப் பகுதி, பெடரல் ரிபப்ளிக் ஆப் ஜெர்மனியாக (Federal Republic of Germany) ஒரு தனி அரசாங்கத்துடன் ஏற்பட்டது. இப் பகுதியில் ஐந்து கோடியே பதினறு லட்சம் மக்கள் வாழ்கின்றனர். கிழக்கு ஜெர்மன் பகுதி, ஜெர்மன் டெமாக்ரடிக் ரிபப்ளிக் என்ற பெயருடன், கம்யூனிஸ அடிப்படையில் இயங்கி வருகிறது. இங்கு ஒரு கோடியே அறுபத்தாறு லட்சம் மக்கள் வாழ்கிருர்கள்.

ஜெர்மனிக்குத் தலைநகராயிருந்த பெர்லின், கிழக்கு ஜெர்மன் பகுதியில் அமைந்துள்ளது. இந்நகரை நான்கு வல்லரசுகளும் பங்கு போட்டுக் கொண்டன. அமெரிக்கா முதலிய நாடுகளுக்குக் கீழ் இருந்த மேற்கு பெர்லின் பகுதி, மேற்கு ஜெர்மனியுடன் நிர்வாக முறையில் இணைக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஜெர்மன் நாட்டுப் பிரிவினே, உலகத்தில் ஏற்பட்டுள்ள முக்கிய சிக்கல்களில் ஒன்ருக இன்று நிலவுகிறது. ரஷ்யாவுக்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் ஏற்பட்டிருக்கும் போட்டியின் எதிரொலியாக, பிரிக்கப்பட்ட ஜெர்மனி விளங்குகிறது. அத்துடன் பெர்லின் நகரம், கிழக்கு ஜெர்மனிக்கு மத்தியில் அமைந்திருக்கிற காரணத்தால், மேற்கு ஜெர்மனிக்கும், மேற்கு பெர்லின் பகுதிக்கும் உள்ள தொடர்பிலே சிக்கல்கள் பல ஏற்படுகின்றன. மேற்கு ஜெர்மனியிலிருந்து மேற்கு பெர்லின் பகுதிக்குத் தரை மார்க்கமாகச் செல்வதற்கு, கிழக்கு ஜெர்மனி அரசாங்கத்தின் அனுமதி வேண்டும். யுத்த நிறுத்த ஒப்பந்தத்திலே இது ஒரு ஷரத்தாக அமைந்திருக்கிறது. மேற்கு ஜெர்மனி பொருளாதாரத் துறையில் முதலாளித்துவ அடிப்படையிலும், அரசியல் துறையில் பார்லிமெண்டரி ஜனநாயக முறையிலும் இயங்கி வருகிறது. கிழக்கு ஜெர்மனியோ, முழுக்க முழுக்க கம்யூனிஸ அடிப்படையில் தான் எல்லாத் துறைகளிலும் இயங்கி வருகிறது. இரண்டு தத்துவங்களுக்கும் ஒரே நாட்டில் இவ்வளவு போட்டி ஏற்பட்டிருக்கிறது. இன்றைக்கு ஜெர்மனிக்குச் செல்ல விரும்புகிறவர்கள் இந்தப் பெரும் சிக்கலேத் தெரிந்திருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

அமெரிக்க ஜனதிபதி ரூஸ்வெல்ட், இங்கிலாந்து பிரதமர் சர்ச்சில் போன்ற அரசியல் ஞானிகள், ஒரு நாட்டின் பலத்தைக் குறைப்பதற்குச் சரியான வழி, அந்த நாட்டைத் துண்டு போட்டு விடுவதுதான் என்பதை நன்கு உணர்ந்தார்கள். அந்த அடிப்படையில்தான், யுத்த முடிவுக்குப் பின்னர், தோற்கடிக்கப்பட்ட ஜெர்மனியை நான்கு பிரிவுகளாகப் பிரித்து, நான்கு வல்லரசுகளும் பங்கிட்டுக் கொண்டன. அப்போது ராணுவ அடிப்படையில் பிரிக்கப்பட்ட ஜெர்மனி, இப்போது அரசியல் அடிப்படையில் இரண்டு ஜெர்மனியாகப் பிரிவுபட்டு இருக்கிறது. இந்தப் பிரிவினேயினுல் ஜெர்மனிக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய பிரச்னேகளேக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. ஜெர்மன் மக்களுக்கு மட்டும் ஏற்பட்டிருக்கும் பிரச்னேயாக இது நின்று விடவில்லே. இன்னெரு உலக மகா யுத்தத்துக்கு வித்தாகவும் இது அமைந்திருக்கிறது என்பதைப் பல நிகழ்ச்சிகள் வலியுறுத்தி வருகின்றன.

நம் நாட்டிலும் நாட்டைப் பிரித்து அதன் மூலம் முன்னேற்றம் காண வேண்டும் என்று நம்புகிறவர்கள் சிலர் இருக்கிருர்கள். அரசியல் கட்சியினர் ஜெர்மன் படிப்பினேயைப் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். பிரிவினேயின் காரணமாகத் தீர்ந்த பிரச்னேகளே கிடையாது! பிரிவினே மேலும் மேலும் பல புதிய சிக்கல்களேத்தான் கிளப்புகிறது.

நாங்கள் எங்கள் பிரயாணத் திட்டத்தில் சேர்த்திருந்தது மேற்கு ஜெர்மனிதான். அங்கு நாங்கள் செல்ல இருக்கிறோம் என்பதை அறிந்து, சென்னேயில் இருக்கும் ஜெர்மன் பிரதிநி தி



திரு பிஷர், தங்கள் அரசாங்கத்துக்கு எழுதி, எங்களை அரசாங்க விருந்தினர்களாக அழைக்கும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். முதலில் நான்கு நாட்கள்தான் மேற்கு ஜெர்மனியில் இருப்பதாகத் திட்டமிட்டிருந்தோம். நாங்கள் இங்கிலாந்தில் இருக்கும்போதே, ஜெர்மனிக்கு இன்னும் இரண்டு நாட்கள் ஒதுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ஐரோப்பாவில் நம் நாட்டுப் பொருளாதாரத் துறையில் பிரதிநிதியாகப் பணியாற்றி வரும் திரு டி. சுவாமிநாதன் ஐ. ஸி. எஸ். அவர்களும், நாங்கள் ஜெர்மனியில் மேலும் சில நாட்கள் இருப்பது பயன் தரத்தக்கது என்று வலியுறுத்தினார். அதற்கிணங்க, நாங்களும் ஜெர்மனியில் இன்னும் இரண்டு நாட்கள் இருக்க ஒப்புக் கொண்டோம்.

ஜெர்மனியில் ஹாம்பர்க் ஒரு முக்கியமான துறைமுகப் பட்டினம். இது எல்பே நதியின் மேல் அமைந்திருக்கிறது. உலகத்தில் உள்ள பெரிய துறைமுகங்களில் ஒன்றாக அது கருதப்படுகிறது.

ஹாம்பர்க் விமான நிலையத்தில் சென்று இறங்கியபோது, இந்தியப் பிரதிநிதியும், ஜெர்மன் அதிகாரிகளும் எங்களை வரவேற்றார்கள். நாங்கள் இரண்டு மணி நேரம் தாமதமாக ஹாம்பர்க் போய்ச் சேர்ந்ததனால் நஷ்டம் ஒன்றும் ஏற்பட்டு விடவில்லை. ஏனென்றால், அங்கு பெரு மழை பெய்து கொண்டிருந்தது. நேராக ஹோட்டலுக்குப் போவதைத் தவிர, ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிகழ்ச்சிகள் எதிலும் எங்களால் கலந்து கொள்ள முடியவில்லை.

நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல் ஒரு பெரிய செயற்கை ஏரிக் கரையில், ரம்மியமான சூழ்நிலையில் அமைந்திருந்தது. ஐரோப்பா கண்டத்திலேயே அது ஒரு புகழ் பெற்ற ஹோட்டல் என்று சொன்னார்கள். அறைகளும், மற்ற சௌகரியங்களும் அப்படித்தான் சிறப்பாக அமைந்திருந்தன.

அன்று மாலை மழையோடு மழையாக, ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம். சென்னையில் சில காலம் தங்கியிருந்த ஜெர்மன் நண்பர் ஒருவர் எங்களை எல்லா இடங்களுக்கும் அழைத்துச் சென்றார். அன்றிரவு மாயப் புல்லாங்குழல் (Magic Flute) என்ற ஓர் இசை நாடகத்தைப் பார்க்கச் சென்றிருந்தோம்.



ஜெர்மன் நாடு கலைத் துறையில் மிகவும் பெயர் பெற்றது. மேற்கத்திய சங்கீதத்தில் ஜெர்மனி ஒரு முக்கிய இடத்தை வகிக்கின்றது. நாங்கள் பார்த்த நாடகமும் மிக உயர்வாகத்தான் இருந்தது. யுத்த காலத்தில் அழிந்து போயிருந்த அந்த நாடக மன்றம், மீண்டும் புதுப்பித்துக் கட்டப்பட்டிருந்தது. அழிக்கப்பட்ட நகரங்கள் மீண்டும் புதுப்பிக்கப் பட்டபோது, நாடக மன்றங்களுக்கு முதலிடம் கொடுத்திருக்கிறார்கள். கஷ்டப்பட்ட மக்களுக்குப் பொழுது போக்கு அவசியம் தான். அதன் காரணத்தால்தான் இந்த முக்கியத்துவம் போலும்!

அடுத்த நாள் காலை துறைமுகத்தை ஒரு விசைப் படகில் சென்று சுற்றிப் பார்த்தோம். உண்மையிலேயே பிரமாண்டமான துறைமுகம்தான் ! நம்முடைய சென்னைத் துறைமுகத்தைப் போல் இருபது முப்பது மடங்கு பெரிதாக இருக்கிறது.

ஹாம்பர்க் துறைமுகத்தின் இன்னொரு முக்கியத்துவம், அதில் ஒரு பகுதி சுங்க வரி வசூலிக்காத துறைமுகமாக (Free Port) அமைந்திருக்கிறது. இதன் காரணமாக, பல நாட்டு வர்த்தகர்களும் அங்கு பொருள்களைச் சேமித்து வைத்திருக்கிறார்கள். அப் பொருள்களை ஜெர்மன் நாட்டுக்குள் கொண்டு போவதாக இருந்தால், சுங்க வரி செலுத்த வேண்டும். மறுபடியும் வெளி நாடுகளுக்கு எடுத்துச் செல்வதாயிருந்தால் சுங்கவரி கிடையாது. துறைமுகத்தைச் சுற்றிப் பார்த்து வரும் போது, நம் நாட்டுக் கப்பல் ஒன்றும் நம் தேசியக் கொடி பறக்க நங்கூரம் பாய்ச்சி இருந்ததைக் கண்டு பெருமைப் பட்டுக் கொண்டேன். ஆனால் மருந்துக்கு ஒன்று என்று சொல்வார்களே, அப்படி ஒரே ஒரு கப்பல்தான் நம்முடையதாக இருந்தது. வேறு நாட்டுக் கப்பல்கள் பல அங்கு நின்று கொண்டிருந்தன.

ஒரு நாட்டின் அந்நியநாட்டு வர்த்தகத்திற்கு வியாபாரக் கப்பல்கள் மிகவும் முக்கியமானவை. வெளிநாட்டுக் கப்பல்களை நம்பி வியாபாரத்தை நல்ல முறையில் விரிவாக நடத்துவது கஷ்டம். இதை ஒட்டித்தான், கொச்சியில் இரண்டாவது கப்பல் கட்டும் தளம் அமைக்க, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்பாடு செய்துள்ளோம்.

அன்று பகல் விமானம் மூலம் புறப்பட்டுப் புகழ்பெற்ற பெர்லின் நகரத்திற்குச் சென்றோம். பெரிய வரவேற்பு அங்கு எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தது. காரிலே இந்திய தேசியக் கொடியும், ஜெர்மன் கொடியும் பறக்க விடப்பட்டு, நாங்கள் நகரத்திற்குள் அழைத்துச் செல்லப்பட்டோம். அங்கும் புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஓட்டலில் தங்க வசதி செய்திருந்தார்கள். பிற்பகல் பெர்லின் நகரைச் சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய்திருந்தார்கள். நகரின் பல பகுதிகளைக் காண்பிப்பதற்கு, இதற்கென்று பயிற்சி பெற்ற வழிகாட்டியாக ஒரு பெண்மணியை எங்களுடன் அனுப்பி வைத்தார்கள்.

பெர்லின் நகரம் புதிதாக அமைக்கப்பட்ட ஒரு நகரமாகக் காட்சி அளித்தது. அகன்ற சாலைகள், பிரமாண்டமான புதிய கட்டடங்கள். இவை அனைத்தும் ஏற்படுவதற்கு யுத்தம் தான் வழி செய்தது! நேச நாடுகளின் விமானங்கள், பெர்லின் நகரின் பெரும் பகுதியை நிர்த்தூளியாக்கி விட்டிருந்தன. ஆகவே நகரத்தை முழுவதும் புதிதாக அமைக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது அவர்களுக்கு. அப்பணியையும் யுத்தம் முடிந்த உடனே எடுத்துக்கொள்ள முடியவில்லை. மேற்கு ஜெர்மனியில் இருந்த மற்ற பாழ்பட்ட நகரங்களைக் கட்டி முடித்த பின்னர்தான், பெர்லின் நகரின் புதிய நிர்மாணம் துவக்கப்



பட்டது. ஆகவே மற்ற நகரங்களில் ஏற்பட்ட அனுபவங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு பெர்லின் நகர புனரமைப்புக்கான நல்லதொரு திட்டத்தை அவர்களால் வகுக்க முடிந்தது. மேற்கத்திய நாடுகள் ஒவ்வொன்றும் பெர்லின் நகரைப் புதுப்பிக்கப் போட்டி போட்டுக்கொண்டு உதவியிருக்கின்றன. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு பகுதியை அமைக்க உதவியிருக்கின்றது.

பெர்லின் நகருக்கு மத்தியில் மிகப் பெரிய சாலை ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. அது ஹிட்லர் காலத்தில் அமைந்தது. தனது படை வெற்றியுடன் திரும்பி வருவதற்காக ஹிட்லர் அச்சாலையை ஏற்படுத்தினாராம்! ஆனால் விதியின் கூற்று எதிரியின் படைகளுக்கே அச்சாலையைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு கிட்டியது.

கிழக்கு பெர்லினையும் நாங்கள் பார்க்க ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த இரண்டு பகுதிகளுக்கும் இடையே எல்லை வகுக்கப் பட்டிருந்தது. அனுமதியில்லாமல் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குப் போக முடியாது. ஒவ்வொருவருடைய பாஸ் போர்ட், அனுமதிச் சீட்டு இவற்றைக் காண்பித்துத் தான் கிழக்கு பெர்லினுக்குள் போக முடியும்.

கிழக்கு பெர்லினுக்குள் போகும்போதுதான் எனது பாஸ் போர்ட்டை எடுத்துக்கொள்ள மறந்துவிட்டேன். 'சரி, கிழக்கு பெர்லினுக்குப் போகாமல் திரும்பிவிட வேண்டியது தான்' என்று நினைத்தேன். இருந்தாலும் முயன்று பார்க்கலாம் என்று எண்ணி, கிழக்கு பெர்லின் எல்லையை அடைந்தேன்.

நான் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் மாறாக, நாங்கள் இந்தியாவிலிருந்து வந்திருக்கிறோம் என்று சொன்னவுடனேயே, ஒன்றுமே பேசாமல் எங்களை கிழக்கு பெர்லினுக்குள் போக அனுமதித்து விட்டார்கள். அங்கு இந்தியர்களுக்கு இருக்கும் மதிப்பை எண்ணி, என் உள்ளம் உவகை அடைந்தது.

மேற்கு பெர்லினில் காணக்கூடிய காட்சி வேறு, கிழக்கு பெர்லினில் காணக்கூடிய காட்சி வேறு. கிழக்கு பெர்லினில் இடிந்து பாழடைந்த கட்டடங்கள், செப்பனிடப்படாத பாதைகள் இவைதான் பெரிதும் காணப்படுகின்றன.

மேற்கு பெர்லினில் மக்கள் அனைவரும் நல்ல உடை உடுத்தி, கோலாகலமாக இருக்கும் காட்சியைக் காணலாம். எங்கு பார்த்தாலும் ஏராளமான கடைகள்; கடைகளில் எண்ணற்ற பொருள்கள்! இவை ஒன்றையும் கிழக்கு பெர்லினில் காண முடியாது. ஒரு பெரும் சாலையை மட்டும் நன்கு அமைத்து, அதன் இரு புறங்களிலும் உள்ள கட்டடங்களையும் புதுப்பித்து, அதற்கு ஸ்டாலின் பெயரை வைத்திருக்கிறார்கள். அங்கும் நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். எங்களுக்கு வழிகாட்ட வந்திருந்த பெண்மணி, 'இந்தக் கட்டடங்கள்



கட்டிஇரண்டுமூன்று வருடங்கள்தான்ஆகின்றன. அதற்குள் காரையெல்லாம் பெயர்ந்திருக்கும் அவல நிலையைப் பாருங்கள்' என்று எங்களுக்குக் காண்பித்தார்.

ஹிட்லர் வசித்து வந்த பகுதிக்கும் சென்றிருந்தோம். கழுதை மேயும்பாழடைந்தகோலம்தான் இன்றைக்குஅங்கு தென்படுகிறது. இருந்தாலும்ஹிட்லர் காலத்தில் அது எவ்வாறு இருந்திருக்குமென்று ஒருவாறு ஊகித்துக் கொள்ள முடிந்தது.

பெர்லின்நகரம் விமானத்தாக்குதலுக்கு உட்பட்டபோது எல்லாக்கட்டடங்களும் நாசமாக்கப்பட்டன. மாதாகோயில்களும் இதற்கு விலக்கல்ல. இப்போது மேற்கு பெர்லினில் புதிய புதிய மாதா கோயில்கள் புதிய பாணியில் கட்டப்பட்டிருப்பதைக் கண்டேன். ஒருபெரியமாதாகோயில் நாசமாக்கப் பட்டிருந்தது. நாசமடைந்த அந்தச் சின்னங்களை அப்படியே வைத்துக்கொண்டு, அதன் பக்கத்தில் புதிய கோயில் ஒன்றைக் கட்டியிருந்தார்கள். 'பாழடைந்த பகுதியை ஏன் அப்படியே வைத்திருக்கிறீர்கள்?' என்று கேட்டேன். 'யுத்த கால அட்டூழியத்தை மக்கள் புரிந்துகொள்ள' என்று பதில் அளித்தார்கள்.

இதைப்போலத்தான்இங்கிலாந்திலும்கூட கவன்ட்ரிநகரில்ஒரு பிரசித்திபெற்ற மாதா கோயிலை நாசமாக்கப்பட்ட நிலையில் அப்படியே மாற்ருது வைத்துக்கொண்டு, அதன் பக்கத்திலேயேபிரமாண்டமானபுதியகோயில் ஒன்றைக்கட்டிக் கொண்டிருந்தார்கள். அங்கும் இதே காரணம்தான் கூறப் பட்டது.

கவன்ட்ரியில் இதுபற்றி இன்னொரு நிகழ்ச்சியையும்குறிப்பிட்டார்கள். ஜெர்மானிய மக்கள் சிலர் அந்த மாதாகோயிலுக்கு வந்து, பாழடைந்த நிலையைக் கண்டனர். கண்டதும் மனமிளகி, கண்ணீர் விட்டு, மண்டியிட்டு, 'ஆண்டவனே, இன்னொரு யுத்தம் வராமல் எங்களைக் காப்பாற்று. எங்கள் நாட்டு மக்கள் செய்த கொடுமைகளை மன்னித்துவிடு' என்று பிரார்த்தித்தார்களாம். அந்தக் காட்சி எல்லோர்மனத்தையும் உலுக்கி விட்டதாம்.

அன்றிரவு பெர்லினில் ஒரு நாடகம்பார்க்கச் சென்றிருந்தோம். 'ரோமியோ அண்ட் ஜூலியட்' என்ற ஷேக்ஸ்பியர் நாடகத்தை நடித்துக் காண்பித்தார்கள். அத்துடன் ஒரு நடன நிகழ்ச்சியும் காண்பிக்கப்பட்டது. இசையும், நடிப்பும், காட்சி அமைப்பும் உயர்தரமாகவே இருந்தன.

நம் நாடு பிரிக்கப்பட்ட போது பெருவாரியான மக்கள் பாகிஸ்தான் பகுதியிலிருந்து இந்தியாவுக்கும், இந்தியாவிலிருந்துபாகிஸ்தானுக்கும் சென்றதன்காரணமாக, அகதிகள் பிரச்னை ஏற்பட்டு, அது இன்னும் நீடித்து வருவதைக்காண்கிறோமல்லவா? இம்மாதிரியான அகதிகள்பிரச்னை ஜெர்மனியிலும் ஏற்பட்டுள்ளது. ஆனால் ஒரு வித்தியாசம். கிழக்குப்



பகுதியில் இருக்கும் மக்கள்தாம் மேற்குப் பகுதிக்குப் போகிறார்கள். மேற்குப் பகுதியிலிருந்து கிழக்குப் பகுதிக்குப் போன மக்கள் கிடையாதென்று சொல்கிறார்கள்.

ஆரம்ப காலத்தில் தினமும் பல்லாயிரக் கணக்கான மக்கள் பல பகுதிகளிலிருந்தும் எல்லையைத் தாண்டி கிழக்கு ஜெர்மனியிலிருந்து மேற்கு ஜெர்மனிக்கு வர ஆரம்பித்தார்கள். அவ்வாறு எல்லையைக் கடந்து செல்வது சட்ட விரோதம். ஆனால் மேற்கு ஜெர்மனிக்குள் போய்விட்ட பின்னர், கிழக்கு ஜெர்மனி நிர்வாகம் எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியாது. இப்படிப் பல லட்சக்கணக்கான மக்கள் இடம் பெயர்ந்து, மேற்கு ஜெர்மனிக்குள் சரண் புகுந்துள்ளார்கள். இவர்கள் எல்லோரும் சொத்து, வீடு, வாசல் அனைத்தையும் விட்டு விட்டு வரவேண்டியதா யிருந்தது.

இந்த அகதிகள் புதிதாக வாழ்வை அமைத்துக் கொள்ள, மேற்கு ஜெர்மன் சர்க்கார் நல்ல ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள். புதிய புதிய தொழில்களில் வேலை வாய்ப்பு ஏற்பாடு செய்து கொடுப்பதும் அவர்களுக்குச் சுலபமாக இருந்தது. இப்படி மக்கள் இடம் பெயர்ந்து, குடியேறிச் செல்வதைத் தடுப்பதற்கு, எல்லை முழுவதும் முள் வேலி அமைத்து ராணுவப் பாதுகாப்பும் போட்டிருக்கிறார்கள். ஆனால் இன்றும் கிழக்கு பெர்லினிலிருந்து மேற்கு பெர்லினுக்கு வருவது ஓரளவு முடிகிற செயலாகத்தான் இருக்கிறது. 'வாரத்திற்கு ஆயிரமாயிரம் மக்கள் இன்றைக்கும் மேற்கு பெர்லினுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்' என்று அங்கிருக்கும் அதிகாரிகள் கூறுகிறார்கள்.

மேற்கு பெர்லினிலிருந்து இந்த அகதிகளை மேற்கு ஜெர்மனிக்குத் தரை மார்க்கமாக அழைத்துச் செல்ல முடியாது. கிழக்கு ஜெர்மன் பகுதிக்குள் கால் வைத்தாலும், இந்த அகதிகளை, சட்டப்படி நாடு விட்டு ஓடியதற்காக கிழக்கு ஜெர்மன் சர்க்காரால் கைது செய்ய முடியும். ஆகவே இந்த அகதிகளை பெர்லினிலிருந்து விமானம் மூலமாகத்தான் அப்புறப் படுத்துகிறார்கள். இவ்வாறு வருகின்ற அகதிகளை அப்புறப்படுத்துகின்ற வரையில், அவர்கள் தங்குவதற்கான முகாம் ஒன்றும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆயிரக் கணக்கான மக்கள் சௌகரியமாக அங்கு தங்குவதற்கு வசதிகள் செய்துள்ளனர். இந்த முகாமுக்கும் நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். அங்கிருந்த மக்களைப் பார்ப்பதற்கே கொஞ்சம் பரிதாபமாகத்தான் இருந்தது. வீடிழந்து, வாசலிழந்து, சொத்திழந்து, சுகமிழந்து, சில பேர் குடும்பங்களையும் இழந்து, அங்கிருந்த காட்சி, பார்ப்பவர் மனத்தைக் கொஞ்சம் கலக்கத்தான் செய்யும். அங்கு வருகின்ற அகதிகளை விசாரித்து, எந்த முறையில் உதவி புரிய வேண்டும் என்பதை நிர்ணயிக்க, விசாரணைக் கமிஷன்களை நியமித்துள்ளார்கள். ஒவ்வொரு கமிஷனிலும் இந்தப் பிரச்னையில் அனுபவம் உள்ள மூன்று பேரை, பொது



மக்களிலிருந்து தேர்ந்தெடுத்து பணியாற்றும்படிச் செய்திருக்கிறார்கள்.

நாங்கள் சென்றிருந்தபோது கிழக்கு ஜெர்மனியிலிருந்து வந்திருந்த ஒரு தாயையும் மகனையும் விசாரணை செய்துகொண்டிருந்தார்கள். அந்த அம்மாளின் கணவன் ஒரு பெரிய தொழிற்சாலை நடத்திக் கொண்டிருந்தாராம். அவர் இருக்கின்ற வரையில் அந்தத் தொழிற்சாலையை பல கட்டுப்பாடுகளுக் கிடையே நடத்தி வந்தார். நகைசெய்யும் தொழிற்சாலை அது. அவர் இறந்ததும் அந்தத் தொழிற்சாலையை சர்க்காரே எடுத்துக்கொண்டு விட்டார்கள். அந்த அம்மாளுக்கும், ஒரு முதலாளியின் மனைவி என்ற காரணத்தால் இன்னல்கள் பல இழைக்க ஆரம்பித்தார்களாம். மகனுக்கும் அதே கதி! காரணம், அவன் ஒரு முதலாளியின் மகன்! அவனுக்கு மேல் படிப்புக்கு வசதி செய்து தர மறுத்து விட்டார்கள். ஏதாவது சலுகைகள் வேண்டுமென்று கேட்டால் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தால்தான் கிடைக்கும் என்று சொல்லிவிட்டார்களாம்! இதன் காரணமாக இருவரும் பலநாள் திட்டமிட்டு, கடைசியில் ஓடிவந்து விட்டதாகச் சொன்னார்கள்.

கமிஷன் அதிகாரிகள் பல குறுக்குக் கேள்விகள் கேட்டு, உண்மையைத் தெரிந்துகொள்ள முயன்றார்கள். சில சமயம், உளவாளிகளும் அகதிகள் போல் வந்து விடுவதால், உண்மையான அகதிகளா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம் என்பதை எடுத்துச் சொன்னார்கள். அத்துடன், எந்த விதமான உதவி அளிக்க வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ள, ஒவ்வொரு அகதியினுடைய முன் வாழ்க்கையையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம் என்று விளக்கினார்கள். விசாரணை முடிந்த பின்னர், கமிஷன் இவர்களை எங்கு அனுப்ப வேண்டும், எந்தவிதமான உதவி கொடுக்க வேண்டும் என்பது பற்றி சர்க்காருக்கு சிபாரிசு செய்கிறது.

''இவர்கள் விஷயத்தில் என்ன சிபாரிசு?'' என்று கேட்டேன்.

''இந்த அம்மாள் இன்னொரு நகைக்கடை வைத்து வியாபாரம் செய்ய உதவ வேண்டும் என்றும், இளைஞனின் மேற் படிப்புக்கான வசதிகள் செய்து தரவேண்டும்'' என்றும், சிபாரிசு செய்துள்ளதாகச் சொன்னார்கள். ''இளைஞன் படித்த பின் நகைத் தொழிலை நடத்துவதற்குத் தேவையான வசதிகள் செய்து தரப்படும்'' என்றும் சொன்னார்கள். ''இவ்வளவு மக்கள் குடி பெயர்ந்து வருவதை எப்படி சமாளிக்கிறீர்கள்?'' என்று விசாரித்த போது, ''எத்தனை மக்கள் வந்தாலும் வேலை வாய்ப்புக்கள் நிறைய இருக்கின்ற காரணத்தினால், அது ஒரு பெரிய பிரச்னையாக இல்லை'' என்பதையும் எடுத்துச் சொன்னார்கள். யுத்தமும் சூதாட்டமும் ஒன்றே. சூதாட்டத்தில் ஈடு பட்டிருக்கிறவன், எல்லா சொத்தையும் இழக்கின்ற வரையில்



ஏதாவது ஒரு ஆட்டத்தில் தனக்கு அதிர்ஷ்டம் அடித்து விடாதா என்ற எண்ணத்திலேயே தொடர்ந்து அதில் ஈடுபட்டுக் கொண்டிருப்பான். யுத்தத்தில் ஈடுபடுகின்றவர்களும் அவ்வாறேதான். அதில் அகப்பட்டுக் கொள்கிறவர்களின் நிலையும் அதுதான். தோல்வி அடையும் நிலை ஏற்பட்டால்கூட, கடைசி வரை போராடிப் பார்ப்போம் என்கிற மனப்பான்மை தான் மேலோங்கி நிற்கும். ஹிட்லரும் இதற்கு விலக்காக இருக்கவில்லை. இனி வெற்றி காணமுடியாது என்கின்ற நிலை ஏற்பட்ட பிறகும், சமாதானத்திற்கு வழி தேடாமல் தொடர்ந்து யுத்தத்தை நடத்திக்கொண்டே போனார். அதன் காரணத்தினால்தான், நேச நாடுகள் ஜெர்மனியின் பலத்தை அழிப்பதற்கு எல்லா நடவடிக்கைகளையும் தீவிரமாக எடுக்க நேரிட்டது.

ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான குண்டு வீசும் விமானங்கள் ஜெர்மனிக்குள் பறந்து சென்று நகரங்களையும் தொழிற் பிரதேசங்களையும் நிர்மூலமாக்கி வந்தன. கடைசியில் 1945ல் யுத்தம் நிறுத்தப் பட்டபோது, ஜெர்மன் நாடு, முழுவதுமே பாழடைந்த நிலையை அடைந்தது. இந்தக் கேடான நிலைக்கு மத்தியில், நாடும் துண்டாக்கப்பட்டது. வெற்றியுடன் ஜெர்மனிக்குள் புகுந்த வெவ்வேறு நாட்டுப் படைகள், ஆங்காங்கு தொழிற்சாலைகளில் எஞ்சியிருந்த ஒரு ஆணியையும் கூட விடாமல் அப்புறப்படுத்தி விட்டார்கள். இனி ஜெர்மனி தலையெடுக்க முடியாது என்றுதான் எல்லோரும் சொன்னார்கள்.

யுத்தம் நிறுத்தப்பட்டு இன்று பதினைந்து ஆண்டுகள்தான் கழிந்திருக்கின்றன. தற்போது ஜெர்மனியைப் போய்ப் பார்த்தால், யுத்தத்தில் ஈடுபட்டிருந்த நாடாகவோ, அதில் தோல்வியுற்றுச் சீரழிந்த நாடாகவோ தோன்றாது. எங்கு பார்த்தாலும் பெரும் தொழிற்சாலைகள், நகரங்களிலே புதிய புதிய கட்டடங்கள், நன்கு அமைக்கப்பட்ட பூங்காக்கள், சாலைகள்! உலகிலேயே தொழிற் துறையில் மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கிற நாடு என்கிற நிலை ஏற்பட்டுள்ளது. இவ் வுயர் நிலையை அவர்கள் எவ்வாறு எய்தினார்கள்?

இதைத்தான் ஜெர்மன் அதிசயம் (German Miracle) என்று சொல்கிறார்கள். இக் கருத்தை நான் ஒரு ஜெர்மன் தலைவரிடம் கூறியபோது, ' இது அதிசயமல்ல, ஜெர்மன் மக்களின் சாதனை ' என்று பெருமையுடன் சொன்னார். இதை எவ்வாறு சாதித்தார்கள் என்பது நமக்கு ஒரு படிப்பினையாக அமைந்துள்ளது. யுத்தத்தில் பொருளெல்லாம் இழந்து, வறுமை நிலையிலிருந்த மக்களுடைய வாழ்க்கையைப் புதுப்பிக்க வேண்டும் என்கிற கொள்கையை, அமெரிக்கா நிர்ணயித்தது. அதற்காக மேற்கு ஜெர்மனிக்குப் பெருமளவில் உதவி செய்ய 'மார்ஷல் எய்ட்' என்ற ஒரு திட்டத்தையும் அது வகுத்தது. கோடிக்கணக்கான டாலர்கள் ஜெர்மனிக்கு உதவியாகக்



கொடுக்கப்பட்டது. இந்த உதவியை ஜெர்மன் மக்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டார்கள். 'ஜெர்மனிக்கு ஒரு புது வாழ்வு ஏற்பட வேண்டும் என்று சொன்னால், நாம் அயராது உழைக்க வேண்டும்' என்று ஜெர்மனியில் உள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் உறுதி பூண்டனர். எவ்வளவு மணி நேர வேலை என்று கணக்குப் போட்டுக்கொண்டு, தொழிலாளர்கள் பணி புரியவில்லை. இரவு பகல் என்று பாராது ஓய்ந்து போகும் வரையில் உழைப்போம் என்று தொடர்ந்து கடுமையாகவும், திறமையாகவும் உழைத்தார்கள். இன்னொருவர் மேற்பார்வையில் தான் நாம் நம் வேலையை சரிவரச் செய்ய வேண்டும் என்ற மனப்பான்மை அங்கு ஏற்படவில்லை. தனக்கேற்பட்ட கடமையை நன்கு செய்து முடிக்க வேண்டும் என்கின்ற ஒரே நோக்கத்துடன் தான் அவர்கள் உழைத்தார்கள்.

வெறும் உழைப்பு அடிப்படையில் மட்டும் பெரும் காரியங்களைச் சாதித்திருக்க முடியாது. யுத்தத்தில் நாடு அழிந்திருந்தாலும், எஞ்சி யிருந்த மக்களின் அறிவு அழிக்கப்படவில்லை. ஆகவே, ஜெர்மனியில் விஞ்ஞானிகள், தொழில் நுட்ப வல்லுநர்கள் ஆகியோர் புதிய புதிய ஆராய்ச்சிகளை மேற்கொண்டனர். விஞ்ஞான அறிவையும், தொழில் நுட்பத்தையும், கடினமான உழைப்புடன் இணைத்தனர். இந்த இணைப்புத்தான், ஜெர்மனியில் புதியதொரு அற்புதத்தைச் சாதித்திருக்கிறது.

யுத்த காரணத்தினால் ஏற்பட்ட அழிவையே, தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். பாழ்பட்ட நகரங்களை, புதிய முறையில் எல்லாவித சௌகரியங்களையும் அமைத்துக்கொள்ளும் முறையில் நிர்மாணித்துக்கொண்டார்கள். முன்பு சேரிகள் போல் இருந்த இடங்களெல்லாம், இன்று மிகச் சிறந்த முறையில் மாற்றி அமைக்கப்பட்டிருக்கின்றன.

அதேபோல், பழைய இயந்திரங்களெல்லாம் அழிந்து போனதாலும், பிறநாட்டினரால் எடுத்துக் கொண்டு போகப் பட்டதாலும், அவர்கள் புதிய புதிய தொழிற்சாலைகளை அமைக்க வேண்டியதாயிற்று. தொழிற்சாலைகளைத் தகுந்த இடங்களில் அமைக்க முடிந்தது. இயந்திரங்களைப் புதிய முறையில் சிருஷ்டித்தார்கள். அதன் காரணமாக, இன்றைக்குத் தொழிற் துறையில் வேறு எந்த நாட்டுடனும் போட்டி போடக்கூடிய அளவுக்கு உற்பத்திபெருக வழி ஏற்பட்டுள்ளது.

இன்னொரு முக்கியமான வசதியும் ஜெர்மன் நாட்டுக்கு ஏற்பட்டுள்ளது.

யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்ட நாடு என்கிற முறையில் அதற்கு ஏற்பட்ட கட்டுப்பாட்டின் காரணமாகவே அந்த வசதி ஏற்பட்டது. ஜெர்மன் மக்களுக்கு இன்று ராணுவத்திற்கான ஆயுதங்களை உற்பத்தி செய்யும் உரிமை கிடையாது. அவர்கள் யுத்தக் கப்பல்கள் கட்ட முடியாது, யுத்த விமானங்கள் செய்ய முடியாது. அணுகுண்டு தயாரிக்கும் ரகசியம்



ஜெர்மானியரிடமிருந்து தான் உதயமாயிற்று என்று சொன்னாலும் கூட, அவர்கள் அப்பணியில் ஈடுபட முடியாது. இதன் காரணமாக நாட்டின் பொருளாதார வசதி முழுவதும், மக்களின் சக்தி முழுவதும், ஆக்கத் துறையில் பயன்பட ஏதுவாகியுள்ளது. ராணுவத்திற்காகச் செலவிடும் பணம், சக்தி ஆகியவற்றை ஆக்கவேலைக்குப் பயன்படுத்தினால், எந்த அளவுக்கு முன்னேற்றம் காணமுடியும் என்பதற்கு, ஜெர்மனி இன்றைக்கு நல்ல எடுத்துக்காட்டாக விளங்குகிறது. மக்களுடைய வாழ்க்கைத் தரமும் பெரும் அளவில் உயர்ந்திருப்பதை இன்று அங்கு காண முடிகிறது. ஐரோப்பாவிலேயே சிறந்த பொருள்கள், மலிவான விலைக்கு ஜெர்மனியில்தான் கிடைக்கின்றன என்பதைக் காண்கிறோம்.

மிகவும் கீழான நிலையில் இருக்கும் நம் நாடு முன்னேற வேண்டும் என்று சொன்னால், கடினமான, நேர்மையான உழைப்பு அவசியம். அந்த உழைப்புடன் விஞ்ஞான அறிவும் தொழில் நுட்பமும் இணைக்கப்பட வேண்டும். வறுமையின் காரணமாகப் பெருமளவில் முதலீடு செய்யக் கூடிய சக்தி நம்மிடம் இல்லாத காரணத்தினால், அதை ஈடு செய்யும் அளவுக்கு வெளி நாட்டு உதவி தேவை. இந்த வசதிகளெல்லாம் பொருளாதார உயர்வுக்குப் பயன்பட வேண்டும் என்று சொன்னால், ராணுவச் செலவு ஏற்படாமல் இருக்க வேண்டும். இந்தச் சூழ்நிலையை ஏற்படுத்தினால்தான், நம் நாட்டிலும் வேகமான முன்னேற்றத்தை நாம் காண முடியும்.

அக்டோபர் மாதம் பத்தாம் தேதி அன்று விமானம் மூலம் பெர்லின் நகரிலிருந்து, தற்போது மேற்கு ஜெர்மனியின் தலை நகராக விளங்கும் 'பான்' நகருக்குப் புறப்பட்டோம். பெர்லின் நகர விமான நிலையம், நகரத்திற்கு மையத்தில் அமைந்திருக்கிறது. உலகத்தில் வேறு எந்த விமான நிலையமும் இவ்வாறு பெரியதொரு நகரத்திற்கு மத்தியில் அமைந்திருக்கவில்லை என்று சொல்கிறார்கள்.

ஜெர்மன் மக்கள் தங்கள் நாடு பிரிந்திருப்பது தாற்காலிகமானதென்றே கருதுகிறார்கள். கூடிய விரைவில் ஒன்றுபட்டு விடுவோம் என்று அவர்கள் நம்பிக்கை கொண்டுள்ளார்கள். அவ்வாறு ஒன்று கூடும்போது, மறுபடியும் பெர்லின் நகரம் தான் தங்கள் தலைநகரமாக அமையும் என்கிற அடிப்படையில் தான் மேற்கு ஜெர்மனிக்கு தாற்காலிகத் தலைநகரமாக 'பானை'த் தேர்ந்தெடுத்துள்ளார்கள்.

பான் ஒரு சிறிய நகரம். அது ரைன் நதிக்கரையில் அமைந்துள்ளது. ஒரு சர்வகலாசாலையைத் தவிர, வேறெவ்விதச் சிறப்பும் அந்நகருக்கு முன்பு கிடையாது. இருப்பினும் வேறு பல நகரங்களுக்குள் ஏற்பட்ட போட்டியின் காரணமாக, மேற்கு ஜெர்மனிக்குத் தலைநகராக விளங்கும் வாய்ப்பு இந்நகருக்கு ஏற்பட்டது ; ஆந்திரப் பிரதேசத்துக்கு கர்னூல் ஒரு சில

காலம் தலைநகராக அமைந்ததுபோல, ஒரு சில ஆண்டுகளுக்குள் தலைநகரைத் திரும்பவும் பெர்லினுக்குக் கொண்டுபோய் விடலாம் என்ற எண்ணத்துடன்தான் புதிய வசதிகளை விரிவாக பான் நகரில் அவர்கள் அமைக்கவில்லை.

பான் நகருக்குத் தனி விமான நிலையம் கூடக் கிடையாது. கலோன் நகர விமான நிலையத்தில் இறங்கி இருபது மைலுக்கு மேல் சாலை வழியாகச் சென்றுதான் பான் நகரை அடைய வேண்டும். கலோன் விமான நிலையத்தில் நாங்கள் இறங்கிய போது, இந்திய தூதுவராலய அதிகாரிகளும், மேற்கு ஜெர்மனி அரசாங்கப் பிரதிநிதிகளும் எங்களை வரவேற்று பான் நகருக்கு அழைத்துச் சென்றார்கள். ரைன் நதிக்கரையில் புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஒரு பெரிய ஓட்டலில் நாங்கள் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள்.

மேற்கு ஜெர்மனியின் பொருளாதார அபிவிருத்திக்குத் திட்டம் வகுத்தவர், பேராசிரியர் எர்ஹார்ட் என்ற பொருளாதார அமைச்சர். முதலாளித்துவ முறையில், ஒருவருக்கொருவர் போட்டி அடிப்படையில் தான் ஜெர்மனி முன்னேற்றம் காண முடியும் என்கின்ற கொள்கையைக் கொண்டவர் அவர். அந்தக் கருத்தை விளக்கி அவர் எழுதியிருக்கக் கூடிய நூல்கள் பிரசித்தி பெற்றவை. சிலர் நம் நாட்டிலும் அவ்வாறே கட்டுப் பாடுகள் இன்றி, போட்டி அடிப்படையில் தொழில்கள் ஏற்படுவதற்கும், இயங்குவதற்கும் விட்டுவிட வேண்டுமென்று சொல்கிறார்கள்.

ஆனால் இவர்கள் ஜெர்மனிக்கும், நம் நாட்டுக்கும் உள்ள பெரிய வித்தியாசத்தை மறந்து விடுகிறார்கள். ஜெர்மன் மக்களின் விஞ்ஞான அறிவும், தொழில் நுட்பமும் உலகத்திலேயே சிறப்புப் பெற்றவை. அவற்றை நடைமுறையில் கொண்டு வருவதிலும் நல்ல அனுபவம் பெற்றவர்கள் அவர்கள். ஆகவே, அந்நிய நாட்டு உதவியைக் கொண்டு ஓரளவு தொழில்கள் ஏற்படக் கூடிய நிலை ஏற்பட்டவுடன், அதை அடிப்படையாகக் கொண்டு வேகமாகப் பல தொழில்களை அமைக்கக்கூடிய சக்தி ஜெர்மனிக்கு ஏற்பட்டது.

நம் நாடு விஞ்ஞானத் துறையிலும், தொழில் நுட்ப முறையிலும் பின்னணியிலேயே இருக்கிறது. மக்களுடைய சராசரி வருமானமும் மிகக் குறைவு. வறுமையின் காரணமாக உழைக்கும் சக்தியும் குறைவு, சேமிக்கும் சக்தியும் குறைவு. ஆகவே, தொழில்களுக்கான மூலதனத்தைச் சேர்ப்பது ஓரளவுக்குத் தான் முடியும். நமக்கு வேண்டிய பல்வேறு முக்கிய இயந்திரங்களையும் வெளிநாடுகளிலிருந்து தான் தற்போது பெறவேண்டியிருக்கிறது. இவ்வாறு இருக்கின்ற நிலையில், ஜெர்மன் அனுபவ அடிப்படையில் நாம் இயங்க விரும்புவது, 'கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழிக்கு'த்தான் சமமாகும்! அடிப்படையாக உள்ள உழைப்பு, விஞ்ஞான அறிவு, தொழில் நுட்பம் இவற்றைப் பயன் படுத்திக்கொள்வது ஒருபுறமிருக்க,

எந்த முறையில் இவற்றைப் பயன்படுத்தித் தொழில் அபி விருத்தி செய்ய வேண்டும் என்பதை நம் நாட்டுச் சூழ்நிலைக்கு ஏற்ப அமைத்துக் கொள்வது மிகவும் அவசியம். ஆகவேதான், நம்நாட்டுக்குஏற்றதிட்டங்களைவகுக்க நாம்முற்பட்டுள்ளோம்.

பொருளாதார அமைச்சர் பேராசிரியர் எர்ஹார்ட் அவர்களைச் சந்தித்துப் பேசுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால் திடீரென்று அப்போது ஏற்பட்டிருந்த பெர்லின் நெருக்கடி ஒன்றின் காரணமாக, முக்கிய அமைச்சர்கள் எல்லோரும் ஒரு மகாநாட்டுக்குப் போகவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. ஆகவே அவரைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. ஆனால், அவர் காரியாலயத்தில் உள்ள எல்லா நிபுணர்களையும் கண்டு, முக்கியமாக மேற்கு ஜெர்மனி, இந்தியாவின் அபிவிருத்திக்கு எவ்வாறு உதவ முடியும் என்பது பற்றி விவாதிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் டாக்டர் வெஸ்ட்ரிக் (Doctor Westrick) என்பவர். சமீபகாலத்தில் அவர் இந்தியாவுக்கு வந்து திரும்பி இருந்தார். அத்துடன் சென்னைக்கும் வந்து, சென்னையில் மேற்கு ஜெர்மனி உதவியுடன் நிர்மாணிக்கப் பட்டு வரும், இந்தியத் தொழில் நுட்ப ஸ்தாபனத்தைப் (Indian Institute of Technology) பார்க்க வந்திருந்தார். மேற்கு ஜெர்மனியிடமிருந்து இந்தியாவுக்குப் பெரிய அளவில் உதவி வரவேண்டிய அவசியத்தை அவர் உணர்ந்திருப்பதாகத் தெரிந்தது. அதற்கான சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும் என்று மிகவும் வற்புறுத்தினார்.

மேற்கு ஜெர்மன் நாட்டினர் நம்மிடமிருந்து எந்த விதமான பொருள் உதவியும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் ஜெர்மன் பிரச்னைகளை அனுதாபத்துடன் நோக்கி, அப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண, உலக அரங்கில் நம் நாட்டுக்கு உள்ள செல்வாக்கைப் பயன்படுத்த வேண்டுமென்றுதான் அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். அதிலும் முக்கியமாகப் பிளவு பட்ட நாட்டை ஒன்று படுத்துவதில் நம் போன்ற நடு நிலை நாடுகளின் உதவி பெரிதும் சாதகமாக இருக்கும் என்று ஜெர்மானியர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

சமீபத்தில் மேற்கு ஜெர்மனி பிரதிநிதிகள் டெல்லிக்கு வந்து, நம் அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பெரிய அளவில் உதவ முன் வந்திருப்பதை நாம் அறிவோம். இந்தியாவுக்கும் ஜெர்மனிக்கும் உள்ள தொடர்பு மேன்மேலும் உறுதிப்படும் என நம்ப இடம் உள்ளது.

ஜெர்மன் நாட்டில் ரூர் பள்ளத்தாக்கு என்பது தான் பிரசித்தி பெற்ற தொழிற் பகுதி. 'பான்' நகரிலிருந்து இப் பகுதிக்குச் சென்று, அங்கிருக்கக் கூடிய பல தொழிற் கூடங்களைக் காண ஏற்பாடு செய்திருந்தார்கள்.

அங்கெல்லாம் மைல் கணக்கு கிடையாது. இப்போது நம் நாட்டில் நாம் புதிதாக ஏற்றுக்கொண்டிருக்கும் மீட்டர் அளவு

தான் அங்கு உபயோகப் படுத்தப் படுகிறது. தூரங்களைக் கிலோமீட்டர் அளவில்தான் குறிப்பிடுகிறார்கள். ஒரு மைல் என்பது ஏறக்குறைய ஒன்றரை கிலோமீட்டர்.

பானிலிருந்து ஒவ்வொரு தொழிற்சாலைக்கும் போவதற்கு தூரத்தைக் குறிப்பிட்டு, அங்கு காரில் போவதற்கான நேரத்தையும் குறிப்பிட்டிருந்தார்கள். அதைப் பார்த்தபோது, நான் திடுக்கிட்டேன். மணிக்கு சராசரி எழுபது மைலுக்கு மேல் போனால்தான் குறித்த காலத்தில் போய்ச் சேர முடியும். இது சாத்தியம்தான் என்பதை முதல் நாளிலேயே உணர்ந்தேன். அதற்கு ஏற்ற முறையில் தான் அங்கு சாலைகள் அமைக்கப் பட்டுள்ளன. 'ஜெர்மன் ஆடோ பான்' என்று சொன்னாலே, உலகப் பிரசித்தி பெற்றவை.

ஹிட்லர் காலத்தில் இச் சாலைகள் அமைக்கப்பட்டன. அகன்ற சாலைகளாக இருப்பதுடன், நல்ல உறுதியாகவும் அவை போடப்பட்டுள்ளன. அத்துடன் பெரும் சாலைகள் போகின்ற வழியில் குறுக்குச் சாலைகள் என்பதே கிடையாது. குறுக்குச் சாலைகள் வந்தால் அவற்றிற்கு மேம்பாலம் அமைத்து நெடுஞ் சாலைகளில் போகின்ற கார்களுக்கு ஒருவிதத் தடையும் இல்லாது செய்து விடுகின்றார்கள். ஆகவே, இந்த நெடுஞ் சாலைகளில் கார்கள் மணிக்கு எண்பது, தொண்ணூறு மைல் வேகத்தில்தான் செல்லுகின்றன. கார்களின் எண்ணிக்கையும் கணக்கில் அடங்காது. ஏதாவது ஒரு சிறு தடை ஏற்பட்டு சில நிமிஷங்கள் தாமதம் ஏற்படுமேயானால், நூற்றுக் கணக்கான கார்கள் முன்னும் பின்னும் நிற்கக்கூடிய காட்சியைக் காண முடியும். லாரி வாகனங்களும் பொருள்களைக் கொண்டுசெல்ல உபயோகப் படுத்தப்படுகின்றன. ஜெர்மன் தொழில் வளத்திற்கு இந்தச் சாலை அமைப்புகள் பெருமளவில் உதவி வருகின்றன என்பதைக் காண முடியும்.

ஜெர்மன் தொழில் வளத்துக்கு அடிப்படையாக உள்ளது, இரும்பு உருக்குத் தொழில். இரும்புக் கனிகள் ஜெர்மனியில் போதிய அளவு கிடையாது. எனவே நார்வே, ஸ்வீடன் போன்ற நாடுகளிலிருந்தும் இரும்புக் கனிகளை வரவழைக்கிறார்கள். ஆனால், நல்ல நிலக்கரி ரூர் பகுதியில் கிடைக்கிறது. ரூர் பகுதிக்கு நிலக்கரி, இரும்புக்கனி ஆகியவற்றைக் கொண்டு சேர்ப்பதற்கு, ரைன் நதிதான் உபயோகப்படுகிறது. நூற்றுக் கணக்கான இயந்திரப் படகுகள் ரைன் நதியில் எப்போதும் சென்று கொண்டே யிருக்கும்.

'கிரப்ஸ்' உருக்குத் தொழிற்சாலை ஜெர்மனியிலேயே மிகவும் புகழ்பெற்றது. 'எஸ்ஸென்' என்ற இடத்தில் இது அமைந்துள்ளது. இதைச் சென்று பார்த்தோம். தொழில் ஸ்தாபனத் தலைவர்கள் எங்களை வரவேற்று, தொழிற்சாலை முழுவதையும் சுற்றிக் காண்பித்தார்கள். இரும்பு உருக்கு செய்யும் நுணுக்கத்தையும் எடுத்துரைத்தார்கள்.



இங்கிலாந்திலும் சில உருக்குத் தொழிற்சாலைகளைச் சென்று கண்டது பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். ஆனால், இங்கிலாந்தில் உள்ளதைவிட ஜெர்மன் தொழிற்சாலைகளில் நூதன இயந்திரங்களை உபயோகித்து, பெருமளவில் உற்பத்தி செய்கிறார்கள். தொழிற்சாலைகளில் பணியாற்றுகின்ற ஆட்களும் மிகக் குறைவுதான். அநேகமாக எல்லாப் பணிகளையும் இயந்திரங்களே செய்து முடித்து விடுகின்றன. ஒரு ஆள் ஒரு பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு பல பொத்தான்களை அமுக்குவதன் மூலம் பல்வேறு இயந்திரங்களை இயக்குவது, காண்பதற்கே ஒரு அதிசயக் காட்சியாகத்தான் இருக்கிறது.

இரும்புக் கனியிலிருந்து இரும்பு உருக்கு செய்வதிலே பல்வேறு முறைகள் உள்ளன. ஒவ்வொரு நாட்டிலும் கிடைக்கக் கூடிய இரும்புக் கனிக்கு ஏற்ற முறையிலும், நிலக்கரிக்கு ஏற்ற முறையிலும் இவை அமைகின்றன. பெரும்பாலும் நல்ல தரமுள்ள இரும்புக் கனியைத்தான் எல்லா நாடுகளிலும் உபயோகிக்கிறார்கள். அறுபது சத விகிதம் இரும்புச் சத்து இருக்கக் கூடிய கனியாக இருந்தால்தான், சுலபமாக அதிலிருந்து இரும்பு உற்பத்தி செய்ய முடியும். அதே போல் நிலக்கரியும் நல்ல தரமுள்ளதாக இருக்க வேண்டும். இவ் விரண்டும் கிடைக்கக் கூடிய அளவில்தான், தொழில்களையும் ஏற்பாடு செய்வது எளிதாகிறது. முதன் முதலில் சாதாரண தேனிரும்பை (Pig Iron) உற்பத்தி செய்து, அதற்குப் பின் அதை உபயோகப்படுத்தி உருக்கு தயார் செய்கிறார்கள்.

உருக்கு தயார் செய்வதிலும் இப்போது புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டு வருகின்றன. சாதாரணமாக இருக்கக்கூடிய உலைகளில் தேனிரும்பைக் காய்ச்சி, உருக்கு ஆக்குவதற்கு நான்கு மணி நேரத்திற்குமேல் பிடிக்கும். ஆனால் எல். டி. முறை என்ற புது வழி ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இம் முறைப்படி பதினெட்டு நிமிஷத்தில் ஒரு உலை எடுத்துவிட முடிகிறது. இந்த முறையில் பிராண வாயுவை எரிப்பதன் மூலம், தேனிரும்பைக் காய்ச்சி உருக்காக்குகிறார்கள். ஜெர்மானியருடைய உதவியுடன் நம் நாட்டில் ரூர்கேலா என்ற இடத்தில் அமைக்கப்பட்டிருக்கும் இரும்பு உருக்குத் தொழிற்சாலையில் இப் புதிய முறைதான் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. சமீபத்தில் நானும், முதல் அமைச்சர் திரு காமராஜ் அவர்களும் ரூர்கேலா சென்றிருந்த போது, இம் முறை கையாளப்படுவதை நேரில் கண்டோம். நம் நாட்டிலுள்ள இரும்பு உருக்குத் தொழிற்சாலைகளும், நல்ல நவீன இயந்திரங்களைக் கொண்டு ஜெர்மனி போன்ற மற்ற வெளி நாடுகளில் ஏற்பட்டிருக்கும் தொழிற் கூடங்களுடன் ஒப்பிடக் கூடிய முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன என்பது கண்டு மகிழ்ச்சி யுற்றோம்.



இன்றைக்குத் தமிழ்நாட்டிலும் இரும்பு உருக்குத் தொழிற்சாலை அமைக்க விரும்புகிறோம். இங்கே இரும்புக் கனிகள்

- பிரான்ஸ் நாட்டில் உள்ள ஒரு தேவாலயம்.
- வெர்செயில்ஸ்ஸில் உள்ள பதினான்காம் லூயியின் மாளிகை.



ஏராளமாக உள்ளன. ஆனல் துரதிருஷ்ட வசமாக இந்தக் கனியில் இரும்புச் சத்து குறைவாக உள்ளது. முப்பத்தெட்டு சத விகிதம் தான் இரும்புச் சத்து இருக்கிறது என்று கணக்கிட்டிருக்கிருர்கள். அதோடு நமக்குக் கிடைக்கக்கூடிய நிலக்கரியும் பழுப்பு நிலக்கரிதான். பழுப்பு நிலக்கரி என்று சொன்ஞல், முழுவதும் பக்குவம் அடையாத பிஞ்சு நிலக்கரி என்று தான் சொல்ல வேண்டும். ஆகவே, இந்த நிலக்கரியினுடைய தரமும் மிகக் குறைவு. தரம் குறைந்த இந்த இரண்டு பொருள் களேயும் கொண்டு எவ்வாறு இரும்பு, உருக்கு செய்வது என்பது தான் தற்போது நம் முன் நிற்கும் பிரச்னே.

கிழக்கு ஜெர்மனியில் இதைச் சாதித்திருக்கிருர்கள். அங்கே நம் தமிழ்நாட்டில் உள்ளதைப்போல் சத்துக் குறைந்த இரும்புக் கனியும், பழுப்பு நிலக்கரியுமே கிடைக்கின்றன. ஆகவேஅவற்றைஅவர்கள் பயன்படுத்த முயன்று வெற்றி கண்டுள்ளார்கள். கிழக்கு ஜெர்மனியில் அனுசரிக்கும் முறையைக் கொண்டு நாமும் இங்கு இரும்புத் தொழிற்சாலே அமைக்க முயன்று வருகிருேம். இதைப்பற்றி கிரப்ஸ் உருக்குத் தொழிற்சாலே நிபுணர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன்.

கிரப்ஸ் தொழிற்சாலேயைப் பார்த்து முடிந்த பின், அதற்கு அருகாமையில் அமைந்துள்ள டெமாக் (Demag) என்ற தொழிற்சாலேக்கும் சென்றிருந்தேன். அங்கு இரும்பு உருக்குத் தொழிற்சாலேக்கு வேண்டிய இயந்திரங்களேக் கட்டுகிருர்கள். அது தவிர, இன்னும் வேறு ரக இயந்திரங்களும் அங்கு தயார் செய்யப்படுகின்றன. என்னென்ன ரக இயந்திரங்கள் அங்கு உற்பத்தியாகின்றன என்பதை, அங்கிருந்த மானேஜர் எடுத்துச் சொல்ல ஆரம்பித்தார். சொல்லிக்கொண்டே போனவரை நடுவில் நிறுத்தி, 'நீங்கள் தயார் செய்யாதது என்னென்ன என்பதைச் சொல்லிவிடுவது சுலபமாக இருக்கும் போலிருக்கிறதே' என்று சொன்னேன்!

ஆமாம்! அது அவ்வளவு பிரமாண்டமான தொழிற்கூடம்தான்! பல நாட்கள் பார்த்தாலும் முழுவதும் பார்த்து விட்டோம் என்று சொல்ல முடியாது.

டெமாக் கம்பெனியார்தான் நம் நாட்டு ரூர்கேலா உருக்குத் தொழிற்சாலேக்கு முக்கியமாக உதவுகிருர்கள். இக் கம்பெனியாரும் நம் சேலத்து இரும்புக் கனியை எவ்வாறு உபயோகப்படுத்தி இரும்பு, உருக்கு செய்ய முடியும் என்பது பற்றிப் பரிசீலனே நடத்தி, நமக்கு ஒரு அறிக்கையும் கொடுத்திருக்கிருர்கள். ஆகவே அவர்களிடத்தில் விரிவாக நம் தொழிற்சாலேயைப் பற்றி விவாதித்தேன். கிழக்கு ஜெர்மனியில் அனுசரிப்பதை விட, சிறந்த புதிய முறைகள் இங்கு கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே கிழக்கு ஜெர்மனியை மட்டும் நம்பிக்கொண்டிருக்காமல், தங்களுக்கும் இத்திட்டம் பற்றி, விரிவாகப் பரிசீலனே செய்ய அனுமதி தரவேண்டும் என்று அவர்கள் கோரினுர்கள்.



கிழக்கு ஜெர்மனியாயிருந்தால் என்ன, மேற்கு ஜெர்மனியாயிருந்தால் என்ன? நமக்கு வேண்டியது நல்லதொரு திட்டம். 'எந்தத் திட்டம் உகந்ததோ, அதை ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறோம்' என்று சொன்னேன். ஆகவே இன்றைக்குத் தமிழ் நாட்டில் அமையக்கூடிய இரும்புத் தொழிற்சாலையில் கூட, ஓரளவு கிழக்கு ஜெர்மனி, மேற்கு ஜெர்மனி போட்டி இருக்கிறது. இந்தப் போட்டியை நாம் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்வது தானே அறிவுக்கு உகந்தது?

நெய்வேலி நிலக்கரியை உபயோகப்படுத்தி, உரியா என்ற உரத்தைத் தயார் செய்யவும் நாம் திட்டமிட்டிருக்கிறோம். மேற்கு ஜெர்மனியில் கிடைக்கக் கூடிய பழுப்பு நிலக்கரியை உபயோகப்படுத்தி இந்த உரத்தைத் தயார் செய்கிறார்கள் என்று கேள்விப்பட்டிருந்தேன். அத் தொழிற்சாலையைப் பார்க்க வேண்டும் என்று விரும்பியதற் கிணங்க, வெஸ்ஸிலிங் (Wesseling) என்ற இடத்தில் அமைந்திருந்த இத் தொழிற்சாலையைக் காண ஏற்பாடு செய்திருந்தார்கள். இங்கு முக்கியமாக பழுப்பு நிலக்கரியிலிருந்து திராவக ரூபத்தில் அமோனியா தயார் செய்யப்படுகிறது. அமோனியா என்ற பொருளிலிருந்து பல்வேறு ரசாயனப் பொருள்கள் செய்யமுடியும். அங்கு உற்பத்தி ஆகின்ற அமோனியா திராவகத்தில் ஒரு சிறு பகுதியை உரியா உரம் செய்ய உபயோகப் படுத்துகிறார்கள். பல்வேறு இயந்திரங்கள் மூலம் இந்த அமோனியா திராவகம் சென்று, இன்னும் வேறு பொருள்களுடனும் சேர்ந்து, கடைசியில் ஜவ்வரிசி போன்ற உருவத்தில் வெளியில் வந்து விழுகிறது. இதே மாதிரி முறையைத்தான் நெய்வேலியிலும் அமைக்க ஏற்பாடு செய்கிறார்கள்.

பேயர் (Bayer) என்ற முத்திரையை பல மருந்துகளிலே நாம் பார்த்திருக்கலாம். ரசாயன உற்பத்தியில் ஈடுபட்டிருக்கக் கூடிய மிகப் பிரசித்திபெற்ற ஸ்தாபனங்களில் இது ஒன்று. உலகப் புகழ்பெற்றது. ஜெர்மனியிலே பல இடங்களிலே இந்த ஸ்தாபனத்திற்குத் தொழிற்சாலைகள் உண்டு. லீவர் குஸன் (Lever Kusen) என்ற இடத்தில் அமைந்திருக்கும் முக்கிய தொழிற்சாலைக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். இதுவும் பெரிய தொழிற்சாலைதான். மருந்துகள் செய்ய ஒரு பகுதி, சாய வகைகள் செய்ய இன்னொரு பகுதி என்று பல பகுதிகளாகப் பிரித்து, பல்வேறு ரக ரசாயனப் பொருள்களைச் செய்வதற்கு அங்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். இன்னும் பல புதிய பிரிவுகளைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.




கடைசியாக அங்கிருந்த ஒரு பொருட் காட்சிக்கு அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்தார்கள். கண்ணைக் கவரும் பல்வேறு துணி ரகங்களைக் கண்டோம். சில்க், கம்பளி இவை போன்றவை. இவையெல்லாம் செயற்கைப் பட்டும், செயற்கைக் கம்பளமும் என்று சொன்னார்கள். மூலப் பொருள் என்ன என்று கேட்டதற்கு, நிலக்கரி என்று சொன்னார்கள்.

நியூஸ் (Neuss) என்ற இடத்திலேபுகவ் உல்ப் (Buckau Wolf) என்ற தொழிற்சாலைக்குக் கட்டாயம் வந்தாக வேண்டும் என்று அதன் அதிபர்கள் அழைப்பு அனுப்பி இருந்தார்கள். இந்தக் கம்பெனியார் தான் இன்னொரு கம்பெனியுடன் இணைந்து, நெய்வேலியிலே சுட்ட நிலக்கரி அச்சு செய்வதற்கான இயந்திரத்தை நமக்குக்கொடுக்க டெண்டர் கொடுத்திருக்கிறார்கள். இங்கு நாங்கள் சென்றபோது, பெரிய வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் அனை வரும் வரிசையாக நின்று எங்களை வரவேற்க, மானேஜிங் டைரக்டர் ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார். நம் நாட்டுக் கொடியை எல்லாப் பக்கங்களிலும் பறக்க விட்டிருந் தார்கள், அவர்கள் நாட்டுக் கொடியுடன் சேர்த்து. இந்த ஸ்தாபனத்தார் யுத்த காலத்திற்கு முன்பு கிழக்கு ஜெர்மனி யில் பெரிய தொழிற்சாலையை அமைத்திருந்தார்கள். இப் போது இருக்கக்கூடிய இடத்தில் சிறிய அளவில் ஒரு தொழிற் சாலை மட்டுமே அமைந்திருந்தது. ஜெர்மன் பிரிவினைக்குப் பின் னர் இந்த முதலாளிகள் கிழக்கு ஜெர்மனியில் தொழிலை நடத்த முடியவில்லை. ஆகவே, மேற்கு ஜெர்மனிக்கு ஓடி வந்து இந் தப் புதிய தொழிற்சாலையை அமைக்க ஆரம்பித்தார்கள். கிழக்கு ஜெர்மனியில் இருந்ததை விடப் பல மடங்கு பெரிதாக இந்தத் தொழிற்சாலை இப்போது அமைக்கப்பட்டுள்ளது. மேலும் விரிவாகக் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

இங்கு முக்கியமாக ரசாயன திராவகங்கள், திராட்சை ரச மது போன்றவற்றைச் சேமித்து வைக்கக் கூடிய பெரிய பாத் திரங்களை உற்பத்தி செய்கிறார்கள். பெரிய பாத்திரங்கள் என்று சொன்னால் எப்படி என்று நினைக்கிறீர்கள்? பத்தடி, இருபதடி விட்டமுள்ளவை. உள்ளே பீங்கான் பூசப்படுகிறது. மிகவும் திறமையான வேலைப்பாடாகத்தான் இருக்கிறது. இது தவிர, பல பெரிய இயந்திரங்களையும் அவர்கள் அங்கே உற்பத்தி செய்கிறார்கள்.

இவ்வாறாக, சில தொழிற் கூடங்களை நேரில் சென்று கண் டேன். ஆனால் சாலைகளில் போகும்போதே வரிசையாக இரு புறங்களிலும் பெரிய பெரிய தொழிற்சாலைகள் அமைந்திருப் பதைக் காண முடிந்தது. தொழில் வளம் என்றால் என்ன என்பதற்கு எடுத்துக் காட்டாக, அங்கு தொழில்கள் அமைந் துள்ளன. அவற்றைக் காணும்போது, நம் நாட்டில் தொழில் வளத்தைப் பெற நாம் இன்னும் எவ்வளவு தூரம் செல்ல வேண்டியிருக்கிறது என்பது நன்கு புலனாகிறது.

இந்த வளர்ச்சியின் காரணத்தினால் தான், தற்போதைய ஜெர்மன் மக்களின் பிரார்த்தனையே விசித்திரமாக இருக்கிறது. அந்த வேடிக்கையான பிரார்த்தனையை ஒரு நண்பர் என்னிடம் சொன்னார். அது என்ன தெரியுமா?

'எல்லாம் வல்ல இறைவனே, எந்தக் காரணத்தைக் கொண்டும், எக்காலத்திலும் ஜெர்மனி யுத்தத்தில் ஈடுபடக்



கூடாது. அவ்வாறு தவறி ஈடுபட நேரிட்டாலும், மறுமுறையும் எங்களுக்குத் தோல்வியையே அளித்து அருள்வாயாக!'

எப்படி இருக்கிறது!

ஜெர்மனியில் நம் நாட்டுத் தூதுவராக நாங்கள் சென்றபோது பணியாற்றி வந்தவர் திரு தியாப்ஜி அவர்கள். அவருடைய தகப்பனார் சென்னை உயர் நீதி மன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றி இருக்கிறார். எங்கள் சுற்றுப் பயணத்தை அமைப்பதில் திரு தியாப்ஜி பெரும் அக்கறை எடுத்துக்கொண்டார். பல ஜெர்மன் பிரமுகர்களைச் சந்திக்கக்கூடிய வாய்ப்பை ஏற்படுத்தி, விருந்து ஒன்றும் ஏற்பாடு செய்திருந்தார். தொழிலதிபர்கள், தூதுவர்கள், அரசியல் தலைவர்கள் ஆகியோர் அந்த விருந்திற்கு வந்திருந்தனர். அவர்களுடன் இந்தியாவைப் பற்றியும், இந்தியாவில் நடந்து வருகின்ற திட்டங்கள் பற்றியும் விவாதிக்கக் கூடிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அத்துடன், ஜெர்மனியில் இன்றைக்கு யுத்தத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பது பற்றியும் அங்கு அறிந்து கொள்ள முடிந்தது. அவர்கள் ஹிட்லரைப் பற்றிப் பேசுவதே கிடையாது. பொதுவாக, இளைஞர்கள் இன்றைக்கு ஏற்பட்டு வரும் தொழில் வளர்ச்சியில்தான் கவனம் செலுத்துகிறார்கள்.

நான் ஜெர்மனியில் தங்கியிருந்த நாட்களில், அந்நாட்டின் ஒரு சிறு பகுதியைத்தான் காண முடிந்தது. முழுவதையும் பார்ப்பதென்றால் முடிகிற காரியமா?

அக்டோபர் மாதம் பதின்மூன்றாம் தேதி இரவு, பான் நகரிலிருந்து ரயில் மூலமாகப் பாரிஸ் நகருக்குப் புறப்பட்டேன்.






ஐரோப்பாவில் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குப் போவதென்றால், பாஸ்போர்ட்டுகளெல்லாம் சரியாக வைத்துக் கொள்ள வேண்டும். ரயிலிலேயே பாஸ் போர்ட் பரிசீலனை யெல்லாம் நடை பெறுகின்றன. ரயில்வே அதிகாரிகளிடமே எனது பாஸ் போர்ட்டைக் கொடுத்து விட்டு, எனக்காக ஒதுக்கப் பட்டிருந்த ரயில் பெட்டியில் தூங்கி விட்டேன். திடீரென்று நள்ளிரவில் என்னை வந்து தட்டி எழுப்பினார்கள். பாஸ்போர்ட்டைக் கொடுத்திருந்த ரயில்வே அதிகாரியும், இன்னொரு புதிய அதிகாரியும் அங்கு தோன்றினார்கள். என்னவென்று விசாரித்தேன். 'பெல்ஜியம் நாட்டில் நீங்கள் இருக்கிறீர்கள். இந்நாட்டில் இருக்க உங்கள் பாஸ்போர்ட்டில் அனுமதியில்லை' என்றார் அந்தப் புதிய அதிகாரி.

'எனக்கு உங்கள் நாட்டில் இறங்குவதாக உத்தேசம் இல்லை. ரயிலில் பிரான்சுக்குப் போய்க்கொண்டிருக்கிறேன்' என்று சொன்னேன். 'ஓகோ, அப்படியா?' என்று என்னை ஏற இறங்கப் பார்த்து விட்டுச் சென்றார் அந்தப் புதிய அதிகாரி. பெல்ஜியப் பண்பு அதிலேயே கொஞ்சம் விளங்கிற்று. காங்கோவில் அவர்கள் நடந்துகொள்வது பற்றி நாம் ஆச்சரியப் படுவதற்கில்லையே!

ரயில்வே அதிகாரியைக் கேட்டேன், எதற்காகத் தூங்குகிறவர்களை எழுப்பிப் பார்த்து விட்டுப் போகிறீர்கள் என்று. 'நான் இவருக்கு வேண்டிய வரையிலும் சொன்னேன். அவர் இந்திய மந்திரியைப் பார்த்துக் கேட்டுவிட்டுத்தான் போக வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தார். தூக்கத்தைக் கலைத்ததற்கு மன்னிக்கவும்' என்று அந்த ரயில்வே அதிகாரி என்னை சமாதானப்படுத்தினார். 'நல்ல வேளை, என்னைக் கைது செய்யவில்லையே?' என்று சொல்லி, மீண்டும் படுத்துத் தூங்கினேன். மறுநாள் காலையில் பாரிஸ் நகரத்தில் வந்திறங்கினேன்.

பாரிஸ் நகர் என்றதுமே என்னென்ன நினைவுகள் நம் மனத்திற்கு வருகின்றன! அந்த நகரம் எத்தனை புரட்சிகளுக்குப் பிறப்பிடமா யிருந்திருக்கிறது! எத்தனை மன்னர்கள், ராணிகள் முடியிழந்திருக்கின்றனர்! மேலும், உலகத்திலேயே பாரிஸ் நாகரிகம் தான் மிகவும் புகழ் பெற்றது. ஐரோப்பாவிலேயே மிகவும் அழகான நகர் என்றும் பிரசித்திபெற்றுள்ளது.



இரண்டாவது யுத்த காலத்திலும் கூட, இந்த நகரை அழியாது பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் எல்லோருடைய அக்கறையாகவும் இருந்தது.' எனவேதான் பாரிஸ் நகரை, ஒரு திறந்த நகரம் (Open City) என்று பிரகடனம் செய்து, ஜெர்மானியர்கள் இந்நகரின்மேல் குண்டு வீசாமல் இருக்க ஏற்பாடு செய்தார்கள். பல நகரங்கள் உருத்தெரியாமல் பாழடையக்கூடிய நிலை ஏற்பட்டிருந்தும், பாரிஸ் நகரம் எவ்வித அழிவும் இல்லாமல் காப்பாற்றப்பட்டது. அதுவே இந்நகரின் பெருமைக்கும் சிறப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டு.

எங்களை எதிர்கொண்டழைக்கத் தூதுவர் காரியாலயத்திலிருந்து அதிகாரிகள் வந்திருந்தார்கள். சென்னையில் விமான அதிகாரியாக இருந்த குரூப் காப்டன் சத்யநாராயணா, அப்போது பாரிஸில் பணியாற்றி வந்தார். அவரும் எங்களை வரவேற்க வந்திருந்தார். அப்போது பிரான்ஸ் தேசத்திற்கு நம் நாட்டுத் தூதுவராக இருந்தவர், திரு ராகவன் அவர்கள். அவர் தம் வீட்டிலேயே நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார். அவரும் அவருடைய மனைவியாரும் வெகு அன்புடன் என்னை வரவேற்று உபசரித்தார்கள். நல்ல இட்லி, தோசையுடன் காலை ஆகாரம் கொடுத்தது, அந்த உபசரிப்பை மேலும் மேன்மைப் படுத்தியது.

சினிமாக் கருவிகளை உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலைக்குப் போக முதன் முதலில் ஏற்பாடு செய்திருந்தார்கள். காரில் புறப்பட்டுச் சென்றோம். இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய நாடுகளைப் பார்த்து வந்தபின், பாரிஸ் நகரப் போக்குவரத்தைப் பார்க்கும்போது, எனக்கு எல்லாம் ஒரே குழப்பமாகத்தான் தோன்றியது. எதிலும் ஒரு கட்டுப்பாடு இருப்பதாகவே தோன்றவில்லை. இருப்பினும், எந்த வித விபத்துமில்லாமல் கார்கள் போய்க் கொண்டிருந்தன.

'போர் முனையில் பிரெஞ்சுப் படைகளும், டாங்குகளும் இதுமாதிரிதான் போயிருக்கும் போலும்! பிரெஞ்சுப் படை, ஜெர்மன் படைக்கு முன் தோல்வியுற்றதில் ஆச்சரியமில்லை!' என்று எங்களுக்குள் தமிழில் பேசிக் கொண்டோம்!

பொதுவாகப் பாரிஸைப்பற்றி எனக்கு மனத்தில் ஏமாற்றம் தான் ஏற்பட்டது. இதுவரையில் சென்றிருந்த நாடுகளிலெல்லாம், குறித்த காலம் தவறாமல் ஓரிடத்திலிருந்து புறப்படுவதும், மற்றொரு இடத்திற்குப் போய்ச் சேருவதும் வழக்கமாக இருந்தது. பாரிஸ் மக்களுக்கோ, நேரத்தைப் பற்றி கவலையே இருப்பதாகத் தெரியவில்லை. பல சமயங்களில் எங்களை அழைத்துக் கொண்டு போக வேண்டியவர்கள், குறித்த காலத்தில் வந்து சேரவில்லை. காலம் கழித்து வந்த பின்பும் உடனடியாகப் புறப்பட வேண்டுமேயென்ற அவசரமும் அவர்களிடம் காணப்படவில்லை. சாவகாசமாகப் பேச ஆரம்பித்து விடுகிறார்கள். 'காலதாமதமாயிற்றே, புறப்படலாமா?' என்று கேட்ட பின்னர்தான் புறப்பட்டார்கள். காருக்குப்



பக்கத்தில் வந்தவுடன், மீண்டும் தாமதம். அதற்குக் காரணம், ஒரு விவாதம்! மந்திரி எங்கு, எந்தப் பக்கம் உட்காருவது, அவருக்குப் பக்கத்தில் யார் அமருவது என்கின்ற முக்கிய பிரச்னைகள் சில நிமிஷங்கள் விவாதிக்கப் படும்! இந்த முக்கியப் பிரச்னை தீர்ந்த பின்னர், எவ்வழியாகப் போகலாம் என்பதற்கான மந்திராலோசனை நடைபெற ஆரம்பித்து விடும். அச் சமயங்களிலெல்லாம் எனக்குப் பொங்கிக் கொண்டு வந்த கோபத்தை அடக்கிக் கொள்வதே சிரமமாயிருந்தது. அதற்கு மேல் பாரிஸ் போக்கு வரத்தில் அகப்பட்டுக் கொண்டால் ஓரிடத்திற்கு எப்போது போய்ச் சேருவோம் என்று யாரும் கண்டிப்பாகச் சொல்ல முடியாது.

சினிமாக் கருவிகள் தயாரிப்புக் கம்பெனியில், கோடு விழுந்து விட்ட பழைய படங்களை எப்படிப் புதுப்பிக்கின்றார்கள் என்கின்ற ஓர் அதிசய முறையைக் காண்பித்தார்கள். பழுது பட்டிருக்கக் கூடிய பழைய பிலிமை திராவகத்தில் தோய்த்து எடுக்கிறார்கள். அதை ஆற வைத்து, மறுபடியும் போட்டுக் காண்பித்தார்கள். எந்த விதமான கோடுகளும் இன்றி, புதிய படம்போல் இருந்தது. இக் கருவி, இந்தியாவில் ஜெமினி ஸ்டூடியோவில்தான் அமைந்திருக்கிறது என்று கேள்விப் பட்டு, மகிழ்ச்சி அடைந்தேன். என்னையும், என்னுடன் வந்திருந்த திருவாளர்கள் ராமசாமி, சுப்பராஜு ஆகியவர்களையும் வைத்து ஒரு சினிமாப் படம் எடுக்க வேண்டுமென்று விரும்பினார்கள். 'சாதாரணமாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருங்கள்' என்று சொன்னார்கள். விளக்குகளெல்லாம் போட்டு, ஒரு பத்து நிமிஷ நேரம் படம் பிடித்தார்கள். அதற்குப் பின் அங்கிருந்த மற்றப் பகுதிகளுக் கெல்லாம் அழைத்துச் சென்று காண்பித்தார்கள். பத்து, பதினைந்து நிமிஷங்களுக்குப் பின்னர், படம் காண்பிக்கும் அறையில் கொண்டுபோய் உட்கார வைத்தார்கள். விளக்குகள் அணைந்து, படம் ஓட ஆரம்பித்தது. சற்று முன்பு எங்களை வைத்து எடுத்த படம், எங்களுடைய பேச்சுடன் அங்கு ஓடிற்று. இதை எப்படி இவ்வளவு சீக்கிரத்தில் முடித்திருக்கிறார்கள் என்று ஆச்சரியப்பட்டேன். உண்மையிலேயே பெரிய சாதனைதான் அது! புறப்படும்போது அந்தப் படத்தை டப்பாவில் போட்டு 'ஊருக்குக் கொண்டு போங்கள்' என்று எங்களிடம் கொடுத்து விட்டார்கள்.

பாரிஸ் முனிசிபல் சபையில் எனக்காக ஒரு நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தார்கள். குறித்த காலத்திற்கு அரை மணி கழித்தே முனிசிபல் சபை கட்டடத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கு யாரோ இரண்டொருவரே இருந்தார்கள். இந்த நிகழ்ச்சியைப் பற்றி மறந்து விட்டார்களோ என்று கூட எனக்கு எண்ணத் தோன்றியது. கூட வந்தவரிடம், 'என்ன, இங்கு ஒன்றையும் காணோமே' என்று கேட்டேன். 'எல்லோரும் வந்துகொண்டே இருக்கிறார்கள். ஒரு சமயம் போக்குவரத்து நெருக்கடியினால் தாமதமாயிருக்கலாம்' என்று



சமாதானம் சொன்னார் அவர். கடைசியாக என்னை வரவேற்க இருந்த டெபுடி மேயர் வந்து சேர்ந்தார். 'சரி, இனி இந்த நிகழ்ச்சி முடிந்து விடும்' என்று எண்ணினேன். ஆனால் அவர் வந்ததும் 'மேயர் ஊரில் இல்லாத காரணத்தினால்தான் நான் தங்களுக்கு வரவேற்பு கொடுப்பதாக இருந்தது. ஆனால் தற்போது மேயர் திரும்பி வந்து விட்டார். ஆகவே, அவரே தங்களை வரவேற்க விரும்புகிறார்' என்றார். 'எங்கே அவர்?' என்று கேட்டேன். 'வந்து கொண்டிருக்கிறார். ஆனால் போக்கு வரத்து நெருக்கடியில் எப்போது வருவார் என்று திட்டமாகச் சொல்ல முடியாது' என்று சொல்லி வைத்தார். முடிவில், எப்படியோ அந்தப் போக்கு வரத்து நெருக்கடியை யெல்லாம் சமாளித்துக் கொண்டு மேயரும் வந்து சேர்ந்தார். ஒரு மணி நேரம் தாமதித்து நிகழ்ச்சி ஆரம்பித்தது.

'ஐந்து நிமிஷத்தில் உங்கள் வரவேற்பை முடித்துக் கொள்ளுங்கள். நான் இதை முடித்துக்கொண்டு, யுனெஸ்கோ விற்கு வருவதாக ஒப்புக்கொண்டிருக்கிறேன்' என்றேன். 'ஐந்துநிமிஷம் என்ன, அதற்குள்ளாகவே முடித்து விடுகிறோம்' என்று ஐந்து நிமிஷத்திற்கு மேலும் பேசிக்கொண்டிருந்தார்கள். கொஞ்சம் அவசரப் படுத்திய பின்னர், பிரெஞ்சு மொழியில் மேயர் பேச, மற்றொருவர் அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொன்னார். மேயர், பாரிஸ் நகரப் பிரஜா உரிமைப் பத்திரத்தை எனக்கு வழங்கி, அதற்கான ஒரு பதக்கத்தையும் அணிவித்தார். 'பாரிஸ் நகர மக்களுக்குள்ள எல்லா உரிமைகளும் உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது' என்று கூறினார். நானும் அதைப் பெருமையுடன் ஏற்றுக்கொண்டு, வந்தனம் கூறிப் புறப்பட ஆரம்பித்தேன். 'சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது, சாப்பிட்டு விட்டுத்தான் செல்ல வேண்டும்' என்றார். அங்கு மதுபானங்கள் இல்லாத சிற்றுண்டியே இருக்க முடியாது. ஆனால் எங்களுக்காகப் பழ ரசம் ஏற்பாடு செய்து வைத்திருந்தார்கள். அவற்றை முடித்துக் கொண்டு, அவசர அவசரமாகப் புறப்பட்டு, யுனெஸ்கோ மாளிகைக்குச் சென்றேன்.

யுனெஸ்கோ ஐக்கிய நாட்டுஸ்தாபனத்தின் கிளை. உலகிலே விஞ்ஞானம், கல்வி, கலை இவற்றைப் பரப்புவதற்காக ஏற்படுத்தப்பட்டது. ஐ. நா. சபை, அரசியல் துறையில் சாதித்திருக்கும் காரியங்களை விட, யுனெஸ்கோ, எப். ஏ. ஓ. என்ற விவசாய உணவு ஸ்தாபனம், டபிள்யூ. எச். ஓ. என்ற உலக சுகாதார ஸ்தாபனம் இவை, முக்கியமாகப் பின்னடைந்திருக்கும் நாடுகளுக்கும், மக்களுக்கும் பெரும் பணி புரிந்து வருகின்றன. யுனெஸ்கோவின் டெபுடி டைரக்டராக திரு ஆதி சேஷய்யா என்பவர் பணியாற்றி வருகிறார். நான் பாரிஸ் போயிருந்தபோது, அவர் அமெரிக்கா சென்றிருந்தார். ஆனால் நான் வருவதை அறிந்து, அச்சபையில் என்னை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அங்கிருக்கக்



கூடிய முக்கிய அதிகாரிகளெல்லாம் ஒரு அறையில் கூடி இருந்தனர். ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா போன்ற பல கண்டங்களைச் சேர்ந்தவர்களும் அங்கு காணப்பட்டனர்.

என்னை வரவேற்றுப் பேசிய பின், இந்தியப் பிரச்னைகளைப் பற்றி என்னைப் பேசும்படி கேட்டுக் கொண்டதற்கிணங்க, நம் நாட்டுத் திட்டங்களைப் பற்றியும், அதிலும் முக்கியமாகக் கல்விப் பிரச்னையைப் பற்றியும், இத்துறையில் எவ்வாறு யுனெஸ்கோ நம் நாட்டுக்கு உதவி செய்ய முடியும் என்பது பற்றியும் பேசினேன். அதற்குப் பின் பலர் கேள்விகள் கேட்டனர். இந்தியாவினுடைய திட்டங்கள் பற்றியும், பல்வேறு பிரச்னைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம் அங்கு பெரிதும் காணப்பட்டது. ஒரு சிலர், இவை பற்றி முன்பே நன்கு தெரிந்தும் வைத்திருந்தார்கள். ஆகவே, துருவித் துருவிப் பல கேள்விகளைப் போட்டனர்.

யுனெஸ்கோவில் பேசக்கூடிய வாய்ப்புக் கிடைத்தது எனக்கு ஒரு புதிய அனுபவமாக இருந்தது.

யுனெஸ்கோவிலிருந்து மாலை நான்கு மணிக்குப் புறப்பட்டு டெலிவிஷனுக்கு உபயோகப்படக்கூடிய சினிமா படங்கள் எடுக்கும் ஒரு ஸ்டூடியோவுக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். டெலிவிஷன் படங்கள் எடுக்கும் நுட்பத்தையும், அது எவ்வாறு டெலிவிஷனில் காண்பிக்கப் படுகின்றது என்பதையும் அங்கு காட்டினூர்கள். அன்றிரவு தூதுவராலயத்தில் எங்களுக்காக ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார்கள். அவ் விருந்துடன் பாரிஸ் நகரில் முதல் நாள் முடிவடைந்தது.

அடுத்த நாள் காலை பாஷே (Bauchet) என்ற கச்சா பிலிம் உற்பத்தித் தொழிற்சாலை ஒன்றுக்குச் சென்று, அத் தொழிற்சாலையைப் பார்வையிட ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த ஸ்தாபனத்தார்தான், நீலகிரியில் நம் நாட்டிற்கு கச்சா பிலிம் தொழிற்சாலை அமைக்க உதவி செய்கிறூர்கள். இந்த ஸ்தாபனத்தில் உற்பத்தியாகும் கச்சா பிலிம் அவ்வளவு நல்ல தரமுள்ளதல்ல என்கிற ஒரு கருத்து, இங்கு நிலவி இருந்தது. ஆகவே இந்த ஸ்தாபனத்தை அவசியம் பார்க்க வேண்டும் என்று முன்பே குறிப்பிட்டிருந்தேன்.

ஒரு பிலிம் தொழிற்சாலையை, அங்கு வேலைநடந்துகொண்டிருக்கும்போது பார்ப்பதென்றால் ஒரே இருட்டு மயமாகத்தான் இருக்கும் என்பதுபற்றி, 'கோடக்' தொழிற்சாலையைப் பார்க்கச் சென்றிருந்ததைப் பற்றி எழுதியபோது குறிப்பிட்டிருந்தேன். நல்ல வேளையாக நான் சென்ற அன்று, இந்தத் தொழிற்சாலையில் வேலை நடக்கவில்லை. ஆகவே, எல்லா இயந்திரங்களையும் மற்றப் பகுதிகளையும் நன்கு காண முடிந்தது. அத்துடன், அங்கு தயாரித்திருந்த பொருள்களையும் காண்பித்ததுடன், அதைப்பற்றி வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்திருந்த அபிப்பிராயங்களையும் எனக்குக் காண்பித்தார்கள்.



இரண்டு மூன்று வருஷங்களில் உற்பத்தியாகக் கூடிய கச்சா பிலிம்களுக்கு அப்போதே ஆர்டர்கள் வந்து குவிந்திருந்தன. நான் பார்த்த வரையில் அது ஒரு சிறந்த தொழிற்சாலை யாகவே எனக்குப் பட்டது. அங்கு விசாரித்ததிலும் அத் தொழிற்சாலை பற்றி எல்லோருமே சிறப்பாகத்தான் சொன்னார்கள். ஆகவே, உதகையில் ஏற்படவிருக்கும் பிலிம் தொழிற்சாலையைப் பற்றி நாம் அவநம்பிக்கைப் படவேண்டியதில்லை என்ற கருத்துத்தான் எனக்கு உறுதியாயிற்று.

இந்தத் தொழிற்சாலையை விரிவுபடுத்துவதற்காகக் கட்டடங்கள் புதிதாகக் கட்டிக் கொண்டிருந்தார்கள். இருக்கும் தொழிற்சாலைகளை விரிவுபடுத்த வேண்டுமென்று சொன்னால், சர்க்காரின் அனுமதி பெற்றுத்தான் செய்ய முடியும். இதிலே அதிகக் கட்டுப்பாடுகள் இருப்பதாகவும், சர்க்காரின் உத்தரவு பெறுவதென்று சொன்னால், சாதாரணமாக ஆகக்கூடியதல்ல என்றும் சொல்லி, தங்கள் குறையை முறையிட்டுக் கொண்டார்கள். 'என்ன காரணம்' என்று கேட்டேன். 'பிரான்ஸ் தேசத்திலுள்ள பெரும் தொழில்களெல்லாம் பாரிஸ் நகரத்தில் தான் அமைந்திருக்கின்றன. அந்நாட்டில் உள்ள தொழில்களில் அறுபது சத விகிதம் பாரிஸ் நகரப் பகுதியில்தான் ஏற்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கட்டடத்தின் ஒவ்வொரு பகுதியிலும், ஒரு தொழிற்சாலையைக் காண முடியும். இதன் காரணமாக, பெருத்த நெருக்கடி ஏற்படுகிறது. ஆகவே, புதிய தொழில்கள் அங்கு ஏற்பட அனுமதி கொடுப்பதில்லை. விரிவு படுத்தவும் அனுமதி கொடுப்பதில்லை. இருக்கின்ற தொழில்களையும் கூட, நகருக்கு வெளியில் எடுத்துச் செல்வதற்குப் பல சலுகைகள் கொடுக்கிறார்கள். இருப்பினும், எல்லோரும் பாரிஸ் நகரிலேயே தொழில்களை வைக்கப் பெரு முயற்சி செய்கிறார்கள்' என்ற விவரங்களை எல்லாம் எடுத்துச் சொன்னார்கள். 'இவ்வாறிருக்கும்போது, உங்களுக்கு எப்படி தொழிற்சாலை விஸ்தரிக்க அனுமதி கிடைத்தது?' என்று கேட்டேன். 'செல்வாக்கு இருக்கின்றவர்கள் எப்படியோ சமாளித்துக் கொள்ளுகிறோம்' என்றுதான் அதற்குப் பதில் சொன்னார்கள்.

**சாந்தி**

பாரிஸிலிருந்து முப்பது மைல் தூரத்தில் சாந்தி (Chantilly) என்ற ஒரு அழகிய கிராமம் உண்டு. இக் கிராமம் ஒரு அடர்ந்த வனத்திற்கு மத்தியில் அமைந்துள்ளது. பழங் காலத்தில் பிரஞ்சு நாட்டு பிரபு ஒருவரின் வாசஸ்தலமாக அது அமைந்திருந்தது. அப் பிரபுவின் மாளிகை மிகவும் பிரசித்தி பெற்றது. அதை அடுத்து அழகான ஏரியும், விசாலமான பூங்காக்களும் அமைந்துள்ளன. இக் கிராமத்தை அடுத்து, உலகப் பிரசித்திபெற்ற குதிரைப் பந்தய மைதானம் ஒன்றும் அமைந்துள்ளது. உலகிலுள்ள பல குதிரைப் பந்தயக் காரர்கள், இங்கு நடக்கும் பந்தயங்களில் பங்கு கொள்வதில் பெருமை கொள்கிறார்கள்.

பாரன் ராத்சைல்ட் (Baron Rothchild) யூத வம்சத்தைச் சேர்ந்தவர். உலகத்திலேயே பெரிய பாங்க் முதலாளி எனக் கருதப்படுபவர். இவருடைய கட்டடம் ஒன்றும் அக்கிராமத்தின் ஒரு பகுதியில் கட்டப்பட்டுள்ளது. ஜெர்மன் ராணுவம், இரண்டாவது யுத்த காலத்தில் பிரான்ஸ் தேசத்தை ஆக்ரமித்துக் கொண்டிருந்தபோது, இந்தக் கட்டடத்தில் தான் அவர்களுடைய தலைமைக் காரியாலயத்தை நிர்மாணித்திருந்தது.

ஹிட்லரின் யூத எதிர்ப்புக் கொள்கை நாம் அனைவரும் அறிந்ததே. பிரான்ஸ் தேசத்திலும் யூதர்கள் பெரும் கொடுமைகளுக்கு உள்ளாக்கப் பட்டார்கள். அக்காலத்தில் கத்தோலிக்கப் பாதிரிமார்கள் யூதர்களைக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டுப் பெரும் சேவை புரிந்து வந்தார்கள். யுத்த முடிவுக்குப் பிற்பாடு இவர்கள் செய்த சேவையைப் பாராட்டி ராத்சைல்ட் பிரபு இக் கட்டடத்தை கத்தோலிக்கப் பாதிரிமார்களுக்கே அன்பளிப்பாகக் கொடுத்து விட்டார். இக் கட்டடத்தில் தற்போது கத்தோலிக்கப் பாதிரிமார்கள் பயிற்சி நிலையம் ஒன்று நடைபெற்று வருகிறது. கோடைக்கானலை அடுத்த சண்பகனூர் என்ற கிராமத்தில் இதே போன்ற ஒரு நிலையம் நடைபெற்று வருவதை பலர் அறிந்திருக்கலாம். வெறும் மத போதனையோடு மட்டும் நின்று விடாமல், விஞ்ஞானம், சரித்திரம், ஆராய்ச்சி போன்ற நவீன படிப்புகளும் அங்கு கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இம் மத ஸ்தாபனத்திற்கு என்னைக் கட்டாயம் வரவேண்டும் என்று அழைத்திருந்தார்கள். பல இந்தியப் பாதிரிமார்களும், அதிலும் முக்கியமாகத் தமிழ்நாடு, கேரளம், கன்னடம் ஆகிய பகுதிகளிலிருந்தும் பலர் இங்கு பயிற்சி பெற்று வருகின்ற காரணத்தினால், நான் அங்கு விஜயம் செய்வதைப் பெரிதும் விரும்பினார்கள். அழைப்பை ஏற்று நான் அங்கு சென்றேன்.

பாரிஸ் நகரை விட்டு சுமார் இருபது மைல் சென்றதும், அடர்ந்த காடுகளுக்கு மத்தியில் பாதை செல்லுகின்றது. பாரிஸிலே இருக்கக்கூடிய பரபரப்புக்கும், இங்கு நிலவும் அமைதிக்கும் உள்ள வித்தியாசத்தை யாரும் உணராமல் இருக்க முடியாது. காட்டின் வழியாகவே சென்று இம் மதக் கல்லூரியை அடைந்தோம். இந்திய நண்பர்கள் என்னை அன்புடன் வரவேற்று, அந் நிலையத்தின் தலைவருக்கும் மற்ற நண்பர்களுக்கும் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்கள்.

பிரமாண்டமான கட்டடம். பழைய கட்டடத்துடன் இணைத்து, புதிய சில கட்டடங்களும் கட்டப்பட்டுள்ளன. அழகான பூங்காக்கள் அமைத்திருக்கிறார்கள். அங்கிருந்த சூழ்நிலையே அதற்கு 'சாந்தி' என்று பெயரிடுவதற்கான வகையில் அமைந்திருந்தது. இந் நிலையத்தின் முக்கிய பகுதிகளுக்கெல்லாம் என்னை அழைத்துச் சென்று காண்பித்தார்கள்.

அங்கு அமைக்கப்பட்டிருந்த நூல் நிலையம், உலகிலுள்ள எல்லா முக்கிய தத்துவ நூல்களையும் கொண்டதாக உள்ளது.

இந்து மதக் கோட்பாடுகளை விளக்கும் பல நூல்கள் அங்கு இடம் பெற்றிருக்கின்றன. மதக் கோட்பாடுகளைப் பற்றிய ஆராய்ச்சியும் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

அங்கேயே பகல் உணவு ஏற்பாடு செய்திருந்தார்கள். எளிய உணவு என்று சொல்லி, பல்வேறு வகைபட்ட அறுசுவை உணவுகள் வழங்கப்பட்டன. மத பாதிரிமார்களாக இருந்தாலும், அவர்களும் சாதாரணமாகத் திராட்சை மது அருந்துகிறார்கள்.

மதுவைப் பற்றி அங்கு விளக்கம் கொடுத்தார்கள். மதுக்களில் இரண்டு வகை உண்டு. திராட்சைப் பழ ரசம் போன்ற வற்றைப் புளிக்க வைத்துத் தயார்செய்யக்கூடிய மதுஒருவகை. காய்ச்சி, ஆவியாக வடிக்கட்டி (Distillation) தயார் செய்யக் கூடிய விஸ்கி போன்றவை மற்றொரு வகை. முதல் வகை மது வில் அதிக ஆட்சேபணை இருக்க வேண்டியதில்லை என்பது பொதுவான கருத்து. மது அருந்த விரும்பாதவர்களுக்கு வேறு பானங்கள் வழங்கப்படுகின்றன.

உணவிற்கு முன் அந்த ஸ்தாபனத்தில் இருக்கும் எல்லோரும் கூடி, இந்தியாவைப் பற்றியும், முக்கியமாக நமது முன்னேற்றத் திட்டங்களைப் பற்றியும் எடுத்துரைக்கும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். நம்நாட்டு ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றியும், சமுதாயத்திலே ஏற்பட்டு வரும் பல்வேறு மாறுதல்களைப் பற்றியும் அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். அதற்குப்பின், ஏதாவது கேள்வி கேட்பதாக இருந்தால் கேட்கலாம் என்றும் சொன்னேன். பலர் முன் வந்தனர். அவர்கள் கேட்ட கேள்விகளிலிருந்தே, இந்தியாவைப்பற்றிய நுட்பமான விஷயங்களை அவர்கள் நன்கு தெரிந்து வைத்திருக்கிறார்கள் என்பது விளங்கியது.

நான் அங்கு சென்றதில் பெரு மகிழ்ச்சி கொண்டவர்கள் நமது தென்னிந்திய நண்பர்கள். ஒருவர் திண்டுக்கல்லைச் சேர்ந்தவராம். அங்கிருக்கும் செயிண்ட்மேரி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக இருந்தவர். அவருடைய பள்ளிக்குச் சென்றிருந்தபோது என்னைச் சந்தித்திருப்பதாகச் சொன்னார். அவர்களுடன் தமிழில் பேசிக் கொண்டிருந்ததே பெரும் உவகை ஊட்டுவதாக இருந்தது. எல்லோரும் சேர்ந்து ஒரு படம் எடுத்துக் கொண்டோம். அதன் பின், பிரபுவின் மாளிகையைக் காட்ட அழைத்துச் சென்றார்கள். உண்மையிலேயே மிக அழகான கட்டடம். மாளிகை அமைந்திருந்த சூழ்நிலை, மனத்தைக் கவரக்கூடியதாக இருந்தது. பலர் இதைக் காண வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். மாலையில் திரும்பவும் சாந்தியை விட்டு பாரிஸ் நகரம் போய்ச்சேர்ந்தேன்.

வெளியிலிருந்து நகருக்குள் வருகிறவர்கள் போக்குவரத்து நெருக்கடியில் அகப்பட்டுக் கொள்ளாமல் இருப்பதற்குப் புதிய ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள். பாரிஸ் நகருக்கு வெளிப்புறத்தில் நகரைச் சுற்றி விசாலமான பெரியதொரு



வட்டமான சாலை அமைக்கப்பட்டு வருகிறது. இந்தச் சாலைகளின் வழியாகச் சென்று, எந்த இடத்திலிருந்து நாம் போக வேண்டிய இடம் சமீபமாக இருக்கிறதோ, அங்கிருந்து நகருக்குள் போகலாம். இந்தச்சாலைஅமைப்பின்காரணமாக, போக்குவரத்து நெருக்கடி பெரும் அளவில் தவிர்க்கப் பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். வளர்ந்து வருகிற நம் சென்னை நகரிலும், இந்தப் போக்கு வரத்து நெருக்கடி பெருகிக்கொண்டே வருவதைக் காண்கிறோம். இப்போதே பாரிஸ் நகரைச் சுற்றி அமைத்திருப்பதைப் போல, சென்னை நகருக்கு வெளிப் புறத்தில் ஒரு வட்ட ரோடு (Ring road) அமைப்பது மிக அவசியம். இந்த முறையில் சர்க்காரும் யோசனை செய்து வருகின்றது.

சாந்தியிலிருந்து திரும்பி, நான் தங்கியிருந்த இடத்திற்குப் போய்க் கொண்டிருந்தபோது ஒரு அனுபவம் ஏற்பட்டது. திடீரென்று கார் முன்னே செல்ல மறுத்து விட்டது. ஏதோ எஞ்சின் கோளாறு! நான் குறித்த நேரத்துக்குத் தூதுவர் இல்லத்தை அடைந்தால்தான், அடுத்த நிகழ்ச்சிக்குப் போய்ச் சேர முடியும். டாக்ஸிக்காகப் பார்த்தோம். நூற்றுக் கணக்கான டாக்ஸிகள் பறந்து கொண்டிருந்தன. காலியாக ஒன்றைக்கூட காண முடியவில்லை. என்னுடன் வந்திருந்த பாதிரி நண்பர் ஒருவர், எங்கேயோ சென்று கஷ்டப்பட்டு ஒரு டாக்ஸியை அழைத்து வந்தார். சிறிது நேரம் கழித்தே தூதுவர் இல்லத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். நல்ல வேளையாக என்னை அடுத்த நிகழ்ச்சிக்கு அழைத்துப் போக வரவேண்டியவர், நான் கால தாமதமாகப் போய்ச் சேருகிற வரை வரவில்லை.

அடுத்து பிரான்ஸ் சர்க்கார் பிரசார இலாகா நிலையத்திற்குச் சென்றோம். அங்கிருந்த சில அதிகாரிகளுடன் பொது விஷயங்களைப்பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டோம்.

பாரிஸ் நகரில் எங்களுக்கு மிகவும் உதவியாக இருந்தவர் ரெமி டெஸ்ஸானோ (Remy Tessonneau) என்பவர். பாரிஸில் உள்ள பிலிம் இன்ஸ்டிடியூட் ஒன்றுக்குத் தலைவர். அன்றிரவு எங்களுக்காக ஒரு விருந்து ஏற்பாடு செய்திருந்தார். அநேகமாக விருந்துகளெல்லாம் ஓட்டல்களில்தான் அளிக்கப்படுகின்றன. விருந்து ஏற்பாடு செய்திருந்த ஓட்டலுக்கு எங்களை அழைத்துச் சென்றார். காரை விட்டு இறங்கினோம். அங்கு கட்டடங்கள் ஒன்றையும் காணோம்! கொஞ்ச தூரம் ஒரு குறுகிய பாதையின் பாதாள வழியாக அழைத்துச் சென்றார்கள். ஆம்! பாதாள அறையில்தான் ஓட்டல் அமைக்கப்பட்டிருந்தது. யுத்த காலத்தில் விமானத் தாக்குதலிலிருந்து பாதுகாத்துக் கொள்ள ஏற்பட்டிருந்த பாதாளக் கட்டடம் அது. அங்கு இந்த நூதன ஓட்டலை அமைத்திருக்கிறார்கள். அங்கிருந்த தட்டுமுட்டுச் சாமான்கள், மற்ற அமைப்புகள் எல்லாவற்றையும் பார்ப்பதற்கே சற்று விநோதமாகத் தோன்றியது. பதினாறு, பதினேழாவது நூற்றாண்டு பா



யில் இந்த ஓட்டல் அமைக்கப்பட்டிருக்கிறது என்று எனது நண்பர் எனக்குச் சொன்னர். அங்கு பரிமாறுகிறவர்களும் அப் பழங்காலத்திய உடைதான் அணிந்திருந்தார்கள். உணவு பரிமாறும் பாத்திரங்களும் அதே மாதிரி தான். நாங்கள் சென்றபோது கூட்டம் அவ்வளவாக இல்லை. ஆனால் அரை மணி நேரத்திற்குள்ளாக ஒரு இடம் பாக்கி யில்லாமல் விருந்தினர்கள் வந்து உட்கார்ந்து கொண்டார்கள். ஒரு ஆணும் பெண்ணும் ஜோடியாகப் பாடிக் கொண்டும், வயலின் வாசித்துக் கொண்டும் ஒவ்வொரு மேசைக் கருகிலும் சென்று விருந்தினர்களை மகிழ்விக்கச் செய்து கொண்டிருந்தார்கள். இவர்களும் பழங்காலத்து உடை அணிந்து, அதே பாணியில்தான் பாடுவதாகவும் எங்களுக்கு விளக்கப்பட்டது. உணவுகள் வழங்கப்பட்டன. நான் எப்போதும் உள்ள பழக்கம் போல், 'குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டுவரச் சொல்லுங்கள்' என்றேன். என் பேச்சு, பக்கத்தில் அமர்ந்திருந்த பெண்மணிக்குத் தூக்கி வாரிப்போட்டு விட்டது! 'என்ன, குடிப்பதற்குத் தண்ணீரா கேட்கின்றீர்கள்?' என்று அதிசயத்துடன் கேட்டார்!

'ஏன், தண்ணீர்தான் கேட்டேன்' என்று சொன்னேன்,

'இங்கு குடிப்பதற்குத் தண்ணீரை உபயோகிக்கின்ற வழக்கமே கிடையாது. தண்ணீரின் உபயோகமெல்லாம் உதட்டுக்கு வெளியிலேயே நின்று விடும்!' என்று ஹாஸ்யமாகச் சொன்னர்கள். 'வாய் சுத்தம் செய்ய என்ன செய்வீர்கள்?' என்று கேட்டேன். 'நாங்கள் அதற்கும் கூட திராட்சை மது வைத்தான் உபயோகிப்போம்' என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னர் அவர்.

'பாரிஸில் இரண்டு நாள் இருப்பதற்குள்ளாகப் புதுப் பழக்கங்கள் வேண்டாம். வெறும் தண்ணீர் இல்லாவிட்டால், சோடாவாவது கொண்டு வரச் சொல்லுங்கள்' என்று சொல்லி, அதை வாங்கிக் கொண்டேன்.

விருந்திற்கு மத்தியில் திடீரென்று ஒரு ஜால வித்தைக்காரன் தோன்றினன். பல்வேறு விதமான வித்தைகளைக் காட்டி எல்லோரையும் மகிழ்விக்கச் செய்து கொண்டிருந்தான். எங்கள் காதிலிருந்து, வாயிலிருந்து, மூக்கிலிருந்து, கண்ணிலிருந்து நாணயங்களை எடுத்து எங்களை அதிசயிக்க வைத்தான். ஒரு கயிற்றைக் கத்திரிக்கோலால் வெட்டச் சொல்லி, வெட்டிய இரு நுனிகளையும் ஒன்ருகப் பொருத்தினன். கயிறு பழையபடியே ஆகி விட்டது. அதைக் கையில் வாங்கிப் பல விதங்களில் பரிசோதித்துப் பார்த்தோம். பழையபடியேதான் இருந்தது. சாதாரணக் கயிருகத்தான் இருந்தது.



அங்கெல்லாம விருந்து என்ருல், குறைந்தது மூன்று மணி, நான்கு மணி நேரமாவது ஆகும். இரவு பன்னிரண்டு மணிக்கு முன்னல் ஒருவரும் எழுந்திருப்பதில்லை.

'பாரிஸைப் பற்றி உங்கள் கருத்து என்ன ?' என்று பாரிஸ் நண்பர்கள் கேட்டார்கள். ஒளிக்காமல் எனது ஏமாற்றத்தைத் தெளிவாக எடுத்துச் சொன்னேன்.

'பாரிஸ் நகரில் ஒன்றிரண்டு நாட்கள் தங்குவதால், நகரின் பெருமையைப் புரிந்து கொள்ளவோ, நகரின் அழகை அனுபவிப்பதோ முடியாது. குறைந்தது ஒரு மாதமாவது பாரிஸில் தங்கி இருந்தால், அதற்குப் பின் பாரிஸைத் தவிர வேறு எந்த நகரத்தையும் விரும்ப மாட்டார்கள்' என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டார்கள். 'முடியுமானால் பிற்காலத்தில் மறுமுறையும் வந்து ஒரு மாதம் தங்கி, நீங்கள் சொன்னது சரியா என்று சோதனை செய்துவிடுகிறேன்' என்று அவர்களுக்குப் பதில் சொன்னேன்.

அவர்கள் சொன்னது என்னவோ உண்மை. பாரிஸில் இரண்டு நாட்கள் என்று சொன்னால், ஒரு சிறு பகுதியைக் கூடச் சரியாகக் காண முடியாது. என்ன செய்வது ? அதற்கு மேல் நாட்கள் ஒதுக்க முடியவில்லையே !

அடுத்த நாள் அதிகாலையில் எழுந்து, விமானம் மூலம் ஸ்விட்சர்லாந்துக்குப் புறப்பட்டோம்.



# ஸ்விட்சர்லாந்து

ஸ்விட்சர்லாந்தில் உள்ள மூன்று முக்கிய நகரங்களைக் குறிப்பிடச் சொன்னால், ஜுரிச், பெர்ன் (Berne), ஜெனிவா என்று யாரும் தயங்காது குறிப்பிடுவார்கள். மூன்றும் மூன்று விதங்களில் புகழ் பெற்றவை. ஜுரிச் நகரம், அகில உலக பாங்க்காக விளங்குகிறது. எந்த அன்னிய நாட்டு நாணயத்தையும் அங்கு பெற முடியும். உலகிலுள்ள பல்வேறு தனவந்தர்கள் ஜுரிச்சிலுள்ள பாங்கில் பணம் போட்டு வைத்திருக்கிறார்கள் என்பது வதந்தி! ஆனால் அதைப் பற்றி யாரும் விசாரித்துத் தெரிந்து கொள்ள முடியாது, அதை ஒரு பெரிய ரகசியமாகவே காப்பாற்றி வருகிறார்கள்.

பெர்ன் தான் ஸ்விட்சர்லாந்துக்குத் தலை நகரம். ஜெனிவா, சர்வதேச மகா சபையின் (லீக் ஆப் நேஷன்ஸ்) இருப்பிடமாக இருந்து புகழ் பெற்றது. இன்றைக்கும் பல உலக மகா நாடுகள் அங்கு தான் கூடுகின்றன.

நாங்கள் பாரிஸ் நகரிலிருந்து முதலில் ஜுரிச் நகருக்குச் சென்றோம். பிரான்ஸ் தேச எல்லையைக் கடந்து, ஸ்விட்சர்லாந்து எல்லையை அடைந்ததுமே, காட்சிகள் மாறி விட்டன. எங்கும் பனி படிந்த மலையின் சிகரங்கள், அடர்ந்த காடுகள், ஓடும் நதிகள், விசாலமான ஏரிகள், ஏரிக் கரைகளிலே நகரங்கள்! இதைப்போன்ற ரம்மியமான காட்சிகள்தாம் தென்படுகின்றன.

ஸ்விட்சர்லாந்தின் அமைப்பே மிகவும் அற்புதமானது. பெரும்பாலும் மலைப் பிரதேசங்களிலேயே அமைந்துள்ளது. ஐரோப்பாவின் விளையாட்டு மைதானம், ஆரோக்கிய ஸ்தலம் என்றெல்லாம் இதைக் குறிப்பிடுவதுண்டு. உயர்ந்த மலைகள் இருக்கின்ற காரணத்தினால், கோடையிலும் அங்கு மக்கள் செல்லுகின்றனர். குளிர் காலங்களிலும் பனி மூடிய மலைகள் இருக்கின்ற காரணத்தினால், பனி வெளிகளில் விளையாடப்படும் பல சறுக்கல் விளையாட்டுக்களிலும், கேளிக்கைகளிலும் கலந்து கொள்வதற்கு உலகின் பல பாகங்களிலிருந்து மக்கள் வருகிறார்கள். இவ்வாறு யாத்ரிகர்கள் அதிகமாக அந்நாட்டுக்கு வருகின்ற காரணத்தினால், யாத்ரிகர்களுக்கு வசதி செய்து கொடுக்கக் கூடிய பல தொழில்களும் அங்கு ஏற்பட்டுள்ளன.



● ஸ்விட்சர்லாந்து நாட்டின் ஒரு அற்புதத் தோற்றம்.



பனிச் சிகரங்கள் மிகுந்த பிரதேசம் ஸ்விட்சர்லாந்து. குன்றுகளைக் கடக்க அவர்கள் கையாளும் கம்பியில் ஓடும் மின்சார ரயில் பெட்டி.

●

எழில் மிகு ஜெனிவாவின் ஒரு தோற்றம்.

ஸ்விட்சர்லாந்து ஓட்டல்கள் உலகப் புகழ் பெற்றவை. இயற்கைக் காட்சிகள் நிறைந்து விளங்கும் இடங்களில் அவை கட்டப்பட்டிருக்கின்றன. யாத்ரிகர்கள் மூலம் வரக் கூடிய வருமானம், ஸ்விட்சர்லாந்து நாட்டுக்குப் பெருமள வில் உதவுகின்றது.

ஜூரிச் நகரை அடுத்துள்ள விமான நிலையத்தில், அக் டோபர் மாதம் பதினும் தேதி காலை பதினேரு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். இந்திய தூதுவர் காரியாலய அதி காரிகளும், ஜூரிச் நகர அதிகாரிகளும் எங்களை வரவேற்கத் தயாராகக் காத்திருந்தார்கள்.

பகல் உணவு சாப்பிட்ட பின் அமைச்சர் ரீல் (Real) என் பவர் எங்களை ஜூரிச் நகரில் அமைந்துள்ள என்ஸைடென் (Ensiedeln) என்ற இடத்தில் உள்ள ஒரு கிறிஸ்தவ மடா லயத்திற்கு அழைத்துச் சென்ருர். அதற்குப் போகும் வழி முழுவதும மலைப் பகுதிகளிலேயே செல்லுகின்றது.

இந்த மடாலயம் மிகவும் பிரசித்தி பெற்றது. அங்கே யுள்ள மாதா கோவிலுக்கு லட்சக் கணக்கான ரோமன் கத் தோலிக்க யாத்ரிகர்கள் ஆண்டுதோறும் செல்லுகின்றனர். இந்தக் கோவில், ஸ்விட்சர்லாந்துக்கு மையத்தில் அமைந் துள்ளது. ஒன்பதாவது நூற்ருண்டில் இந்த இடத்தில் இந் தக் கோவில் ஏற்பட்டதாக வரலாறு கூறுகிறது. ஒரு கிறிஸ் தவப் பாதிரி இங்கு தவம் புரிந்ததாகவும், 861-ம் ஆண்டு, ஜனவரி மாதம் 21-ம் தேதி அன்று, யாரோ இரு முரடர்க ளால் அவர் அடித்துக் கொலை செய்யப்பட்டதாகவும், அவர் வசித்து வந்த இடத்தில் தான் இந்தக் கோவில் அமைந் திருப்பதாகவும் சொல்லப்படுகின்றது. இந்தக் கோவிலில் கருங்கல்லினுல் செய்த மாதாவின் திரு உருவம் வைக்கப் பட்டிருக்கிறது. சாந்தி நிறைந்த முகத்துடன் குழந்தை யைக் கையில் ஏந்தியவர்களாக மாதா காட்சி அளிக்கிருர். இந்தப் பிரதான கோவிலைச் சுற்றி, பெரிய சர்ச் ஒன்றையும் கட்டி முடித்திருக்கின்ருர்கள்.

இங்குள்ள கட்டடங்களின் அமைப்பும், கட்டடத்தி லுள்ள வேலைப்பாடுகளும், வரையப்பட்டுள்ள வர்ண சித்தி ரங்களும் யாருடைய மனத்தையும் எளிதில் கவர்ந்து விடும். அந்தக் கட்டடத்தின் முழு அமைப்பையும் ஒரு பாதிரியாரே திட்ட மிட்டதாகவும், தொடர்ந்து பலர் முயற்சியினுல் அது கட்டி முடிக்கப்பட்டதாகவும் கூறுகின்றனர். நம் முடைய கோவில்களைப்பற்றி நாம் இங்கு பெருமைப்பட்டுக் கொள்கிருேம் அல்லவா ? அதே முறையில் தான் இந்தக் கோவிலைப் பற்றியும் ஸ்விட்சர்லாந்து மக்கள் பெருமைப்படு கின்றனர். தெய்வ பக்தியினுல்தூண்டப்பட்டவர்கள்தான் இவ்வளவு பிரமாண்டமான, அழகிய கட்டடங்களைக் கட்டி முடித்திருக்க முடியும். இங்கு சுமார் இருநூறு பாதிரிமார் கள் வசித்து வருகிருர்கள். ஒரு பள்ளிக்கூடமும் இத்துடன்

இணைக்கப்பட்டுள்ளது. மாலை நாலு மணிக்கு பூஜை நடை பெறும் நேரம். அதை மேல் மாடியிலிருந்து கவனித்தோம். ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் அங்கு அமைதியாக, மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்கின்ற காட்சியும், மணி யடித்தவுடன் பாதிரிமார்கள் அவர்களுக்கென ஏற்பட்ட உடையில், சிறுவர்கள் முன்னால் பாடிக்கொண்டு வர, அணி வகுத்து மாதா கோவிலை வந்துஅடைவதையும், மாதாவுக்கு முன் பாடிப் பிரார்த்தனை நடத்துவதையும் கண்டால், எவ ருடைய மனமும் அதில் லயித்துவிடும் என்பதற்கு ஐய மில்லை. பல விழாக்கள் இங்கு கொண்டாடப்படுகின்றன.

விஞ்ஞான அறிவு வளர்ந்து, தெய்வ நம்பிக்கை குறைந்து வருகிறது என்று சொல்லும் இக் காலத்திலும், இங்கு, பக்தியுடன். மக்கள் லட்சக் கணக்கில் இக் கோவி லுக்கு வந்து செல்கின்றார்கள் என்பதை, இக் கோவிலைப் பார்க்கிறவர்களால்தான் நம்ப முடியும். அக்கோவிலின் பாதிரித் தலைவர் எங்களை வெகு அன்புடன் வரவேற்று, ஆலயத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் சென்று காண்பித்தார். ஒவ்வொரு பகுதியின் வரலாற்றையும் சிறப்பையும் எடுத்து விளக்கினார். அங்கு நடந்து வரக் கூடிய பள்ளியைப் பற்றியும் எடுத்துக் கூறினார்.

பள்ளியைப் பற்றிய ஒரு விசேஷம். அங்கு வரும் ஒவ் வொரு மாணவனுடைய வரலாறும் குறித்து வைக்கப்பட்டு, அம்மாணவனுடைய பிற்கால வாழ்வைப் பற்றியும் எழுதி வைத்திருக்கின்றார்கள். மாணவர்கள் ஏதோ படித்தார்கள், போய் விட்டார்கள் என்று விட்டு விடுவதில்லை. இங்கு பயிற்சிபெற்றமாணவர்கள் பிற்காலத்தில் எவ்வாறுவிளங்கு கிறார்கள் என்பதையும் அறிந்து கொள்ள முயலுகிறார்கள். நம்முடையமுக்கியமான சிலபள்ளிகளாவது இந்தமுறையை அனுஷ்டிப்பது நல்லது என்பது என்னுடைய கருத்து.

கோவிலைப் பார்த்த பின்பு, அங்கிருந்து ஸ்விக்ஸ் **(Schwyz)** என்ற ஒரு கிராமத்திற்கு அழைத்துச் செல்லப்பட் டோம். வழியெல்லாம் மழை பெய்து கொண்டிருந்தது. அதோடு மட்டுமல்லாமல் திடீரென்று வெண் பனியும் பெய்ய ஆரம்பித்தது. அநேகமாகக் குளிர்காலங்களில்தான் பனி பெய்வதைக் காண முடியும். ஆனால் கோடை காலத்தி லேயே பனி பெய்வதைப் பார்க்கும் அந்த அனுபவமும் எங் களுக்குக் கிட்டியது.

ஸ்விக்ஸ் கிராமத்தைப் போய்ச் சேருவதற்குள் இருட்டி விட்டது. அக் கிராம சபையின் தலைவர்கள் எங்களை வர வேற்று, கிராமச் சாவடிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பு அவர்களுடைய மூதா தையர்கள், நிலப்பிரபுக்களின்ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெற்றது பற்றியும், சுதந்திரப் பிரகடனம் செய்த பத்திரங் களைப் பற்றியும் எங்களுக்கு எடுத்துரைத்ததுடன், பத்திரங்



களின் அசலையும் எங்களுக்குக் காண்பித்தார்கள். அவர்களுடைய முன்னோர்கள் கிராமப்புறத்தில் கூடி, தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்ததை, அங்கு சித்திரித்து வைத்திருக்கிறார்கள். அவற்றை எங்களுக்குப் பெருமையுடன் காட்டினார். இதற்குப் பின் ஜூரிச் திரும்பினோம்.

அடுத்த நாள் ஜூரிச் நகருக்கு அருகே உள்ள சில சிறு ரகத் தொழிற்சாலையைப் பார்க்க ஏற்பாடு செய்திருந்தார்கள். முதன் முதலாக மெய்ட்லர் அண்ட் கோ (Meitler and Co.) என்ற தொழிற்சாலைக்குச் சென்றோம். அங்கு மிகவும் நுட்பமான தராசுகள் செய்யப்படுகின்றன. எலக்ட்ரானிக் என்று சொல்லக்கூடிய விஞ்ஞான நுட்ப அடிப்படையில் இயங்கும் தராசுகள் அவை. குந்துமணியில், லட்சத்தில் ஒரு பகுதியையும் கூட அத் தராசுகளில் நிறை போட்டு எடுத்து விட முடியும். அவற்றின் நுணுக்கங்களை எங்களுக்கு விளக்கிக் கூறி, அவை செய்யப்படும் விதத்தையும் காட்டினார்கள். உலகில் பல பகுதிகளிலிருந்து இத் தராசுகளை வாங்க முன் வருவதாகச் சொன்னார்கள்.

அடுத்து நாங்கள் சென்றது ஸெரிபரஸ் (Cereberus) என்றதொரு தொழில் ஸ்தாபனம். இங்கு பல்வேறு விதமான எலக்ட்ரானிக் வால்வுகள் செய்கிறார்கள். இந்த வால்வுகள், ரேடியோ, கம்பி இல்லாத் தந்தி போன்றவற்றில் உபயோகப்படுத்தப் படுகின்றன. இவற்றை உற்பத்தி செய்யும் முறையை எங்களுக்குக் காண்பித்தார்கள். இவ் வால்வுகளை உபயோகப்படுத்தி, பல நூதனக் கருவிகள் செய்யப்படுகின்றன. ஏதாவது கட்டடங்களில் தீ பிடித்துக் கொண்டால், உடனடியாக எச்சரிக்கை செய்வதற்கான இயந்திரக் கருவிகளை இங்கு சிருஷ்டித்து வருகிறார்கள்.

ஒரு அறைக்குள் நாங்கள் அனைவரும் அமர்ந்தோம். அறைக்கு மத்தியில் சிறிது பஞ்சு வைக்கப்பட்டு, அதிலே தீ இடப்பட்டது. சிறிது புகைய ஆரம்பித்தவுடனேயே ஆங்காங்கு எச்சரிக்கும் சிவப்பு விளக்குகள் எரிய ஆரம்பித்தன. பல இடங்களில் மணிகள் ஒலித்தன. இன்றைக்குப் பல பெரிய கட்டடங்களில் இதைப்போன்ற தீ எச்சரிக்கைக் கருவிகள் பொருத்தப் படுகின்றனவென்றும், இக் கருவிகளுக்கு அதிக கிராக்கி ஏற்பட்டு வருகிறதென்றும் அவர்கள் எனக்குச் சொன்னார்கள்.

இதற்குப் பின், காரில் புறப்பட்டு பெர்ன் நகரம் சேர்ந்தோம். இந்த நகரத்தில் தான் இந்தியத் தூதுவராலயம் உள்ளது. தூதுவர் இல்லத்திலேயே நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

திரு எம். கே. வெள்ளோடி அவர்கள்தான் அங்கு தூதுவராகப் பணியாற்றி வருகிறார். ஐ. சி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர் அவர். சில ஆண்டுகளுக்கு முன்பு டெல்லியில் ராணுவ இலாகா காரியதரிசி பதவியில்

இருந்தவர். அப்போது அவரை டெல்லி காரியாலயத்தில் நான் சந்திக்க நேரிட்டது. பல விஷயங்களைப் பற்றி அவருடன் பேசிக்கொண்டிருந்து விட்டு, திடீரென்று 'என்னை உங்களுக்கு அடையாளம் தெரிகின்றதா' என்று புதிர்க் கேள்வி ஒன்றைப் போட்டேன். அவர் திகைத்தார். "என்ன இவ்வாறு கேட்கிறீர்கள்?" என்றார். "அமைச்சர் சுப்பிரமணியத்தை அடையாளம் கண்டு கொள்வது பற்றி நான் உங்களைக் கேட்கவில்லை. இதற்கு முன்பே ஒரு முக்கியமான கட்டத்தில் நாம் சந்தித்திருக்கிறோம், அது நினைவிருக்கிறதா என்றுதான் கேட்டேன்" என்றேன்.

"கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்கள்?" என்று கேட்டார் திரு வெள்ளோடி.

"1932ம் ஆண்டு சத்தியாக்கிரக இயக்கத்தில் சேர்ந்து, சட்டத்தை மீறியதற்காக நீங்கள்தான் என்னை விசாரணை செய்து ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனையும் கொடுத்தீர்கள். நீங்கள் பொள்ளாச்சியில் சப் கலெக்டராக இருந்த போது அது நிகழ்ந்தது" என்றதும், "அது நீங்களா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

பெர்ன் நகரில் அவருடைய இல்லத்தில் என்னை மிக அன்புடன் வரவேற்று உபசரித்தார். அன்றிரவு எங்களுக்காக ஒரு பெரிய விருந்தும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

அடுத்தநாள் காலை உலகப் பிரசித்திபெற்ற ஜெனிவா நகரத்திற்குக் காரில் சென்றோம். வழியெல்லாம் மனத்தைக் கவரும் காட்சிகள் தென்பட்டன. ஜெனிவா நகரை அணுகுவதற்கு முன்பு, ஜெனிவா ஏரியை அடைகின்றோம். உலகிலுள்ள பெரிய ஏரிகளில் இதுவும் ஒன்று. ஒரு கரையிலிருந்து இன்னொரு கரை தென்படுவதே கஷ்டம்.

இந்த ஜெனிவா ஏரியின் ஒரு கரை, பிரான்ஸ் நாட்டிலும், இன்னொரு கரை ஸ்விட்சர்லாந்து நாட்டிலும் அமைந்துள்ளது. அளவில் மட்டுமல்ல, அழகிலும் சிறந்ததொரு ஏரி இது. அதன் கரையோரமாகவே சென்று, ஜெனிவா நகரை அடைகிறோம். எந்தச் சாலையில் சென்றாலும் பெரிய பெரிய ஓட்டல்கள்தான் தென்படுகின்றன. அவ்வளவு ஓட்டல்கள் இருந்தாலும், விசேஷ காலங்களில் அங்கு வருகின்றவர்களுடைய எண்ணிக்கையின் காரணமாக, ஓட்டல்களில் தங்க இடம் கிடைப்பது அரிதாகி விடுகிறது. ஒரு வருடத்திற்கு முன்னமேயே இந்த ஓட்டல்களிலெல்லாம் அறைகள் ரிசர்வ் செய்யப்படுவதாகச் சொல்கின்றார்கள்.

நாங்கள் தங்கி இருந்த ஓட்டல், ஒரு நதிக்கரையில் அமைந்திருந்தது. ஓட்டல் அறையிலிருந்து வெளியே

நோக்கினுல் சலசலவென்று ஓடுகின்ற நதியும், நகரத்தின் எழில்மிக்க பலபகுதிகளும் கண்ணுக்கு விருந்தளிக்கின்றன.

ஜெனிவா ஒரு சர்வதேச நகராகத்தான் கருதப்பட வேண்டும். சாலைகளில் நடந்து செல்வோமானுல், உலகி லுள்ள பல நாட்டு மக்களைச் சந்திக்க முடியும். பல நாட் டைச் சேர்ந்தவர்கள் இங்கு உலக ஸ்தாபனங்களில் பணி யாற்றி வருகிருர்கள். இவர்கள் தவிர, யாத்ரிகர்களாக வருகின்றவர்கள் பலர். இதன் காரணமாக ஓட்டல்களில் அநேகமாக எந்த நாட்டு உணவு வேண்டுமானுலும் நாம் பெறக்கூடிய வசதி செய்திருக்கிருர்கள். ஆம்! ஜெனிவா நகரம் உணவுக்கும் பெயர் போனதுதான்! அத்துடன் வெளிநாட்டிலிருந்து வருகின்றவர்களுக்குத் தங்கள் நாட் டுப் பொருள்களை விற்பனை செய்வதற்காகப் பெரிய பெரிய கடைகளை அமைத்திருக்கின்றனர். அவற்றில் முக்கியமாக கடிகாரக் கடைகள் யாருடைய கவனத்தையும் கவரும்.

வித விதமான கடிகாரங்களை அங்கு காணலாம். மோதிரத்தில் அமைக்கப்பட்ட கடிகாரங்களிலிருந்து கோபு ரங்களில் அமைக்கும் பெரிய கடிகாரங்கள் வரை, ஒவ் வொரு கடையிலும் கண்காட்சியைப் போல் அமைத்து விளம்பரப் படுத்துகிருர்கள். ஒரு கடைக்குச் சென்ருல், பல மணி நேரங்களைக் கடிகாரங்களைப் பார்த்துக்கொண்டே கழிக்கலாம். கடிகாரங்கள் மட்டுமல்ல, ஜெனிவாவில் கிடைக்காத பொருள்கள் இல்லை என்றே சொல்லலாம்! அந்த அளவிற்கு வியாபாரமும் அங்கு நடைபெறுகிறது.

முதல் மகா யுத்தம் முடிந்த பிற்பாடு உலகத்திலே சமா தானத்தை நிலைநாட்டுவதற்காக 'லீக் ஆப் நேஷன்ஸ்' என்ற சர்வ தேச சங்க ஸ்தாபனம் நிறுவப்பட்டது. அதை எந்த இடத்தில் அமைக்க வேண்டும் என்ற யோசனை எழுந்த போது, ஜெனிவா நகரத்தைத்தான் ஏகமனதாகத் தேர்ந் தெடுத்தார்கள். இச்சபைக்கென ஒரு கட்டடத்தையும் அங்கு அமைத்திருக்கிருர்கள். பார்க்கவேண்டிய கட்டடங் களிலே அதுவும் ஒன்று. ஆனுல், இன்றைக்கு அக்கட்டடத் தின் முக்கியத்துவம் குறைந்து விட்டது. காரணம், இரண் டாவது மகா யுத்தம் ஏற்பட்ட பின், இந்த உலக சபை கலைக்கப்பட்டது. அதற்குப் பதிலாக ஐக்கிய நாட்டு ஸ்தாப னங்கள் உருவாகி, அமெரிக்காவில் நியூ யார்க் நகரில் இயங்கி வருகிறது. சமீபத்தில் ரஷ்ய நாட்டுத் தலைவர், இந்த சபையை நியூ யார்க் பட்டினத்திலிருந்து எடுத்து, ஜெனிவாவுக்குக் கொண்டுபோய்விடவேண்டும் என்ற கருத் தைத் தெரிவித்திருந்ததை, நேயர்கள் கவனித்திருக்கலாம்.

ஐ. நா. ஸ்தாபனத்தைப் பற்றி எனக்கு அனுபவம் இல்லை. ஆனுல் ஜெனிவா நகர அமைப்பும், அதன் சூழ் நிலையும் உண்மையிலேயே சமாதானத்தை நிலை நாட்டுவ தற்கு ஏற்றதாகத் தான் எனக்குக் காட்சி அளித்தது.



ஜெனிவா நகரில் ஒரு நாள் தங்கி விட்டு, அடுத்த நாள் பெர்ன் நகருக்குத் திரும்ப ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இப்போது வேறு பாதை வழியாகச் சென்றோம். புதிய காட்சிகள் எங்கள் கண்களைக் கவர்ந்தன. பெர்ன் நகருக்குப் போகிற வழியில், ஸோலோதார்ன் (Solothorne) என்ற சிறு நகரத்தில் அமைந்துள்ள ஒரு கடிகார உற்பத்தி சாலைக்குச் சென்றிருந்தோம். திரு வெள்ளோடு அவர்களும் எங்களுடன் அங்கு வந்து சேர்ந்து கொண்டார். அந்தக் கம்பெனியின் முதல்வரும், மற்ற டைரக்டர்களும் எங்களைக் குதூகலமாக வரவேற்று, அக் கம்பெனியின் எல்லாப் பகுதிகளுக்கும் அழைத்துச் சென்றார்கள்.

ரோமர் கடிகாரங்கள் உலகப் புகழ் பெற்றவை. இந்த ரக கடிகாரங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையும், ஆயிரக்கணக்கான மக்கள் பணியாற்றக் கூடியதாக பெரிய அளவில் அமைந்திருக்கிறது. ஒவ்வொரு பகுதியிலும் கடிகாரத்தின் ஒவ்வொரு பாகம் செய்யப்படுகின்றது. இவ்வாறு தனித்தனியாக உற்பத்தி செய்யப்படுகின்ற பல்வேறு பாகங்களையும் இணைத்து, கடிகாரம் தயாரிக்கப் படுகின்றது. பல பணிகளில் பெண்கள்தான் ஈடுபட்டிருக்கிறார்கள். நுணுக்கமான பாகங்களிலும், கைத்திறனைக் கொண்டு முடிக்க வேண்டியவற்றிலும் பெண்கள்தான் திறமையுடன் பணி புரிகின்றார்கள் என்று கூறினார்கள். ஒவ்வொரு கடிகாரமும் நுணுக்கமாகப் பரிசீலிக்கப்பட்டு, எந்த விதமான குறைகளும் இல்லையென்று உறுதியான பின்தான், கடிகாரம் வெளியில் அனுப்பப்படுகிறது.

இத் தொழிற்சாலையில் நாள் ஒன்றுக்கு மூவாயிரம் கடிகாரங்கள் உற்பத்தி ஆகின்றன. அங்கு தொழிலாளி-முதலாளி உறவைப் பற்றிப் பெரிதும் எடுத்துரைத்தார்கள். இத் தொழிற்சாலையில் உள்ளவர்கள் எல்லோருமே, ஒரே குடும்பத்தினரைப் போல இயங்குவதாகக் கூறினார்கள். புதிய தொழிலாளிகளைத் தேர்ந்தெடுப்பதிலும், தேர்ந்தெடுக்கப்பட்ட தொழிலாளிக்குப் பயிற்சி கொடுப்பதிலும் முக்கிய கவனம் செலுத்தப்படுகிறது. தொழிலாளர் குடியிருப்பு வசதிக்கு நல்ல வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். வாரத்தில் ஐந்து நாட்கள்தான் வேலை. விடுமுறைகளை நன்கு கழிப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பல க்ஷேம நிதிகளை ஏற்படுத்தி, அதன் மூலம் நோய்வாய்ப்பட்டு விட்டாலும், வேலை செய்ய இயலாது போய்விட்டாலும் தகுந்த பாதுகாப்பு அளிக்கிறார்கள்.

இங்கிருக்கக்கூடிய சிறப்பான முறை ஒன்றை இந்த ஸ்தாபனத்தின் தலைவர் எடுத்துரைத்தார். ஒவ்வொரு தொழிலாளியின் பிறந்த தினத்தையும் குறித்து வைத்து, ஒவ்வொரு தொழிலாளியின் பிறந்த தினத்தன்றும், முதலாளியே அவரை நேரில் அழைத்து பரிசு வழங்குவது இந்த

ஸ்தாபனத்தின் மரபாக இருந்து வருகின்றது. இவை அனைத்தையும் விட, தொழிலாளர்களின் குழந்தைகளுக்காகச் செய்து கொடுக்கப்பட்டிருக்கும் பல்வேறு வசதிகள் தான் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன.

தாய்மார்கள் தொழிற்சாலையில் பணி புரியும்போது குழந்தைகளைப் பேணுவதற்காக சிசு பரிபாலன நிலையம் ஒன்றும் நடத்தப்பட்டு வருகின்றது. பயிற்சி பெற்ற தாதிமார்கள்அக் குழந்தைகளுக்கு உணவு ஊட்டுவதுடன், மற்ற சேவைகளைப் புரிவதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளார்கள். இச் சிறு குழந்தைகள் இருக்கும் இடத்தைச் சென்று பார்த்தோம். எல்லாக் குழந்தைகளுமே நல்ல ஆரோக்கியத்துடன் 'கொழு கொழு' வென்றிருக்கக்கூடிய காட்சி, மனத்திற்குக் களிப்பை ஊட்டியது. விளையாடும் பருவக் குழந்தைகளுக்கு அதற்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். விளையாடுகின்ற காலத்திலேயே பல்வேறு விதமான அறிவைக் கொடுக்கும் புதிய முறைகளைக் கையாண்டு, குழந்தைகள் நல்ல அறிவுடனும், சிறந்த பழக்க வழக்கங்களுடனும் வளர வாய்ப்பளித்துள்ளார்கள். பள்ளி செல்லும் குழந்தைகளுக்குத் தனி ஏற்பாடு. வருங்கால சமுதாயம் நல்ல அறிவும், திறனும், பண்பும் உள்ளதாக இருக்க வேண்டும் என்பதில், ஸ்விட்சர்லாந்து மக்கள் எவ்வளவு அக்கறை கொள்கிறார்கள் என்பதற்கு இவையெல்லாம் ஒரு விளக்கமாக இருந்தது.

மூன்று நான்கு வருடங்களுக்கு முன்பு, இந்த ரோமர் கடிகாரக் கம்பெனியாரின் ஒத்துழைப்புடன் நம் நாட்டில் ஒரு கடிகாரத் தொழிற்சாலை ஏற்படுத்துவதென ஒரு திட்டம் இருந்தது. ஆனால் அது கைகூடவில்லை. அதற்குக் காரணம் என்னவென்று அவர்களிடம் விசாரித்தேன். அவர்கள் சொன்னதிலிருந்து, இந்தியாவின் தொழில் நிலையைப் பற்றிய எவ்வளவு தவறான கருத்துக்கள் இன்னும் வெளி நாடுகளிலே நிலவி வருகின்றன என்பது தெரிய வந்தது.

மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கும் இந்தியா போன்ற நாடுகளில், எடுத்தவுடனேயே நுணுக்கமான கடிகாரங்கள் செய்வதென்பது இயலாத காரியம் என்றும், பெரிய அளவில் இக் கடிகாரங்களை உற்பத்தி செய்தாலும் அதை வாங்குவதற்குப்போதுமான மக்கள்இருக்கமாட்டார்கள் என்ற கருத்தையும் தெரிவித்தார்கள். ஆகவே, எளிதாகவும்,விலை குறைவிலும் உற்பத்தி ஆகக்கூடிய மேஜைக் கடிகாரங்களை முதலில் செய்ய ஆரம்பித்து, அதிலிருந்து படிப்படியாக மற்ற கடிகாரங்களைச் செய்ய முன் வர வேண்டும். இந்த அடிப்படையில் 'நாங்கள் திட்டம் வகுத்துக் கொடுத்ததை உங்கள் இந்திய சர்க்கார் நிராகரித்து விட்டது' என்று சொன்னார்கள்.



இதைப் பற்றி நான் ஆச்சரியப்படவில்லை என்று சொல்லி, தற்போது இந்தியாவில் ஏற்பட்டிருக்கக் கூடிய தொழில் முன்னேற்றத்தைப் பற்றி அவர்களுக்கு விளக்கினேன். எந்தவித நுணுக்கமான இயந்திரங்களையும் செய்யக்கூடிய சக்தி, திறமை, இந்தியத் தொழிலாளர்களுக்கு ஏற்பட்டிருப்பது பற்றியும், அதற்குச் சான்றாக ஸ்விட்சர்லாந்து தொழில் நிபுணர்களின் ஒத்துழைப்புடன் நம் நாட்டில் அமைக்கப்பட்டிருக்கும் பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையையும், பெங்களூர் மெஷின் டூல் தொழிற்சாலையையும் எடுத்துக் காட்டினேன். ஸ்விட்சர்லாந்து எஞ்சினியர்களே, இந்தியர்களின் தொழில் நுட்ப அறிவைக் கண்டு வியக்கக்கூடிய நிலை ஏற்பட்டிருப்பதையும் அவர்களுக்கு எடுத்துக் காட்டினேன்.

‘போதுமான அளவு கடிகாரங்கள் விற்பனை ஆகுமா?’ என்ற கேள்விக்கு, ‘நாங்கள் நாற்பது கோடி மக்கள். வளரும் சமுதாயமாக இருந்து வருகிறோம். கிராமம் ஒன்றுக்கு ஒரு கடிகாரம் என்று சொன்னால்கூட, சுமார் ஐந்து லட்சம் கடிகாரங்கள் தேவை. குடும்பத்துக்கு ஒன்று என்று கணக்குப் போட்டால், எட்டு கோடி கடிகாரங்கள் தேவை. ஆகவே இந்தியாவின் அளவையும், அங்கு ஏற்பட இருக்கும் புதிய வாய்ப்புகளையும் புரிந்து கொள்ளாத காரணத்தினால்தான், தவறான கருத்துக்கள் நிலவுகின்றன என்பதை அவர்களுக்கு விளக்கினேன்.

ரோமர் கம்பெனியார் நம் நாட்டில் கடிகாரத் தொழில் அமைப்பதற்காக முன் வராத காரணத்தினால், இத் திட்டங்கள் நின்றுவிடவில்லை. இன்றைக்கு ஜப்பான், பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளுடைய உதவியுடன், பல கடிகாரத் தொழிற்சாலைகள் நம் நாட்டில் அமைய விருக்கின்றன.

இன்றைக்கு நம் நாட்டுப் பிரச்னைகள் தீர வழி காண்பதற்காக மற்ற நாடுகளின் அனுபவத்தை அடிப்படையாக நாம் கொண்டிருப்பினும், மக்களின் எண்ணிக்கையின் காரணத்தாலும், வேகமாக மாறி வருகின்ற உலக சூழ்நிலையின் காரணமாகவும், விரைவில் நாம் பல திட்டங்களை நிறைவேற்ற வேண்டி உள்ளது. மேலை நாடுகளில் மெதுவாக, பல நூற்றாண்டுகள் தொடர்ந்து தொழில் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. அதே முறையில் நாமும் நம் நாட்டில் பல நூற்றாண்டுகள் காத்திருக்கக்கூடிய நிலை இல்லை. மக்கள் கூடிய சீக்கிரத்தில் தங்கள் குறைகள் தீர்ந்து, வாழ்க்கையின் அத்யாவசிய தேவைகளாவது பூர்த்தியாக வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள். இதைச் சாதிக்க முடியும் என்கிற நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட வேண்டும். இதற்காகத்தான் ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுக்கப்படுகின்றன. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆரம்பித்துள்ளோம்.



இம் முயற்சிகள் வெற்றி பெற்று, மக்கள் நல்வாழ்வு வாழ்வதற்கான வாய்ப்புகள் ஏற்படுவதற்கு, நாம் எல்லோரும் இறைவனைப் பிரார்த்திப்பதுடன், நம்மால் இயன்ற அளவு திறமையாக உழைப்போம் என்கிற விரதத்தையும் பூணுவோமாக !

குடியாட்சி முறையில் இயங்கி வரும் உலக நாடுகளில், ஸ்விட்சர்லாந்து பல வகைகளில் சிறப்புப் பெற்றது; பழமையானதும் கூட. உலகில் மற்றப் பகுதிகளில் குடியாட்சி ஏற்படுவதற்கு முன்பே, இந் நாட்டில் இம்முறை இயங்க ஆரம்பித்துவிட்டது என்பதை வரலாறு கூறுகிறது. அதோடு மட்டுமல்லாமல், குடியாட்சி முறைகளிலும் மற்ற நாடுகளில் இல்லாத பல முக்கிய அம்சங்கள் இங்கு தென்படுகின்றன. சமஷ்டி அடிப்படையில் அதன் அரசியல் அமைப்பு ஏற்பட்டிருப்பதன் காரணமாக, பல்வேறு புதிய புதிய முறைகளைக் கொண்ட நிர்வாக அமைப்புகள் அங்கு ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம். இவற்றுக்கெல்லாம் அடிப்படையான காரணம், ஸ்விட்சர்லாந்தின் இயற்கை அமைப்பும், அந்நாட்டு மக்களின் வரலாறுமே ஆகும்.

இன்றைக்கு ஒன்றுபட்டு, தேசபக்தி மிகுந்த மக்களைக் கொண்டதான ஒரு நாடாக ஸ்விட்சர்லாந்து விளங்குகின்றதாயினும், அந்நாட்டின் உள் அமைப்புக்களைப் பரிசீலிப்பவர்கள் யாவரும், உறுதியாக இணைக்கப்பட்ட நாடாக விளங்கக்கூடிய அம்சங்கள் அங்கு இல்லையென்ற முடிவுக்கே வருவார்கள்.

ஸ்விட்சர்லாந்தில் மூன்று இன மக்கள் வாழ்கின்றனர். பெரும் பகுதியினர் ஜெர்மன் இனத்தைச் சேர்ந்தவர்கள். அதற்கடுத்து இருப்பவர்கள் பிரெஞ்சு மக்கள்; மூன்றாவது பகுதியினர் இதாலிய மக்கள்.

ஜெர்மன், பிரெஞ்சு, இதாலி ஆகிய மூன்று மொழிகளும் அந்தந்த மக்களிடையே நிலவி வருகின்றன. மத அடிப்படையிலும் அங்கு ஒருமைப் பாட்டைக் காண முடியாது. பிராடெஸ்டெண்ட்ஸ், கத்தோலிக்கர்கள் ஆகிய இரு பிரிவுகளைச் சார்ந்தோர்களும் அங்கு வாழ்கின்றனர். நம் நாட்டைப் போன்று பல்லாயிரக் கணக்கான வருஷங்கள் கலாசார அடிப்படையில் இணைக்கப்பட்டிருந்த நாடும் அன்று. இருப்பினும் சென்ற பல நூற்றாண்டுகளாக இப் பகுதியில் நடந்த பல்வேறு சரித்திர நிகழ்ச்சிகளின் காரணமாக, இன்று உலகிலேயே சிறந்த ஒற்றுமை நிலவக்கூடிய நாடாக ஸ்விட்சர்லாந்து காட்சி அளிக்கின்றது.

ஸ்விட்சர்லாந்து தேசம் ஜெர்மன், பிரான்ஸ், இதாலி ஆகிய மூன்று நாடுகளுக்கும் மத்தியில் அமைந்திருக்கிறது. வடக்கிலும் கிழக்கிலும் ஜெர்மனியும், மேற்கே பிரான்சும், தெற்கேஇதாலியும் ஸ்விட்சர்லாந்தைச் சூழ்ந்திருக்கின்றன.

இதன் காரணமாக இம் மூன்று நாடுகளிலும் நடக்கின்ற நிகழ்ச்சிகளின் எதிரொலி, ஓரளவு ஸ்விட்சர்லாந்து தேசத்தில் தென்பட்டு வந்திருக்கின்றது. ஆயினும், இன்றைக்கு ஸ்விட்சர்லாந்து மக்கள் தங்கள் நாட்டுக்கே முதலிடம் கொடுப்பதோடல்லாமல், எந்த விதத்திலும் தங்கள் இனச் சார்பின் காரணமாக மற்ற நாடுகளுடன் தனித் தொடர்பு கொண்டிருப்பதைக் காண முடியாது. ஸ்விட்சர்லாந்து மக்கள் ஒவ்வொருவரிடமும், தான் ஸ்விட்சர்லாந்தின் குடிமகன் என்ற எண்ணம்தான் ஓங்கி நிற்கின்றது. இது நமக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

இங்கு நம் நாட்டில் பல இனங்களைச் சார்ந்தவர்கள் வசிக்கிருர்கள். ஆகவே, இது ஒரு நாடாக இயங்குவது இயலாத காரியம் என்று ஒரு சாரார் கருதுகின்றனர். ஆனுல், ஸ்விட்சர்லாந்தில் மூன்று தனிப்பட்ட இனங்கள் இன்று ஒரே நாட்டு மக்களாக வாழ்வதைக் காணமுடிகிறது.

சில சமயங்களில் பல மொழிகள் இருக்கின்ற காரணத்தால், நாடு ஒன்றுபட்டு இருக்கமுடியாது என்கின்ற வாதம் கிளப்பப்படுகிறது. ஸ்விட்சர்லாந்தில் பல மொழி பேசும் மக்கள் இருப்பினும், எந்த வித முரண்பாடுகளும் இன்றி ஒன்றுபட்டு வாழ்கின்றனர். அதிலும் முக்கியமாக மொழிப் பிரச்னை நம் நாட்டில் பெரும் சிக்கலான தொன்ருக இருந்து வருகின்றது. ஆகவே, அதைப் பற்றி ஸ்விட்சர்லாந்தின் நிலையை விசாரித்தறிய முயன்றேன்.

அங்கு ஜெர்மனி, பிரெஞ்சு, இதாலி ஆகிய மூன்று மொழிகளும் நிர்வாக மொழிகளாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளன. சட்ட சபையில் இந்த மூன்று மொழிகளில் எம் மொழியில் வேண்டுமானுலும் பேசலாம். நிர்வாகத்திலும் மூன்று மொழிகளும் உபயோகப்படுத்தப்படுகின்றன. ஒவ்வொரு அதிகாரியும் தான் நன்கு கற்றுள்ள மொழியில் குறிப்பை எழுதலாம். ஆனுல் இம்முறை வெற்றிகரமாக நடைபெறுவதற்கு, மற்ற இரு மொழிகளையும் ஒவ்வொரு அதிகாரியும் ஓரளவு தெரிந்திருப்பது அவசியம். அப்போது தான் மற்ற அதிகாரிகள் அவரவர் மொழியில் என்ன குறிப்பிட்டிருக்கிருர்கள் என்பதை அறிந்துகொண்டு, இவர் தம்முடைய குறிப்பை எழுத முடியும். இந்த அடிப்படையில் தான் அங்கு மும்மொழியும் நிர்வாக மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, நடைமுறையில் இருந்து வருகிறது. நம் நாட்டிலும், ஆங்கிலம், இந்தி ஆகிய இரு மொழிகளும், நிர்வாக மொழியாகத் தொடர்ந்து இருந்து வரவேண்டும் என்கின்ற முறையில், நாம் நம் நாட்டு மொழிப் பிரச்னைக்குத் தீர்வு காண முற்பட்டுள்ளோம். அந்தந்த ராஜ்யப் பகுதிகளில் ராஜ்ய மொழியே நிர்வாக மொழியாக அமைவதென ஒப்புக்கொண்டுள்ளோம். இந்தி, ஆங்கிலம் ஆகிய இரு மொழியும் மத்திய அரசுப் பகுதியில் நிர்வாக மொழியாக அமைய வேண்டும் என்று தற்போது



முடிவெடுத்துள்ளோம். இம் முறை வெற்றிகரமாக நடை பெறவேண்டுமென்று சொன்னால், மத்திய அரசு நிர்வாகத்தில் ஈடுபடுகின்றவர்கள், ஆங்கிலம், இந்தி என்ற இந்த இரண்டிலொன்றை நன்கு பயின்றிருப்பதுடன் மற்ற இன்னொரு மொழியையும் ஓரளவு கற்றிருக்கவேண்டியது அவசியம். நம் நாட்டில் ஆங்கிலம்—இந்தி ஆகிய இரு மொழிக் கொள்கையை ஒப்புக்கொள்கிறவர்களிலும் கூடச் சிலர் இந்தியை அறவே புறக்கணிக்கவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றனர். இந்தியையும் ஓரளவு கற்றுத் தெரிந்து கொண்டிருந்தால்தான், இரு மொழிகளையும் நிர்வாகத்தில் உபயோகிக்க முடியும். இந்த உண்மையையும் நம் நாட்டு மக்கள் நன்கு புரிந்துகொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

பல மதத்தைச் சார்ந்தவர்கள் இருப்பதும் ஒரு நாட்டினுடைய ஒற்றுமைக்குப் பாதகம் விளைவிக்கும் என்கின்ற தத்துவத்தை, ஸ்விட்சர்லாந்து பொய்ப்பித்துக் காண்பித்திருக்கின்றது. இவை யெல்லாம் உண்மையிலேயே நம்மிடையே இருக்கக்கூடிய பல கருத்துக் குழப்பங்களை விளக்கும் வகையில் அமைந்திருக்கின்றன என்பதைக் காண்கிறோம்.

ஸ்விட்சர்லாந்து அரசியல் அமைப்பில் மிகவும் முக்கியமானது, கிராம ஆட்சி அமைப்பு. ஒவ்வொரு கிராமமும் ஒரு ' கம்யூன் ' ஆக அமைக்கப்பட்டுள்ளது; நம்முடைய கிராமப் பஞ்சாயத்தைப் போல.

ஆனால் இங்கு கிராமங்களில் மக்களால் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அப் பிரதிநிதிகள் பஞ்சாயத்து சபையாக அமைந்து, கிராம நிர்வாகத்தை நடத்துகிறார்கள். ஸ்விட்சர்லாந்திலோ சிறு கிராமங்களில் வயது வந்த எல்லா மக்களுமே பொது சபையாக இயங்கி நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுகிறார்கள். பெரிய கிராமங்களிலும், நகரங்களிலும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அப்பிரதிநிதிகள் அடங்கிய சபை அன்றாட நிர்வாகத்தை நடத்திவந்தாலும் கூட, எல்லா மக்களும் அடங்கிய பொது சபை கூடி முடிவு காணுவதற்கும் அரசியல் அமைப்பில் வழி செய்யப்பட்டிருக்கிறது. கிராம, நகர அமைப்புக்கு மேலாக, நம் நாட்டில் ராஜ்யங்கள் ஏற்பட்டிருப்பதைப்போல, அங்கு காண்டன் **(Canton)** என்று சொல்லப்படும் பல பகுதிகளாக நாடு பிரிக்கப்பட்டுள்ளது.

ஸ்விட்சர்லாந்தில் மொத்தம் இருபத்திரண்டு காண்டன்கள் இருக்கின்றன. இவற்றில் மூன்று காண்டன்கள் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதால், மொத்தம் இருபத்தைந்து காண்டன்கள் என்று கூடச் சொல்லலாம். ஒவ்வொன்றுக்கும் தனி சட்ட சபையும், அரசியல் சட்டத்தின் கீழ்த் தனி நிர்வாக அமைப்பும் ஏற்பட்டிருக்கின்றன. எல்லாக் காண்டன்களும் சேர்ந்தது ஸ்விட்சர்லாந்து சமஷ்டி.

தேசத்திற்குப் பொதுவாக, தேசிய சட்ட சபையும் நிர்வாக அமைப்பும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அன்றாட நிர் வாகத்தைக் கவனித்து நடத்தி வருவதற்காக தேசிய சட்ட சபையால் ஒரு நிர்வாகக் குழு ஏற்படுத்தப்படுகிறது. இந் தக் குழு, நம் நாட்டிலுள்ள மந்திரி சபைக்கு ஒருவிதத் தில் ஒப்பானது என்றாலும்கூட, பல வகைகளில் மாறுபட் டும் இருக்கின்றது. இந்த நிர்வாகக் குழுவை மாற்றும் அதிகாரம், சட்ட சபைக்குக் கிடையாது.

மூன்று வருடத்திற் கொருமுறை இக் குழுவினர் தேர்ந் தெடுக்கப்பட்டாலும், அநேகமாக அவர் விரும்பும் வரை திரும்பத் திரும்ப ஒவ்வொருவரும் தேர்ந்தெடுக்கப் படு கிறார்கள். இதில் ஒருவர் தலைவராகவும், இன்னொருவர் உப தலைவராகவும் வருடத்திற்கு ஒரு முறை தேர்ந்தெடுக் கப்படுகிறார்கள். ஒரு முறை தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர், தொடர்ந்து அடுத்த ஆண்டு தலைவர் பதவி பெற முடியாது. தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவருக்கு நம் முதன் மந்திரிக்கு இருப்பதுபோல் சிறப்பான அதிகாரங்கள் கிடையாது. குழுக் கூட்டங்களில் தலைமை வகிக்கும் பொறுப்பு மட்டும்தான் உண்டு. இந்தக் குழுவில் ஒரு கட்சியைச் சேர்ந்தவர்கள்தான் இருக்க வேண்டும் என் றில்லை; பல கட்சியைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள்.

ஸ்விட்சர்லாந்து நாட்டில் அமுலில் இருக்கும் ஒரு புதிய சிறப்பு முறை, முக்கியமான சட்டங்கள் நடைமுறைக்கு வருவதற்கு முன், பொதுமக்களின் ஆதரவை வாக்களிப் பின் மூலம் பெறுவது. இவ்வாறு பல வழிகளில், பொது மக்கள் எந்த அளவிற்கு அரசியலில் பங்கெடுத்துக் கொள்ள முடியுமோ, அந்த அளவிற்கு சட்டத்தில் இடம் கொடுக் கப்பட்டிருக்கிறது.

ஸ்விட்சர்லாந்து நாட்டில், உலகின் பல பாகங்களி லிருந்து பிரயாணிகள் வருவதன் மூலமாக ஏற்பட்டிருக்கும் பல தொழில்கள்போக, வேறு பல கன இயந்திரத் தொழில் களும், சிறுரகத் தொழில்களும் பெரிய அளவில் அபிவிருத்தி அடைந்திருப்பதைக் காணலாம். நாட்டையே தொழில் அடிப்படையில் மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒன்று, பெரும்பாலும் கனரகத் தொழில்கள் பகுதி; இரண்டாவது சிறு ரகத் தொழில்கள் பரவலாக ஏற்பட்டுள்ள பகுதி; மூன்றாவது விவசாயமே முக்கியமான தொழிலாக உள்ள பகுதி. எல்லா பகுதியில் வாழ்கின்றவர்களும் நல்ல வரு வாய் பெற்று வளம் பெற்ற வாழ்க்கை நடத்துகிறார்கள். இதற்கு இயற்கையும் துணை புரிகின்றது. மலைப் பிரதேச மாக இருக்கின்ற காரணத்தினாலும், பல நதிகள் அங்கு ஓடு வதைப் பயன்படுத்தி ஜல மின்சாரம் பெரும் அளவில் உற் பத்தி செய்யப்படுகிறது. மின்சார வசதி எல்லாப் பகுதி களுக்கும் செய்து கொடுக்கப்பட்டிருப்பதுடன், குறைந்த கட்டணத்திற்கும் அச்சக்தி வழங்கப்படுகிறது. இதன்

காரணமாக, கிராமப் பகுதிகளிலும் பல தொழில்கள் ஏற்படக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. ஒவ்வொரு வீட்டிலும்கூட மின்சாரத்தினால் இயங்கப்படும் சிறு இயந்திரங்களை வைத்து பலவிதமான பொருள்களை உற்பத்தி செய்ய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

நம் தமிழ் நாட்டிலும் இன்றைக்குப் பெருவாரியான கிராமங்களுக்கு மின் வசதி செய்து கொடுக்கின்றார்கள். இதுவரை பத்தாயிரம் கிராமங்களுக்குமேல் இவ்வசதி விஸ்தரிக்கப்பட்டுள்ளது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள்ளாக, எல்லா கிராமங்களுக்கும் மின்சார வசதி செய்து கொடுத்து விட வேண்டுமெனத் திட்டமிட்டுள்ளோம். இருப்பினும், நம் கிராமங்களில் பெரும்பாலும் தண்ணீர் இறைப்பதற்கே இச் சக்தி பயன்படுகிறது.

மின்சாரத்தைச் சிறு சிறு தொழில்களுக்கு உபயோகப் படுத்த முன் வருவதன் மூலமாகத் தான், கிராமப் புறங்களிலே தொழில் பெருக்கம் ஏற்பட முடியும். மக்களின் வருவாயும் உயர முடியும். இதற்கு ஸ்விட்சர்லாந்து நாடு நமக்கு ஒரு வழி காட்டியாக விளங்குகிறது.

கிராமங்கள் பெரும்பாலும் இயற்கைச் சூழ் நிலையில் அமைந்திருக்கின்ற காரணத்தாலும், வீடுகள் நல்ல முறையில் கட்டப்பட்டிருப்பதாலும், அவை அழகாகவும் சுத்தமாகவும் தென்படுகின்றன. ஜெனிவா நகரிலிருந்து புறப்பட்டு, திரும்பவும் பெர்ன் நகர் வந்து சேருவதற்குள் பல கிராமங்களைக் காண்கிறோம். ஜெனிவாவிலிருந்து புறப்பட்டு, பிரெஞ்சு இன மக்கள் வாழும் பகுதியைத் தாண்டி, ஜெர்மானிய இன மக்கள் வாழும் பிரதேசத்தை அடையும் பொழுது, நாமே மாறுதலை உணர்கிறோம். ஜெர்மன் மக்கள் உழைப்பிற்கும், திறமைக்கும் பெயர்பெற்றவர்கள். அதை அவர்கள் வாழும் பிரதேசமும் நன்கு விளக்கிக் காட்டுகிறது.

அன்றிரவு, பெர்ன் நகரில் ஸ்விட்சர்லாந்து தேசீய குழுவைச் சார்ந்த ஒரு அமைச்சரைக் கண்டு, ஸ்விட்சர்லாந்து நாட்டு விவகாரங்களைப்பற்றியும், அவர்கள் நம் நாட்டின் தொழில் முன்னேற்றத்துக்கு எவ்வகையில் உதவ முடியும் என்பது பற்றியும் பேசிக்கொண்டிருந்தேன். அன்று மாலை புறப்பட்டு திரும்பவும் ஜூரிச் நகரை அடைந்தேன்.

அன்று தீபாவளி இரவு. ஆம்! பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால், அந்நிய நாட்டில், குடும்பத்தை விட்டு தீபாவளி கொண்டாட வேண்டியதாக இருந்தது. அங்கு தீபாவளி கொண்டாட்டம் அதிகாலை குளிப்பதுடன் முடிந்துவிட்டது. அதுவும் விமான மூலம் இதாலியிலுள்ள மிலான் நகருக்குப் புறப்பட வேண்டியிருந்ததால், நேரத்திலேயே குளிக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. சம்பிரதாயத்துக்காக நாங்கள் மூவரும் காலையில் சந்தித்ததும் 'கங்கா ஸ்நானம் ஆயிற்றா?' என்று கேட்டுக் கொண்டோம்.



அக்டோபர் 20ம் தேதி காலை, ஜுரிச் நகரிலிருந்து விமான மூலமாக இதாலி நாட்டிலுள்ள மிலான் நகருக்குப் புறப்பட்டோம்.

இதாலி நாட்டினுடைய அமைப்பைப் பார்த்தால் 'பூட்ஸ்' அணிந்திருக்கும் ஒரு மனிதனின் கால் போல் தோற்றமளிக்கும். அத்துடன், மத்திய தரைக் கடலுக்குள் இக்கால் நீட்டிக் கொண்டிருப்பது போலவும் தோன்றும்.

இதாலி நாடு ஐரோப்பா கண்டத்தின் தென் பகுதியில் உள்ளது. அதன் காரணமாக ஐரோப்பாவின் வடக்குப் பகுதியில் உள்ளதுபோல் இங்கு அதிகக் குளிர் கிடையாது. குளிர் காலங்களிலும் கூட இங்கு மற்ற இடங்களைவிடச் சூரிய வெப்பம் அதிகம். அதன் காரணமாக இதை 'சூரிய இதாலி' **(Sunny Italy)** என்றும் குறிப்பிடுவதுண்டு.

உஷ்ணப் பிரதேசத்தில் வாழ்கின்ற நாம், குளிர்ப் பிரதேசத்தை நாடுகிறோம். அதிகக் குளிர்ப் பிரதேசத்தில் வாழ்கின்றவர்கள், மிக உஷ்ணப் பிரதேசத்தை விரும்புகிறார்கள். இதாலி நாட்டை, வடக்கு ஐரோப்பிய நாட்டினர்கள் பெரிதும் விரும்பி வருகின்றார்கள் என்பதோடு மட்டுமல்லாமல், பல நாட்டுக் கவிஞர்களும் இதாலியினுடைய பெருமையையும், சிறப்பையும், அழகையும் பற்றிப் பாடியுள்ளார்கள். சீதோஷ்ண நிலையின் காரணமாக இதாலியில் வாழும் மக்களின் நிறமும் கூட மாறுபட்டு இருப்பதைக் காணலாம். வெறும் வெள்ளை நிறமாக இல்லாமல், சிவப்பு மேனி என்று சொல்லக்கூடிய நிறம்தான் பெரும்பாலான மக்களின் வர்ணம். அத்துடன், இங்கு வாழும் மக்கள் கட்டமைந்த அங்க அவயவங்களுடன் நல்ல முகவெட்டுடையவர்களாகவும் இருப்பதைக் காணலாம்.

மத்திய தரைக் கடல் பகுதி, உலகில் பூர்விக மனிதர்கள் தோன்றிய பாகங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது. ஐரோப்பா கண்டத்திலுள்ள கிரேக்கப் பகுதி, இதாலியப் பகுதிகளுக்கு அருகில் அமைந்துள்ள ஆப்பிரிக்க-ஈஜிப்ட் பகுதி ஆகிய இடங்களில்தான், மனித நாகரிகம், மனித வரலாற்றுக்காலத்துக்குமுன்பேதோன்றியதாகஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். ஆகவே, இதாலி புராதனக்காலந் தொட்டு மிகச் சிறப்பும், பெருமையும் பெற்றதாக இருந்து வந்துள்ளது. இதைப் பற்றி ரோமாபுரியைக் குறித்து எழுதும் போது மேலும் கவனிப்போம்.

மிலான் நகரம் இதாலியின் வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது. ரோமாபுரி இதாலியின் அரசியல் தலை நகரமாக இன்று விளங்குகிறதென்ருல், மிலான் நகரம் தொழிற் துறையில் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்துள்ளது.

இதாலியில் கூட வடக்கு—தெற்கு பிரச்னை உண்டு. இதாலியின் வடக்குப் பகுதியில் பெரும்பாலும் பெரும் தொழில்கள் அமைந்துள்ளன. மிலான் நகரத்தைச் சுற்றியுள்ள பகுதிகளைக் காணும்போது, மற்ற எந்த ஐரோப்பிய நாட்டிற்கும் தொழிற் துறையில் ஈடுள்ளதாகவே அது காட்சி அளிக்கின்றது. தெற்குப் பகுதி பெரும்பாலும் விவசாயத் தொழிலையே கொண்டு, வாழ்க்கை வளம் குறைந்துள்ள பகுதியாக உள்ளது. இந்த ஏற்றத் தாழ்வைச் சரி செய்வதற்காகத்திட்டமிட்டுப் பலநடவடிக்கைகள் எடுக்கப் பட்டு வருகின்றன. இவை பற்றியும் பின்பு ஆராய்வோம்.

மிலான் நகரத்தில் எங்களை வரவேற்க மூன்று முக்கிய ஸ்தாபனங்கள் சேர்ந்து ஏற்பாடு செய்திருந்தன. ஒன்று மாண்டி காடினி (Montecatini) ஸ்தாபனம்.

இதாலியிலேயே இது தான் மிகப் பெரிய தொழில் ஸ்தாபனம். இரும்பு, உருக்கு, உரம், ரசாயனப் பொருள்கள், செயற்கைத் துணி, செயற்கைப் பட்டு, பல்வேறு வகை இயந்திரங்கள் இவ்வாறு பல தொழில் துறைகளில் இந்த ஸ்தாபனம் ஈடுபட்டுள்ளது. இந்த ஸ்தாபனத்தார்தான் நெய்வேலியில் உரத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கான இயந்திரங்களை வழங்க முன் வந்துள்ளார்கள். சமீபத்தில் மேட்டூரில் அமைக்க இருக்கும் அலுமினியத் தொழிற்சாலைக்கும் இவர்கள் தான் இயந்திர உதவி அளிக்கிருர்கள்.

இரண்டாவது ஸ்தாபனம் விஸ்காஸ் (Viscos) என்று சொல்லப்படுவது. செயற்கைப் பஞ்சு, செயற்கைத் துணி, செயற்கைப் பட்டு உற்பத்தி செய்வதில் இந்த ஸ்தாபனம் பிரசித்தி பெற்றது. கோயம்புத்தூரில் அமைக்கப்பட்டு வரும் ரயான் (செயற்கைப் பஞ்சு, செயற்கை நூல்) உற்பத்தி சாலையை இந்தியக் கம்பெனியுடன் கூட்டுச் சேர்ந்து இவர்கள்தான் அமைத்து வருகிருர்கள். இத் தொழிற்சாலை



மேட்டுப்பாளையத்திற்கு அருகில் அமைந்துள்ளது. இன்னும் ஓரிரு மாதங்களில் அங்கு உற்பத்தி தொடங்க உள்ளது.

மூன்றாவது ஸ்தாபனம் இ. என். ஐ. (ENI) இது ஒரு பொதுத் துறை ஸ்தாபனம். சர்க்காரின் நிதி கொண்டே பெட்ரோலியம் போன்ற எண்ணெய்த் தயாரிப்புத் தொழிலில் ஈடுபட்டுள்ளது. சர்க்கார் ஸ்தாபனம் என்று சொன்னாலும் கூட, இதற்கு ஏகபோக உரிமை கிடையாது. மற்ற தனியார் துறை ஸ்தாபனங்களுடன் போட்டி அடிப்படையில் இயங்கி வருகின்றது. பொதுத்துறை ஸ்தாபனங்கள், தனியார் துறை ஸ்தாபனங்களுடன் போட்டியில் வெற்றி காண முடியும் என்பதை இந்த ஸ்தாபனம் நிரூபித்துக் காட்டியுள்ளது. எண்ணெய் இருக்கிறதா, இல்லையா என்ற சோதனை செய்வதிலும், எண்ணெயைப் பூமியிலிருந்து எடுப்பதிலும், எடுக்கப்படும் க்ரூட் ஆயிலை (**Crude oil**) சுத்தம் செய்வதிலும் இந்த ஸ்தாபனம் பெரும்பாலும் ஈடுபட்டுள்ளது. இதாலிய நாட்டில் பல பகுதிகளில் இயற்கை எரிவாயு பூமிக்கடியிலிருந்து கிடைக்கிறது. இந்த வாயுவைக் குழாய்கள் வழியாக நகரங்களுக்கு எடுத்துச் சென்று, அங்கு அடுப்பு எரிப்பது போன்ற பல்வேறு வகைகளில் பயன்படுத்துகிறார்கள். இப் பணியையும் பெரிய அளவில் இந்த ஸ்தாபனம் மேற்கொண்டுள்ளது.

இந்த மூன்று ஸ்தாபனங்களும் அரசாங்கத்தின் ஒத்துழைப்பையும்பெற்று, எங்களுக்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். மிலான் நகர விமான நிலையத்தில் எங்களை வரவேற்று, முன்னால் ஒரு போலீஸ் வண்டி வழிகாட்டிச் செல்ல, பின்னால் இன்னொரு போலீஸ் வண்டி எங்களைத் தொடர்ந்து வர, நாங்கள் நகருக்குள் அழைத்துச் செல்லப் பட்டோம். 'எதற்காக இவ்வளவு போலீஸ் ஏற்பாடுகள், இவற்றைக் குறைத்துக் கொள்ளுங்கள்' என்று கேட்டுக் கொண்டேன்.

'இல்லை, இந்திய மந்திரிக்கு ஏற்ற மரியாதையை நாங்கள் செய்தாக வேண்டும்' என்று கூறி, போலீஸ் பாதுகாப்பை எடுக்க மறுத்து விட்டார்கள். இதாலியில் போலீஸ் ஏற்பாடுகள்தான் சிறந்த வரவேற்புக்கு ஏற்றது என்ற எண்ணம் இன்னும் நிலைத்து வருவது, எனக்குக் கொஞ்சம் வியப்பை அளித்தது. நம் நாட்டில்கூட ஆரம்பத்தில் இவ்வாறாக அரசாங்க மரியாதைகள் பெரிதும் வழக்கில் இருந்து வந்தன. இன்றைக்கு அதைக் குறைத்துக் கொண்டு வருகிறோம்.

நான் மேலே சொன்ன மூன்று தொழில் ஸ்தாபனங்களும் நடத்தக் கூடிய சில தொழிற்சாலைகளுக்கு எங்களை அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்திருந்தார்கள். முதன் முதலில் விஸ்காஸ் ஸ்தாபனத்தாரால் நடத்தப்படும் செயற்கைப் பஞ்சு, நூல் உற்பத்தித் தொழிற்சாலைக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம்.



- மிலானிலுள்ள ஒரு மாதாகோயில்.
- பொன்னாலான ஒரு இதாலியச் சிற்பம்.





● இதாலி நாட்டுக் கட்டடக் கலையின் எழிலுக்கு இரு சான்றுகள்.



செயற்கைப் பஞ்சு, நூல் உற்பத்தி செய்யும் இயந்திரங்கள் இயங்குவதைக் கண்டோம். செயற்கைப் பஞ்சுக்கு மூலப்பொருள் காட்டு மரங்கள்! செயற்கை நூலுக்கு மூலப் பொருள் நிலக்கரி! கேட்பதற்கே விந்தையாகத்தான் இருக்கிறது. இன்றைய விஞ்ஞானத்தின் அதிசய சாதனை இது!

மரங்களை வெட்டி, பதப்படுத்தி, மரக் குழம்பாக (Woodpulp) மாற்றுகிறார்கள். காகித அட்டையைப் போல் அது இருக்கின்றது. இந்த மரக் காகித அட்டைகளை இயந்திரத்துக்குள் கொடுத்தால் ஒரு பகுதியில் கடைசியாக அது செயற்கைப் பஞ்சாக வெளிவருகின்றது. இயற்கைப் பஞ்சிலே உள்ள இழையினுடைய நீளம், நல்ல பஞ்சிலும் கூட ஒன்றரை அங்குலம்தான் இருக்கும். ஆனால் செயற்கையிலே எவ்வளவு நீள இழை உள்ள பஞ்சு வேண்டுமானாலும் உற்பத்தி செய்யலாம். பின்னர் இழையை வேண்டிய அளவிற்கு வெட்டித் தயார் செய்து கொள்ளுகிறார்கள். இன்னொரு இயந்திரத்தில் பதப்படுத்தப்பட்ட நிலக்கரி கொடுக்கப்பட்டு, நல்ல நூலாக வெளி வருவதைக் காண்கிறோம்.

பல்வேறு விதமான நூல்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. பட்டைப் போன்று பள பளப்புள்ள நூல்கள்! வித வித வர்ணங்களிலே நூல்கள்! இவை உற்பத்தியாவதைக் காணும்போது, இத் தொழில் நுட்பம் நம்மைப் பிரமிக்கச் செய்கின்றது. இதைப் போன்ற இயந்திரங்கள் தான், கோவை தொழிற்சாலையிலே அமைக்கப்பட்டு வருகின்றன என்றும் எங்களுக்கு எடுத்துச் சொன்னார்கள்.

அடுத்து மாண்டிகாடினி தலைமைக் காரியாலயத்துக்குச் சென்று, அக் கம்பெனியின் டைரக்டர்களைக் கண்டு பேசிக் கொண்டிருந்தேன்.

இந்த ஸ்தாபனத்தின் மூலதனம் நூறு பில்லியன் லீரா. (Lira) லீரா என்பது இதாலிய நாணயம். நூற்றறுபது லீரா ஒரு ரூபாய். ஒரு பில்லியன் என்றால், நூறு கோடி. ரூபாய் கணக்கில் வாசகர்களே கணக்குப் போட்டுக் கொள்ளலாம்!

1959ம் ஆண்டில் இக் கம்பெனியார் உற்பத்தி செய்த பொருள்களின் மதிப்பு, 293 பில்லியன் லீரா. இவற்றில் 54 சதவிகிதம் தொழில் ரசாயனப் பொருள்கள், 21 சதவிகிதம் விவசாயத்திற்கான ரசாயனப் பொருள்கள், 18 சதவிகிதம் உலோகத்தைக் கொண்டு உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், 5 சதவிகிதம் சுரங்கப் பொருள்கள், (Mining Products) மிகுதி 2 சத விகிதம் பலதரப்பட்ட பொருள்கள்.

உலகத்தில் பல நாடுகளில் இவர்களுடைய தொழில் ஸ்தாபனங்கள் அமைந்திருப்பதுடன், இன்னும் பல தொழில்களுக்கு இயந்திர உதவி அளித்துள்ளார்கள். மொத்தம் 26 நாடுகளில், 260 தொழில் ஸ்தாபனங்களில் இக்கம்பெனியார் நேரிடையாகவோ, இயந்திரங்கள் வழங்குவதன் மூலமாகவோ பங்கு கொண்டுள்ளார்கள். இதாலிய தேசத்தில் 66 ஸ்தாபனங்களிலும், ஜப்பானில் 52 தொழிற்சாலைகளி

லும், பிரான்ஸ் தேசத்தில் 40 தொழில்களிலும் பங்கெடுத்துக் கொண்டுள்ளார்கள். தொழில் வளர்ச்சி மிகுதியும் பெற்றுள்ள அமெரிக்க நாட்டில் 6 ஸ்தாபனங்களிலும், ரஷ்ய நாட்டில் மூன்று ஸ்தாபனங்களிலும் இவர்கள் பங்கெடுத்துக் கொண்டுள்ளார்கள். இந்தியாவில் மொத்தம் எட்டு ஸ்தாபனங்களில் அவர்கள் இயந்திரங்கள் பயன்பட்டு வருகின்றன. அவற்றில் இரண்டு, தென் இந்தியாவில், நெய்வேலியிலும், நீலகிரி மலையிலுள்ள அரவங்காட்டிலும் அமைந்துள்ளன. நம் நாட்டில் பிரசித்திபெற்ற சிந்திரி உரத் தொழிற்சாலைக்கும் இவர்கள்தான் இயந்திர உதவி அளிக்கிறார்கள். இந்த விவரங்கள் அனைத்தும் 1959-ம் ஆண்டு இறுதிக் கணக்குப்படியானது. தொடர்ந்து இன்னும் பல தொழில்களுக்கு உலகத்தின் பல பகுதிகளில் இவர்கள் உதவி பெருகி வருகின்ற நிலையைத் தான் காண்கிறோம்.



மாண்டிகாடினி ஸ்தாபனத்தின் தலைவர் அன்று மிலான் நகரில் இல்லை. நம்முடைய அலுமினியத் தொழிற்சாலை சம்பந்தமாக இதாலிய பாங்குகளுடன் விவாதித்து மூலதனம் எழுப்புவதற்காக ரோமாபுரி சென்றிருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் நாங்கள் மிலான் நகரம் வந்திருக்கிற செய்தி கேட்டு, 'அவர் உடனடியாகத் திரும்ப இருக்கின்றார், அடுத்த நாள் அவரை அவசியம் சந்திக்க வேண்டும்' என்று அக்கம்பெனி டைரக்டர்கள் கூறினார்கள்.

அவ்வாறே, அடுத்த நாள் அவரைக் கண்டோம். இந்தியத் தொழில் அபிவிருத்தியில் அவர் பெரும் அக்கறை காட்டினார். தமிழ் நாட்டில் இன்னும் பல தொழில்கள், அதிலும் முக்கியமாக ரசாயனத் தொழில்கள் அமைப்பதற்கு மாண்டிகாடினியார் உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அவசியம் உதவுவதாக உறுதி கூறியதுடன், அலுமினியத் தொழிற்சாலை ஆரம்ப விழாவிற்குக் கூடிய சீக்கிரத்தில் அவரும், அவருடைய சகாக்களும் சென்னை வர இருப்பதாகவும், அச்சமயத்தில் இதைப் பற்றி விரிவாகப் பேசலாம் என்றும் கூறினார்கள்.

நெய்வேலி உரத் தொழிற்சாலை மாதிரி ஒன்று செய்து அங்கு வைத்திருந்தார்கள். அதை எங்களுக்குக் காண்பித்துப் பல நுணுக்கங்களையும் விளக்கினார்கள்.

மாண்டிகாடினி ஸ்தாபனத்தார் தயாரிக்கும் பொருள்களைக் கொண்ட கண்காட்சி ஒன்றை வைத்துள்ளார்கள். செயற்கைத் துணி, பட்டு, கம்பளம் இவை கண்களைக் கவரக் கூடியனவாக இருந்தன. செயற்கைப் பட்டைக் காணும் போது, இயற்கைப் பட்டுக்கு எந்த விதத்திலும் அவை குறைவு பட்டதாகக் காணவில்லை. அதேபோல்தான், கம்பளித் துணிகளும். யாராவது சொன்னால் ஒழிய செயற்கைக் கம்பளம் என்று நம்மால் தெரிந்து கொள்ள முடியாது.

பிளாஸ்டிக்கை உபயோகப்படுத்தி, செயற்கைத் தோலை சிருஷ்டித்துள்ளார்கள். இவற்றைக் கொண்டு பல்வேறு விதமான பைகளும், பெட்டிகளும் செய்து வைத்திருக்கின்றார்கள். இவர்களுடைய உற்பத்திப் பொருள்களையெல்லாம் இவர்கள் ஸ்தாபனங்களில் வேலை செய்பவர்களுக்கு மலிவான விலைக்கு விற்பதற்கு ஒரு கூட்டுறவு விற்பனைக் கடையும் வைத்து நடத்தி வருகிறார்கள். உயர்ந்ததொரு தொழில் ஸ்தாபனம் எவ்வாறு இயங்கவேண்டும் என்பதற்கு மாண்டிகாடினி ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

எனி (என்டி நாஷனேல் ஐட்ரோ கார்பரி) (Ente Nazionale Idro Carburi) ஸ்தாபனத்தார் . மிலான் நகருக் கருகில் ஓர் ஆராய்ச்சி சாலையை அமைத்துள்ளார்கள். பெட்ரோலியம் எண்ணெயை அடிப்படையாகக் கொண்ட பல ஆராய்ச்சிகள் அங்கு நடைபெறுகின்றன.

அத்துடன், அணுசக்தி உற்பத்தி செய்ய மூலப்பொருள்களாக விளங்கும் யூரேனிய உற்பத்திக்கான ஆராய்ச்சியும் அங்கு நடைபெறுகிறது. இந்த ஆராய்ச்சி சாலையை விரிவாகப் பார்ப்பதென்று சொன்னால், பல நாட்கள் பிடிக்கும். முக்கியமான பல பகுதிகளை எங்களுக்குக் காண்பித்தார்கள். செயற்கை ரப்பர் செய்யக்கூடிய முறையில் பல்வேறு ஆராய்ச்சிகள் அங்கு நடைபெற்று வருவதைக் கண்டோம். இதற்கு மூலப் பொருள் நிலக்கரி! விதவிதமான ரப்பர்கள். மிருதுவானது, கடினமானது, நீள்சக்தி அதிகமாகக் கொண்டது என்று பல செயற்கை முறையில் தயாரிக்கப் படுகின்றன.

''எதை எதைத்தான் செயற்கை முறையில் செய்து சாதிக்க முடியும்'' என்று கேட்டேன். ''அதற்கு ஒரு எல்லையே இல்லை'' என்று சொன்னார்கள்.

இன்றைக்கு விஞ்ஞான அறிவு வளர்ந்திருக்கும் அடிப்படையில் எந்த ஒரு பொருளையும் இன்னொரு பொருளாக மாற்றக்கூடிய சக்தி மனிதனுக்குக் கிடைத்துள்ளது. சாதாரண உலோகத்தையும் தங்கமாக்கலாம் என்கின்ற கருத்துக்களைத் தமிழ்ப்பாடல்களில் படிக்கின்றோமே, அவையும் இன்றைக்கு சாத்தியம் என்கின்ற நிலை ஏற்பட்டுள்ளது. ஈயம், தாமிரம் இவற்றைத் தங்கமாக்க முடியும். ஆனால், இதற்கான செலவும், உழைப்பும் மிக அதிகம். ஆகவே லாபகரமாக இதைச் செய்ய முடியாது. ஆனால் விஞ்ஞான சக்திகள் வளர வளர, இதையும் சுலபமாகச் சாதிக்க முடியும் என்றே தோன்றுகிறது. இந்த அதிசயங்களையெல்லாம் பார்த்து விட்டு ஒரு ஆராய்ச்சிசாலையிலிருந்து வெளி வரும்போது, ஏதோ கனவுலகிலிருந்து வருவது போல்தான் நமக்குத் தோன்றுகிறது. ஆம்! மனிதனின் கனவெல்லாம் இன்றைக்கு நனவாகிக் கொண்டிருக்கின்றன!



மிலான் ஒரு பழமையான நகரம்; இன்று வளர்ந்து வருவதும் கூட. அங்கு அமைக்கப்பட்டிருக்கும் ஒரு பிர மாண்டமான மாதாகோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட் டோம். பொறி இயல் நுட்பமும், விஞ்ஞான அறிவும் வளராத காலத்திலேயே, நாமெல்லோரும் வியக்கத்தக்க முறையில் இந்தக் கோயில்கள் உலகில் எல்லாப் பகுதிகளி லும் கட்டப்பட்டிருப்பதைக் காண்கிறோம். அன்று அவர் களுக்கு இவற்றைச் சாதிக்கும் முறையில் ஏற்பட்டிருந்த சக்தி என்ன? தெய்வ நம்பிக்கையும், பக்தியுமே ஆகும்! இன் றைக்கும் எந்தப் பெரிய காரியத்தைச் சாதிப்பதாக இருந் தாலும், மனிதனுக்கு ஏதோ ஒன்றில் அடிப்படையான நம் பிக்கை தேவையாக உள்ளது. அது விஞ்ஞான சக்தியில் நம்பிக்கையாக இருக்கலாம், சமுதாயக் கொள்கையில் ஏற்படும் நம்பிக்கையாக இருக்கலாம். ஏதாவதொரு தீவிர நம்பிக்கையில்லாத மனிதனுக்கு, வாழ்வின் அடிப்படையே ஏற்பட முடியாது. வெறும் நம்பிக்கையோடு மட்டுமல்ல, அதை ஒட்டி பக்தி சிரத்தையுடன் செயலாற்றும் விடா முயற்சியும் வேண்டும். இவைதான் நம்முடைய முன்னோர் களையும் பல அரிய சாதனைகளை சாதிக்க உதவியுள்ளன. இனிமேலும் இவைதான் பல பெரும் காரியங்கள் சாதிப் பதற்கு உதவ முடியும்.

இதாலி தேசம் பல பெரிய ஓவியர்களை சிருஷ்டித்துள் ளது. இதாலிய ஓவியர்கள் உலகப் புகழ் பெற்றவர்கள். லியனார்டோ டிவின்ஸி என்பவர், மிலான்பகுதியைச்சேர்ந்த புகழ் பெற்ற ஓவியர். அவர் 'கடைசி விருந்து' என்ற ஏசு நாதர் சரித்திரத்து நிகழ்ச்சி ஒன்றை ஒரு சுவரில் வர்ணச் சித்திரமாகத் தீட்டியுள்ளார். பார்க்கக் கூடிய அரிய காட்சி களில் இதுவும் ஒன்று. ஏசுநாதர் தம்முடைய பன்னிரண்டு சிஷ்யர்களுடன் கடைசியாக விருந்துண்ணுகிறார். மொத்தம் பதிமூன்று பேர். அவர்களில் ஒருவரான ஜூடாஸ் என்பவர் தான், ஏசுநாதரைப் பகைவர்களுக்குக் காட்டிக் கொடுக் கிறார். இதன் காரணத்தாலேயே, கிருஸ்துவர்கள் பதி மூன்று எண் என்றால் அபசகுனமானது என்று கருதுகின் றனர். இந்த அரிய ஓவியத்தைத் துணியிலே அச்சிட்டு, அங்கு செல்லும் விருந்தினர்களுக்குக் கொடுக்கிறார்கள்.



லியனார்டோ டிவின்ஸி ஓவியர் மட்டுமல்ல; சிறந்த விஞ்ஞானப் பொறி இயல் நிபுணர் என்றும் அங்கு கூறுகின் றார்கள். பறக்கும் விமானம் வரப் போகின்றது என் பதை அவர் ஊகித்தது மட்டுமல்ல, அதனுடைய உருவம் எவ்வாறிருக்கும் என்பது பற்றியும் கற்பனை செய்து காட்டி யுள்ளார் என்றும், 'அது ஆரம்ப காலத்தில் நிர்மாணிக்கப் பட்ட விமானங்களை ஒத்து இருக்கிறதென்றும் எங்களுக்கு விளக்கினார்கள். மிலான் நகரத்தில் இப் பெரியாரின் ஒரு சிலையும், அதை ஒட்டி, அவர் கற்பனை செய்த விமான

உருவமும் வைக்கப்பட்டுள்ளன. மிலான் மக்கள் இதைப் பெருமையுடன் எல்லோருக்கும் காட்டுகின்றனர்.

எனது சுற்றுப் பிரயாணத்திலேயே ஏமாற்றம் தரக் கூடிய நிகழ்ச்சி ஒன்று எனக்கு இங்குதான் ஏற்பட்டது. ஐரோப்பிய சுற்றுப் பிரயாணம் ஏற்பாடு செய்தபோது ரோமாபுரியில் போப்பாண்டவரைத் தரிசிக்க வேண்டும் என்கின்ற எண்ணம் உண்டாயிற்று. சென்னை லயோலா கல்லூரியில் தலைவராகப் பணியாற்றி வந்த, பூஜ்யர் ஜெரோம் டிசௌசா அவர்கள் தற்போது போப்பாண்டவர் காரியாலயத்தில் ஒரு பெரிய பதவி வகித்து வருகிறார்கள். அவர்களுக்கு என்னுடைய ஆசையை வெளியிட்டிருந்தேன்.

நான் மிலான் நகரத்தில் இருக்கும்போது ரோமா புரியிலிருந்து எனக்குச் செய்தி அனுப்பப்பட்டது.

'இன்று மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு தங்களுக்கு தரிசனம் கொடுக்க போப்பாண்டவர் ஒப்புக் கொண்டுள்ளார்.' இச் செய்தி எனக்குப் பிற்பகல் ஒரு மணிக்குத் தான் கிடைத்தது. ஆகவே, அந்த ஆசை நிறைவேறாமல் போனது எனக்கு ஏமாற்றமாக இருந்தது. ரோமாபுரிக்குச் சென்ற பின், இன்னொருநாள் இத் தரிசனத்திற்காக குறிக்க முடியுமா என்று முயற்சிக்கலாம் என்ற நம்பிக்கையுடன் தான், மிலானிலிருந்து ரோமாபுரிக்கு விமானம் மூலம் புறப்பட்டோம்.

அழியா நகரம்

இந்தியாவிலிருந்து லண்டன் செல்லுகின்ற மார்க்கத்திலேயே ரோமாபுரி விமான நிலையத்தில் இறங்க வேண்டி இருந்தது. அச்சமயத்தில்தான் அந்நகரத்தில் 'ஒலிம்பிக்' விளையாட்டுப் போட்டி நடந்து கொண்டிருந்தது. நகரெங்கும் மக்களை வரவேற்கும் அறிவிப்புக்கள் காணப்பட்டன. ஒவ்வொரு அறிவிப்பிலும் ஓநாய் ஒன்று, இரு சிறு மானிடக் குழந்தைகளுக்குப் பாலூட்டுவது போன்ற படம் காணப் பட்டது. ''இந்தச் சின்னம் எதைக் குறிக்கிறது?'' என்று கேட்டேன். ''இதுதான் ரோமாபுரியின் சின்னம்'' என்று பதில் சொன்னார்கள். ''எந்த அடிப்படையில் இந்தச் சின்னம் ஏற்பட்டது'' என்று கேட்டேன். அதன் விளக்கத்தைச் சொன்னார்கள். அதுதான் ரோமாபுரி பிறந்த கதை.

2714 ஆண்டுகளுக்கு முன்பு தான் ரோமாபுரி தோன்றியது. சென்ற ஆண்டு ஏப்ரல் 21-ம்தேதி அன்று, ரோமாபுரியின் 2714வது ஆண்டுவிழா கொண்டாடியதாகப் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியது. ஆமாம்! ரோமாபுரி தோன்றியது, கி. மு. 753ம் ஆண்டில்தான்!

அமூரியஸ் என்ற ஒரு துஷ்டன், இதாலி நாட்டின் ஒரு பகுதியின் சிற்றரசனை தன்னுடைய அண்ணனைக் கொன்று அதைக் கைப்பற்றினான். நாட்டைக் கைப்பற்றியதோடு



மட்டும் இல்லாமல், அந்த அரசனுடைய இரண்டு சிறு குழந்தைகளான ரெமஸ் (Remus), ரோமுலஸ் (Romulus) என்ற இருவரையும் டைபர் நதிக்குள் போட்டு விட்டான். அந்த இரண்டு சின்னஞ்சிறு குழந்தைகளும் டைபர் நதியில் மிதந்துவந்து, தற்போது ரோம் நகரம் அமைந்திருக்கும் பகுதியில் நதிக் கரையில் ஒதுக்கப்பட்டன. அப்படி ஒதுக்கப்பட்ட அந்த இரண்டு குழந்தைகளையும் ஓர் ஓநாய் எடுத்து வளர்த்ததாகக் கதை!

பெரியவர்களானதும் இந்த இரண்டு சகோதரர்களும் ரோமாபுரியின் முதல் பகுதியை அமைத்தார்கள். பின்னர் இந்த சகோதரர்களுக்குள்ளும் சண்டை ஏற்பட்டு, ரெமஸ் கொல்லப்பட்டான். அதன்பின் ரோமுலஸ்தான், தான் அமைத்த நகருக்கு ரோமா என்று பெயரிட்டான்.

இந் நகரம் ஒரு சிறு மலைக் குன்றின் மேல் கட்டப்பட்டது. இந்த நகரம்தான் சிறிது சிறிதாகப் பரவி, ஏழு மலைகளை வியாபித்திருக்கிறது. நம் நாட்டுத் திருப்பதி மட்டும் தான் ஏழுமலை என்று சொல்வதற்கில்லை, ரோமாபுரியும் ஏழுமலைதான்! அதோடு ரோமாபுரியை 'அழியா நகரம்' (City Eternal) என்றும் குறிப்பிடுவதுண்டு.

ஐரோப்பிய வரலாற்றில் கிரேக்க மக்களும், ரோமாபுரி மக்களும் முக்கியமானதொரு பங்கை வகிக்கிறார்கள். விஞ்ஞானக் கருத்து வளர்ச்சிக்கும், மேல்நாட்டு தத்துவ வளர்ச்சிக்கும் கிரேக்க நாடுதான் தாயகம் என்று சொல்லலாம். அரசியலுக்கும், சமூக அமைப்புக்கும் ரோமாபுரியைப் பிறப்பிடமாகக் கருதலாம்.

இன்றைக்கிருக்கும் ஐரோப்பிய நாடுகளில் பல்வேறு தரப்பட்ட அரசியல் அமைப்புகள் இருப்பதைக் காணலாம். ஆனால் ஆராய்ச்சி அடிப்படையில் பார்க்கும்போது, ஐரோப்பிய நாடுகள் ஒவ்வொன்றும், ரோமாபுரியின் ஏதோ ஓர் அம்சத்தை அடிப்படையில் கொண்டுதான் அமைந்திருக்கிறது என்பது நன்கு விளங்கும். பல நூற்றாண்டுகள் ரோம சாம்ராஜ்யம்தான் ஐரோப்பிய நாடுகளை, ஏன், ஆப்பிரிக்காவின் சில பகுதிகளையும் கூடத் தன் ஆட்சிக்குள் வைத்திருந்தது என்பதை அந்த வரலாறு கூறும்.

கி. மு. 753-ல் முடியாட்சியுடன் ஆரம்பித்த ரோமாபுரி, கி. மு. 509-ல் குடியாட்சியாக மாறியது. அதிலிருந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் ரோமாபுரி மக்கள் உலகெங்கும் வியாபித்து, தங்களுடைய சாம்ராஜ்யத்தை நிலை நாட்டினார்கள். ரோம சாம்ராஜ்ய காலத்தில்தான் கிறிஸ்து பிறந்தது, வளர்ந்தது, கிறிஸ்தவ மதம் பரவியதும் கூட. அதே காலத்தில்தான் ரோம் கவர்னர் ஒருவரால் ரோமாபுரியின் சட்டப் பிரகாரம் குற்றம் சாட்டப்பட்டு, கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டார். ரோமாபுரி அரசியல் தலைவர்கள் பிற்காலத்தில், கிறிஸ்தவ மதத்தைத் தழுவி,

கிறிஸ்தவ மதம் உலகெங்கும் பரவுவதற்கு வழி செய்தார்கள். ரோமாபுரியைச் சேர்ந்த புகழ்பெற்ற ஜூலியஸ் ஸீஸர் இங்கிலாந்துக்குப் படையெடுத்துச் சென்று, அங்கிருந்த மக்களை வென்று, ரோம் ஆட்சியை அங்கு ஸ்தாபித்தார். இன்றைக்கும் இங்கிலாந்து நாட்டின் சில பகுதிகளில் ரோம் மக்கள் அமைத்த சாலைகளைக் காணலாம்.

ரோமாபுரி கிழக்கத்திய நாடுகளுடன், முக்கியமாக இந்தியாவுடன், வர்த்தக ரீதியில் தொடர்பு கொண்டிருந்தது என்பதை இன்றைக்குப் பல சின்னங்கள் மூலம் நாம் காண்கிறோம். தென் இந்தியாவில் பல பகுதிகளில்,இன்றும் பல இடங்களில் பூமியைத் தோண்டும்போது ரோமாபுரித் தங்க நாணயங்கள் கிடைக்கின்றன. எனது சொந்த ஊரான பொள்ளாச்சி, ரோமாபுரியின் வர்த்தக மார்க்கமாகஅமைந்திருந்தது என்பதைப் பல ஆராய்ச்சியாளர்கள் நிரூபித்திருக்கிறார்கள். சென்ற ஆண்டில்கூட, பல ரோம தங்க நாணயங்கள் அப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டன.

இவ்வளவு புகழும் சிறப்பும் பெற்ற ரோமசாம்ராஜ்யம் அக்காலத்தில் எவ்வாறு இயங்கியது என்பது பற்றி படிக்கும்போது, நம் காலத்தில் ஏற்பட்ட சாம்ராஜ்ய மனப்பான்மைகளே அன்றும் இருந்து வந்திருக்கின்றன என்பது புலனாகிறது. ரோமாபுரி மக்கள் ஆளப்பிறந்தவர்கள். இருளில் புதைந்து கிடக்கும் மக்களுக்கு ஒளி பரப்ப, ஆண்டவன் அருளினால் பிறப்பிக்கப்பட்ட மக்கள் அவர்கள் என்பன போன்ற பல கருத்துக்கள், ரோமாபுரி வரலாற்றிலே பல அரசியல் தலைவர்கள் வாயிலாக வெளிவருவதைக் காணலாம். ஆனால், காலக் கிரமத்தில் அந்த சாம்ராஜ்யமும் அழிந்து மறைந்தது. நம் காலத்தில் ஆங்கிலேயர்களும் அவ்வாறுதானே எண்ணியிருந்தார்கள்? ஆனால், நம் காலத்திலேயே நம் கண் முன்னாலேயே ஆங்கில சாம்ராஜ்யம் மறைந்ததைக் கண்டோம். உலக வரலாற்றில் இப்படிச் சில சாம்ராஜ்யங்கள் தோன்றுவதும், அவரவர் காலத்தில் தாங்களே சாசுவதமாக இருக்கப் போவதாக நினைப்பதும் இயற்கையாகத் தோன்றுவதுடன், இதற்கு மத்தியில் இந்திய மக்கள் தொன்று தொட்டு அவர்களுடைய வாழ்க்கை விளக்கு அணையாது வாழ்ந்து வருவதன் ரகசியம் என்ன என்பதை நாம் அறிய வேண்டாமா? அந்த ரகசியத்தைத் தான், சுவாமி விவேகானந்தர் வெகு அழகாக எடுத்து உலக மக்களுக்கு வழங்குகிறார்: ''மற்ற நாடுகளெல்லாம் புற வாழ்க்கையான லௌகிக முறையில் அமைந்தவை. ஆகவே அவை அழிந்து விட்டன. இந்தியாவோ, ஆன்மீகவாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. ஆகவே, மேலை நாட்டு வாழ்க்கை முறை அழிந்த போதிலும், நம் வாழ்க்கை முறை இன்னும் வாழ்கிறது. இதே ஆன்மீக அடிப்படையில் வாழ்கின்ற வரையில் நமக்கு அழிவும் இல்லை.''

எவ்வளவு உண்மையான கருத்து!



அக்டோபர் மாதம் இருபத்தோராம் தேதி இரவு ரோமாபுரி விமான நிலையத்தில் இறங்கினேன். சர்க்கார் பிரதிநிதிகளும், இந்திய தூதுவராலய அதிகாரிகளும் என்னை வரவேற்று, ஓட்டலுக்கு அழைத்துச் சென்றனர்.

மேற்கத்திய நாடுகளில் 'அரசாங்க விருந்தினர் விடுதிகள்' என்பது கிடையாது. எவ்வளவு பெரிய விருந்தினராக இருந்தாலும், ஓட்டல்களில் தங்குவதற்குத்தான் ஏற்பாடு செய்கிறார்கள். ஒவ்வொரு ஓட்டலிலும் பலதரப்பட்ட வசதிகளுடன் கூடிய அறைகள் உண்டு. விருந்தினர்களின் தகுதிக்கு ஏற்றவாறு அறைகள் ஏற்பாடு செய்கிறார்கள்.

ரோமாபுரி நகரைச் சுற்றிப் பார்க்கக் காரில் சென்றோம். நகர் முழுவதும் பழமையும் புதுமையும் கலந்து காட்சி அளிக்கின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட கட்டடங்களின் சின்னங்கள் பாதுகாக்கப் பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கு எந்த விதத்திலும் ஊனம் வந்து விடாதவாறு புதிய புதிய கட்டடங்களையும் எழுப்பி இருக்கிறார்கள்.

ரோமாபுரி மக்கள் பழங்காலத்தில் தங்களுடைய கேளிக்கைகளுக்காகக் கட்டிக்கொண்ட விளையாட்டு அரங்கங்கள் இடிந்து விழுந்திருக்கும் நிலையில் இருந்தாலும், அக்காலத்தில் அவை எவ்வாறு இருந்திருக்கும் என்பதை நாம் ஊகித்துக் கொள்ளக் கூடிய நிலையில் அவை இன்றும் இருக்கின்றன. அவர்கள் காலத்து விளையாட்டே தனி விதம். பல மக்களை அடிமைகளாக நடத்தி வந்தார்கள். அந்த அடிமைகளில் பலசாலிகளைப் பொறுக்கி எடுத்து, பயிற்சி கொடுத்து, அவர்கள் ஒருவருடன் ஒருவர் சண்டை போட்டுக் கொள்வதை வேடிக்கை பார்ப்பது. இதைவிடக் கொடூரமானது, இந்த அடிமைப் பயில்வான்களை, பசியுடன் இருக்கும் சிங்கங்களுடன் சண்டை போடச்செய்வதும், அந்தச் சிங்கங்கள் இவர்களை அடித்துக் கொன்று தின்பதைக் கண்டு மகிழ்வதும் தான்! இந்தச் சிங்கங்களை விரட்டி அடித்து வெற்றி மாலை சூடுகின்றவர்களுக்குச் சில சமயங்களில் அடிமைத் தளையிலிருந்து விடுதலையும் அளிப்பார்கள். சிங்கங்களை அடைத்து வைப்பதற்கான குகைகள், சண்டை நடப்பதற்கான அரங்குகள் இவற்றையெல்லாம் இன்றும் நாம் காண முடிகிறது.

இன்னொரு பக்கத்தில் ரோமாபுரி வரலாற்றிலேயே மிகப் புகழ் பெற்ற ஜூலியஸ் ஸீஸர் வாழ்ந்த மாளிகை காட்சி அளிக்கின்றது. பாழடைந்து காணப்பட்டாலும், அக்காலத்தில் எவ்வளவு சிறப்புடன் அது விளங்கி இருக்கும் என்பதை ஊகித்து அறிந்து கொள்ளலாம்.

நீரோவின் மாளிகை என்று ஒன்றை எங்களுக்குக் காட்டினார்கள். நீரோ ரோமாபுரி வரலாற்றில் இடம் பெற்றவர்.



ரோமாபுரியில் பெரியதொரு தீ விபத்து ஏற்பட்டு, நகரமே அழிந்து கொண்டிருந்தபோது, இவர் பிடில் வாசித்து சங்கீதத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாராம்! இப்படி ஒரு வரலாற்று நிகழ்ச்சி சொல்லப்படுகிறது. ஒரு சில ஆராய்ச்சியாளர்கள் ரோமாபுரியைச் சிறப்புடன் திருத்தி அமைக்கவே நீரோ மன்னன் தானே தீ வைக்க ஏற்பாடு செய்ததாகச் சொல்கிறார்கள். இந்தப் புராதனக் கட்டடச் சின்னங்களுக்கு மத்தியில், நானூறு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட நவீன கட்டடங்கள் நம்மை அப்படியே பிரமிக்க வைக்கின்றன.

நம்முடைய கோயில் கட்டடங்களைக் கண்டு, அவற்றினுடைய அளவையும் சிற்ப நுணுக்கங்களையும் பார்த்து நாம் பெருமைப்படுகிறோம். ரோமாபுரிக் கட்டடங்களைக் காணும்போது, அந்தப் பெருமை மறைந்து விடுகின்றது!

கலைக் களஞ்சியம்

ஆங்காங்கு இதாலிய வரலாற்றில் சிறப்புப் பெற்ற பல வீரர்கள், அரசர்கள், அறிஞர்கள், கலைஞர்கள் ஆகியவர்களின் சிலைகளைக் காண்கிறோம். சிற்பக் கலையின் உண்மையான சிறப்பைக் காண வேண்டுமானாலும் இதாலிக்குத்தான் போக வேண்டுமென்று பலரும் கருதுகிறார்கள். பிரமாண்டமான உயிருள்ள சிலைகள்! ஆமாம், பல சமயங்களில் அச்சிலைகள் உயிருள்ளவை போன்றே தோன்றி நம்மைப் பிரமிக்க வைக்கின்றன!

இதாலிய நாடே ஓவிய சிற்பக் கலைகளுக்குப் பெயர் போனதுதான்! பல இடங்களில் ஓவியக் காட்சிகள் அமைத்திருக்கிறார்கள். அவற்றைப் பார்த்துக்கொண்டே வாழ்நாள் முழுவதையும் ஒருவர் கழித்துவிடலாம். அவ்வளவு சிறப்புப் பெற்றவை!

ரோமாபுரி இன்னொரு வகையிலும் சிறப்பும், பெருமையும் வாய்ந்தது. கத்தோலிக்க மதத்தினருக்கு மத குருவான போப்பாண்டவர் ரோமாபுரியில்தான் வாசம் செய்கிறார். அவர் வாழும் பகுதிக்கு வாடிகன் (Vatican) என்று பெயர். இதாலி நாட்டிலிருந்து பிரிக்கப் பட்டு, இதற்கு ஒரு தனி நாட்டு அந்தஸ்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

உலகிலுள்ள பல்வேறு நாடுகளும் தங்களுடைய தனிப்பட்ட தூதுவர்களை அந்த வாடிகன் நாட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நம் இந்திய இதாலி நாட்டுத் தூதுவர், வாடிகன் பகுதிக்குத் தூதுவர் அல்ல. ஸ்விட்சர்லாந்து தூதுவர்தான், வாடிகனுக்கும் தூதுவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். வாடிகன் இதாலியிலிருந்து தனிப்பட்டது என்பதை வலியுறுத்துகின்ற முறையில்தான் இந்த ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.



போப்பாண்டவரைத் தரிசிக்க இங்கு வந்ததும் முயற்சித்துப் பார்த்தேன். துரதிருஷ்டவசமாக அந்த முயற்சி கைகூடவில்லை. காரணம், வாரத்தில் சில குறிப்பிட்ட தினங்களில்தான், போப்பாண்டவர் தரிசனம் கொடுக்கிறார். நான் ரோமாபுரியில் இருந்த தினங்கள் தரிசனம் கொடுக்கப்படாத நாட்களாக அமைந்து விட்டன.

போப்பாண்டவரைப் பார்க்காவிட்டாலும், வாடிகனில் அமைக்கப் பட்டுள்ள பொருட் காட்சியைப் பார்ப்பது மிகவும் அவசியம் என்று எனக்குச் சொன்னார்கள். எனவே அங்கு சென்று பார்த்தோம். உலகிலேயே இதைப் போன்ற பொருட்காட்சி இருக்க முடியுமா என்கிற ஒரு எண்ணம், யாருக்கும் எழாமல் இருக்காது. சிலைகளுக்கென ஒரு பகுதி. அதிலும் பளிங்கால் செய்யப்பட்டவற்றிற்கு ஒரு பிரிவு, உலோகங்களால் செய்யப்பட்டவற்றிற்கு ஒரு பிரிவு. ஒவ்வொரு சிலையையும் நாளெல்லாம் பார்த்துக் கொண்டே நிற்கலாம். நாளெல்லாம் என்ன? காலமெல்லாம் கண்டு கொண்டே நிற்கலாம்!

சிற்பப் பகுதிக்குப் பிறகு, ஓவியப் பகுதிக்கு வருகிறோம். உலகப் புகழ் பெற்ற ஓவியர்கள் வரைந்தவை! நாம் பாடங்களிலே படித்து அறிந்து கொண்ட ஓவியக் கலைஞர்களால் தீட்டப்பெற்றவை. நேரிடையாக அந்த ஓவியர்களைக் காண்கிறோம்! பல ஓவியங்கள் ஏசுநாதரின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டவை. அருள் பொங்கும் குழந்தை ஏசுநாதரின் உருவத்தைச் சில ஓவியங்களில் காண்கிறோம். பல கோடி மக்களுக்குப் புது வாழ்வளித்த குரு ஏசுநாதரின் திரு உருவை இன்னும் சில ஓவியங்களில் பார்க்கிறோம்.

அங்கு ஒருபிரார்த்தனை மண்டபம் இருக்கிறது. உள்ளே நுழைந்தவுடனேயே, தெய்விக உலகிலே இருக்கக் கூடிய உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. அந்த மண்டபத்தின் சுவர்கள் முழுவதுமே மனத்தைக் கொள்ளை கொள்ளும் ஓவியங்கள், சிலைகள். இவற்றுடன் பல வேறு விதமான புராதனப் பொருள்களும் அங்கு சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஓவியப் பொருட்காட்சியைப் பார்ப்பதற்காகவே ஒரு முறை ரோமாபுரிக்குச் செல்லலாம்.

உலகில் வேறெங்கும் இந்த அளவில் புகழ்பெற்ற ஓவியங்களைக் காண முடியாது. எண்ணற்ற வர்ணப் படங்கள்! வர்ணம் தீட்டும் முறையை எங்கிருந்துதான் கற்றார்களோ! கற்று வந்த கலையோ, அல்லது இயற்கையாக ஏற்பட்ட சக்தியோ என்று பிரமித்துப் போகிறோம். கற்றுத் தெரிந்து கொள்வது என்று சொன்னால், அதைப் போன்ற ஓவியங்கள் மேலும் தோன்றி இருக்க வேண்டும்! இன்று அந்த ஓவியப் பரம்பரையே அழிந்து விட்டதோ என்று [illegible]க்க வேண்டி இருக்கிறது.



நம் நாட்டிலும் உலகப் புகழ் பெற்ற அஜந்தா ஓவியங்கள் உள்ளன. பல நூற்றுண்டுகளுக்கு முன்பு தீட்டிய வர்ணம் இன்னும் மங்காது இருக்கின்றது. விஞ்ஞானம் வளர்ந்திருக்கும் இந்நாளில் ஏன் அதைப் போன்ற வர்ணங்களைக் கொண்டு தீட்டிய ஓவியங்கள் சிருஷ்டிக்கப் படவில்லை என்பது ஆராய்வதற்குரியது. ஒரு சமயம் விஞ்ஞான அறிவும் இக் கலை அறிவும் முரண்பாடு உள்ளவையோ ? உள்ளத்தில் பெரும் பக்தியும் நம்பிக்கையும் கொண்டவர்கள் தான் அச் சித்திரங்களை வரைந்திருக்க முடியும். ஏனெனில் அவை வெறும் உருவங்கள் மட்டுமல்ல. அக் கலைச் சித்திரங்கள் ஒவ்வொன்றிலும் உணர்ச்சி ததும்புவதையும் காணலாம்.

நம்பிக்கையும் பக்தியும் குறையும்போது இது போன்ற கலைகளும் அழிந்து விடுகின்றன போலும் !

பூஜ்யர் டிசௌசா அவர்கள் என்னுடன் ஒரு நண்பர் வீட்டில் உணவருந்த வந்திருந்தார். அவர்கள்தான் போப் பாண்டவரைத் தரிசிப்பதற்கு எனக்காக நாள் குறித்து மிலான் நகருக்கு செய்தி அனுப்பியிருந்தார். அவர்களிடத்தில் என்னுடைய ஏமாற்றத்தைத் தெரிவித்திருந்தேன். ''இதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. மறுமுறை ரோமுக்கு வராமலா போய்விடப் போகிறீர்கள்? எப்போது வந்தாலும், நான் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தங்களுக்குத் தரிசனம் கொடுக்க ஏற்பாடு செய்வார்கள்'' என்று ஆறுதல் கூறினர்.

''இந்தியாவுக்கு எப்போது திரும்பி வரப்போகிறீர்கள் ?'' என்று கேட்டேன்.

''இங்கும் என்னால் இயன்ற அளவு இந்தியாவுக்குச் சேவை செய்து கொண்டுதான் இருக்கிறேன்'' என்று நம்பிக்கையுடன் தெரிவித்தார்கள். ஆம் ! இன்றைக்கு இந்தியர்கள் உலகில் பல்வேறு பணிகளில், பல்வேறுஸ்தாபனங்களில் பணியாற்றி வருகிறார்கள். அவர்கள் திறமையுடன் செயலாற்றி வருவது நம் நாட்டுக்கே பெருமை அளிக்கக்கூடியதாக இருக்கிறது.

ரோம் நகரில் புகழ்பெற்ற கோயில் செயிண்ட் பீட்டர்ஸ் சர்ச். மாபெரும் கட்டடம். நான் பார்த்த கோயில்களில் மிக முக்கியமானவை நான்கு. லண்டனிலுள்ள செயிண்ட் பால் கதீட்ரல், மிலான் நகரிலுள்ள மாதா கோயில், ரோமாபுரியிலுள்ள செயிண்ட் பீட்டர்ஸ் சர்ச், ஸ்விட்சர்லாந்து 'என்ஸைடெனில்' உள்ள மாதாகோயில். கடைசியில் குறிப்பிட்ட கோயில் ஒன்று தான், யுத்தத்தால் பாதிக்கப்படாத நடுநிலைமை வகித்த நாட்டில் அமைந்துள்ளது. மற்ற மூன்று மாதாகோயில்கள் அமைந்துள்ள நகரங்களும், யுத்த காலத்தில் எதிரி விமானங்களால் பெரிதும் தாக்கப்பட்டன. இருப்பினும் இக்கோயில்கள்



எந்தவிதத்திலும் சேதமடைய வில்லை. தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள், இதைத் தெய்வத்தின் அருள் எனக் கொள்கிறார்கள். அது எவ்வாறு இருப்பினும், இக் கோயில்களெல்லாம் சேதமடையாமல் காப்பாற்றப்பட்டது மனித சமூகத்திற்கே பெரும் லாபமெனக் கருதலாம்.

**விவசாயப் புரட்சி**

பொருளாதார அபிவிருத்தியைக் கொண்டு இதாலியை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். முன்பு குறிப்பிட்டது போல், வடபகுதி தொழிற் துறையிலும் விவசாயத் துறையிலும் நல்ல முன்னேற்றமடைந்து, மற்ற எந்த ஐரோப்பிய நாட்டிற்கும் ஈடுள்ளதாகவே விளங்குகிறது. தெற்கு இதாலிப் பகுதி, தேய்ந்த வாழ்வைத்தான் பெற்றிருக்கிறது. எனவே இதாலியில் 'வடக்கு வளர்கிறது, தெற்கு தேய்கிறது' என்கிற கோஷத்திற்கு இடம் உண்டு. ஒரு வேளை அங்கிருந்துதான் நம்மவர்களில் சிலர் அத்தகைய கோஷத்தைக் கற்றுக் கொண்டார்களோ என்னவோ? இந்த ஏற்றத்தாழ்வை நீக்க இதாலிய சர்க்கார் கணிசமான நடவடிக்கைகள் எடுத்து வருகிறார்கள். 'தென் இதாலிய அபிவிருத்தி நிதி' என்ற ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, அதன் மூலமாக விவசாய அபிவிருத்திக்கும் தொழில் அபிவிருத்திக்கும் தீவிர நடவடிக்கை எடுத்து வருகிறார்கள். இந்த ஸ்தாபனத்தாரும் எங்களை ரோமாபுரியில் வரவேற்பதில் கலந்து கொண்டு, அவர்கள் ஆற்றி வரும் பணிகள் சிலவற்றை வந்து பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கு இணங்க ரோமாபுரியிலிருந்து புறப்பட்டு, தெற்கு மார்க்கமாக நேபில்ஸ் வரை சென்று வர ஒப்புக் கொண்டோம்.

நேபில்ஸ் நகருக்குச் செல்லும் வழியில் 'லாடிஞ' என்ற இடத்தில் ஒரு அணு மின்சார உற்பத்திசாலையை அமைத்து வருகிறார்கள். இங்கிலாந்திலுள்ள அணு சக்தி நிலையத்தார்களுடைய உதவியுடன், இந்த மின்சார உற்பத்தி நிலையம் கட்டப்பட்டு வருகின்றது. அங்கு சென்று இந் நிலையத்தைப் பார்வையிட்டோம். இன்னும் ஓராண்டுக்குள்ளாக இங்கு இரண்டரை லட்சம் கிலோ வாட் மின் சக்தி உற்பத்தியாகுமென எதிர்பார்க்கப்படுகிறது. இங்கிலாந்தில் பார்த்த அணுசக்தி நிலையத்தை ஒத்ததாகவே இதுவும் இருந்தது. இந்த மின் சக்தியைக் கொண்டு பல புதிய தொழில்கள் அங்கு ஆரம்பிக்க உள்ளார்கள். 'லாடிஞ' என்ற அந்தச் சிறு நகரப் பகுதியில், இப்போதே பல புதிய தொழில்கள் தோன்ற ஆரம்பித்துள்ளன.

லாடிஞவிலிருந்து புறப்பட்டு நேபில்ஸ் நகரை நோக்கிச் சென்றோம். பல மைல்கள் கடற்கரையை ஒட்டியே சாலை செல்லுகின்றது. உலகிலேயே மிக அழகிய சாலைகளில் இது ஒன்றாகக் கருதப்படுகிறது. அதற்கு

ஏற்பவே ரம்மியமான இயற்கைக் காட்சிகளும் அங்கு தென் பட்டன. நாங்கள் நேபில்ஸ் நகரத்தைப் போய்ச் சேரும் போது, இரவு மணி எட்டுக்குமேல் ஆகிவிட்டது. இரவுக் காலத்தில் மின் விளக்குகளுடன் வெகு அழகாக நேபில்ஸ் காட்சி அளித்தது. கடற்கரைக்கு அருகில் ஒரு மலையை ஒட்டி அமைந்துள்ள நேபில்ஸ் நகரம், பிர சித்தி பெற்ற ஒரு துறைமுகமும் கூட. மத்திய தரைக்கடல் வழியாகச் செல்லும் கப்பல்கள், அநேகமாக நேபில்ஸ் துறை முகத்தில் தங்கித்தான் செல்கின்றன.

'நேபில்ஸைப் பார்த்த பிறகுதான் இறக்க வேண்டும்' (See Naples and die) என்ற பழமொழி கூட உண்டு! அப்படி இயற்கை வனப்பு கொண்ட நகரமாகக் கருதப்படு கிறது. உயர்ந்த மலையும், அதற்கடுத்து நீலக் கடலும் சேர்ந்திருப்பது ஒரு தனி அழகைக் கொடுக்கின்றது. கடற்கரையை ஒட்டிச் செல்லுகின்ற சாலைகளில் பல பெரும் ஓட்டல்கள் அமைந்துள்ளன. பல்லாயிரக்கணக் கான யாத்ரிகர்கள் இங்கு வந்து தங்குவதற்கான வசதி கள் அங்கு அமைந்துள்ளன.

இரவு சாப்பிட்டுவிட்டு நகரத்தைப் பார்ப்பதற்காக நடந்தே சென்றோம். கடலோரமாக அமைந்துள்ள முக் கிய சாலைகள் மிக விசாலமாகவும் அழகாகவும் அமைந் துள்ளன. அச்சாலையை விட்டுக் கொஞ்சம் உள்ளே சென்று பார்த்தோம். நம் நகரங்களில் காணக்கூடிய சேரிகளின் காட்சியே அங்கும் தென்பட்டது. குப்பையும் கூளமும் எங் கும் காணப்பட்டன. வீடுகளும் மிகவும் மோசமான நிலை யில் இருந்தன. மேற்சொன்ன பழமொழி, மேலாகக் காணும் அழகைக் கண்டு மயங்கிவிட்டால் சாக வேண்டி யதுதான் என்ற ஒரு பேருண்மையை விளக்குகின்ற முறை யில் அமைந்துள்ளதோ என்னவோ? பிற துறைமுகங்களில் காணும் தீய பழக்கங்களெல்லாம் அங்கும் நிறைந்திருந்தன!

நாங்கள் தங்கியிருந்த ஓட்டலுக்குப் பெயர் வெஸு வியோ (Vesuvio). அது எல்லா வசதிகளுடனும் கூடி, கடற் கரை ஓரத்தில் அமைந்திருந்தது. வெஸுவியோ என்பது ஓர் எரிமலை. நேபில்ஸிலிருந்து கொஞ்சதூரத்தில் அந்த எரி மலை இருக்கிறது. அநேகமாக யாத்ரிகர்கள் படகில் சென்று அம் மலையைப் பார்த்து வருவது வழக்கம். போதிய அவகாச மில்லாததால்தான், நாங்கள் அங்கு போக முடியவில்லை.

அடுத்த நாள் காலை தெற்கு இதாலிய அபிவிருத்தி நிதிப் பிரதிநிதிகளுடன் புறப்பட்டு, அவர்கள் நிறைவேற்றி இருக் கும் சில திட்டங்களைப் பார்வையிடச் சென்றோம்.

ஒரு சிறிய ஆற்றிற்கு அணைகட்டி, அதிலிருந்து வாய்க் கால் வழியாகத் தண்ணீர் கொண்டு சென்று விவசாய அபி விருத்திக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளில் இவ்வாறு நீர்த்தேக்கங்கள் கட்டுவது அபூர்வம்.

ஐரோப்பாவின் பெரும் பகுதிகளில் அதிக மித சீதோஷ்ணம் காரணமாகவும், நல்ல மழையின் காரணமாகவும் பிரத்தியேக பாசன வசதிகள் செய்வது அவசியமில்லை. பல இடங்களில் வடிகால்கள் தான் தேவையாயுள்ளன. ஆனால் தெற்கு இதாலிக்கு வரும் போது, வெயிலின் கடுமையும் அதிகரித்து விடுகிறது. மழையும் குறைவு. எனவே பாசனத் திட்டங்களின் அவசியம் ஏற்படுகிறது. பாசனத் திட்டங்கள் ஏற்படாத காரணத்தினாலேயே, விவசாய அபிவிருத்தியும் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தது என்று எங்களுக்கு எடுத்துச் சொன்னார்கள். நம் நாட்டு அனுபவமும் அதுதானே! ஆகவே, அக் குறையைத் தீர்ப்பதற்காகச் சில நீர்த் தேக்கங்களைக் கட்ட முன் வந்திருப்பதாக அவர்கள் கூறினார்கள்.

வாய்க்கால்கள் அமைப்பதில் அவர்கள் ஒரு புதிய முறையைக் கையாண்டுள்ளார்கள். நம் நாட்டில் தரை மட்டத்தை அனுசரித்து, தரையில் வாய்க்காலைத் தோண்டித் தண்ணீரைக் கொண்டு செல்கிறோம். அங்கு, தயாரிக்கப் பட்ட சிமெண்ட் கால்வாய்களை நிலத்திற்கு மேலாக தூண்களில் பொருத்தி, பல்வேறு இடங்களுக்கும் கொண்டு போகிறார்கள். ஆகவே, தரைமட்டத்தைப்பற்றி அவ்வளவு கவலைப்பட வேண்டியதில்லை. வேண்டிய இடங்களில் அந்தக் கால்வாயிலிருந்து குழாய்களின் வழியாகத் தண்ணீரை வெளியே எடுத்துக் கொள்கிறார்கள்.

இந்த சிமெண்ட் வாய்க்கால்களுக்கான சிமெண்ட் குழாய்கள் தயாரிக்கும் உற்பத்திசாலைக்கும் சென்றோம். ப்ரீ ஸ்ட்ரெஸ்ட் கான்க்ரீட் (Pre Stressed Concrete) என்று சொல்லக் கூடிய புதிய முறையில் அக் குழாய்கள் தயாரிக்கப்படுகின்றன. இந்தக் குழாய்கள் அமைப்பதற்கான செலவு விவரங்களை விசாரித்தேன். தரைகளில் அமைக்கப்படும் குழாய்களுக்கான செலவைவிட ஓரளவு அதிகமாகவே ஆகின்றது. இருப்பினும் சில அனுகூலங்களும் இந்த முறையில் உள்ளன. ஏற்கெனவே குறிப்பிட்டது போல, தரை மட்டத்தைப்பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டியதில்லை. இரண்டாவதாக, நிலமும் வீணாவதில்லை. வாய்க்கால்களுக்கு அடியிலுள்ள நிலப் பகுதியும் கூட விவசாயம் செய்ய உபயோகப் படுத்தப்படுகின்றது. இவ் வாய்க்கால்களைப் பழுது பார்ப்பதும் மிகவும் சுலபம் என்றே குறிப்பிட்டார்கள். ஆனால், இதற்கு சிமெண்டும் இரும்பும் அதிகமாகத் தேவை. இந்த இரண்டு பொருள்களும் அதிகமான அளவில் நமக்குக் கிடைக்கும்போது தான் இந்த முறையை நாம் கையாள முடியும். பல இடங்களில் வாய்க்கால்களெல்லாம் தயாராக அமைக்கப்பட்டிருந்தன. ஆனால் தண்ணீரைப் பயன் படுத்தி விவசாயம் செய்த அறிகுறிகள் காணப்படவில்லை. இதைப்பற்றி விசாரித்தேன்.

''ஆம்! வாய்க்கால்கள் கட்டி முடிந்து ஒரு வருடத்திற்கு மேல் ஆகின்றது. தண்ணீரை விடுவதற்கான ஏற்பாடுகள் இன்னும் முடியவில்லை'' என்று சொன்னார்கள். ''இன்னும் எவ்வளவு நாள் ஆகும்?'' என்று கேட்டேன். ''இன்னும் ஒரு வருஷத்திற்குமேல் ஆகலாம்'' என்று பதில் சொன்னார்கள்.

''சரியானபடி திட்டமிட்டுச் செய்த வேலையாகத் தெரியவில்லையே'' என்றதற்கு, ''ஆம்! அது ஒரு குறை தான்'' என்று ஒப்புக்கொண்டார்கள்.

இதற்குத்தான் திட்டம் அவசியம். அணைகள் கட்டும் போதே வாய்க்கால்களும் அமைக்கப்பட வேண்டும். நிலங்களும் தண்ணீரை உபயோகப்படுத்துவதற்குத் தயாராக்கப்பட வேண்டும். அணை தயாராகி,வாய்க்கால் தயாராகாவிட்டால் வீண் நஷ்டம். அதே முறையில் வாய்க்கால் தயாராகி, அணை தயாராகா விட்டாலும் நஷ்டம் தான். இரண்டும் தயாராக இருந்தும் வயல்களில் நீரைப் பயன்படுத்தக் கூடிய நிலை ஏற்படாதிருந்தால், போட்ட முதலுக்குப் பயன் இல்லாமல் வீணாகி விடுகின்றது. இன்று நம் நாட்டுத் திட்டங்களிலும் இதைப் போன்ற குறைகள் ஆங்காங்கே ஏற்பட்டுள்ளன. திட்டம் வெற்றிகரமாக நடைபெற, இந்தக் குறைகளையெல்லாம் களைந்தெறிந்து நாம் ஏற்றுக் கொள்ளும் ஒவ்வொரு பணியும் எவ்வளவு சிக்கிரத்தில் பலன் அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமோ அம்முறையில் நடவடிக்கை எடுப்பது மிகவும் அவசியம்.

நீர்ப்பாசனத்தில் இன்னொரு புதிய முறையை அங்கு கண்டேன். ஒவ்வொரு வயலுக்கும் தண்ணீரை அளந்து விடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். உபயோகப் படுத்துகின்ற தண்ணீரின் அளவைப் பொறுத்து, கட்டணம் வசூல் செய்யப்படுகின்றது. ஆகவே தண்ணீரைச் சிக்கனமாக உபயோகப்படுத்த ஒவ்வொருவரும் முயலுகிறார்கள். பயிருக்கு எந்த அளவுக்குத் தண்ணீர் வேண்டுமோ, அதற்கு மேல் நீரை உபயோகப்படுத்துவதில்லை.

நம் நாட்டில் தண்ணீரின் அளவைக் கணக்கெடுப்பதே கிடையாது. ஆகவே பல சமயங்களில் தண்ணீர் வீணாக்கப் படுகின்றது என்பதையும் காண்கிறோம். அதுவும் தமிழ் நாட்டில் பாசன வசதிகள் மிகவும் குறைவு. இருக்கும் வசதிகளையெல்லாம் பெரும்பாலும் பயன்படுத்தி விட்டோம். இருப்பினும், பல இடங்களில் அளவுக்கு மீறிய தண்ணீரை உபயோகப்படுத்தும் பழக்கம் தொடர்ந்து இருந்துகொண்டே வருகிறது. பல ஆராய்ச்சிகள் மூலம் அளவுக்கு மீறிய தண்ணீரை உபயோகப்படுத்தினால் விளைச்சல் குறைந்து விடுகிறது என்பதையும் கண்டு பிடித்துள்ளார்கள். இருப்பினும், பழைய பழக்க வழக்கங்கள் நம்மை விடுவதில்லை. இதாலிய நாட்டைப்போல தண்ணீரை

அளந்து, அதற்கேற்றபடி கட்டணம் விதித்தால், இப்போது நமக்குள்ள தண்ணீரை வைத்துக் கொண்டே இன்னும் பல லட்சக்கணக்கான ஏக்கர்களுக்குப் பாசன வசதி செய்து கொடுக்கமுடியும் என்பது எனது உறுதியான நம்பிக்கை. இதைப்பற்றிப் பல வருடங்களாக வற்புறுத்திக் கொண்டு வருகிறேன். இருப்பினும் பயன் ஏற்படவில்லை. மேற் சொன்னபடி தண்ணீரை அளந்துவிட்டால், பலன் உடனே கிட்டிவிடும் என்பதில் ஐயமில்லை.

தென் இதாலியில் ஏற்பட்டிருக்கக் கூடிய ஒரு பெரும் புரட்சி, நிலச் சீர்திருத்தம். நம் நாட்டில் இருப்பதைப் போல அங்கும் பெரும் நிலச் சுவான்தார்கள் இருந்தார்கள். குத்தகைக்கு நிலங்கள் விடப்பட்டு, விளைச்சலில் பெரும் பகுதியை விவசாயிகள் குத்தகையாக நிலச்சுவான் தார்களுக்குச் செலுத்த வேண்டியிருந்தது. அதன் காரணமாகவே, விவசாய அபிவிருத்தி ஏற்பட முடியவில்லை என்பதை, இதாலிய அரசாங்கத்தினர் உணர்ந்து, பெரும் நிலச் சுவான்தார்களிடமிருந்து நிலங்களை எடுத்து விவசாயிகளுக்குப் பத்து ஏகரா விகிதமாகப் பங்கிட்டுக் கொடுத்திருக்கிறார்கள். அக் குடியானவர்கள் நிலச் சாகுபடியைத் திறமையாகச் செய்வதற்காகப் பல்வேறு வசதிகளையும் செய்து கொடுத்துள்ளார்கள். ஒவ்வொரு குடியானவருடைய குடும்பமும் வசதியாக வசிப்பதற்கு நல்ல வீடுகளை அவரவர்கள் நிலத்திலேயே கட்டிக்கொடுத்திருக்கிறார்கள். ஒரு வீட்டிற்குள் சென்று பார்த்தோம். சமையல் அறை, சாப்பாட்டு அறை, மேல் மாடியில் படுக்கத் தனி அறை, என்று பல சௌகரியங்கள். ஒவ்வொரு வீட்டையும் ஒட்டிப் பின்புறத்தில் கால் நடைகளுக்கான கொட்டகையும் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். 'இவ்வளவு சமீபத்தில் கால்நடைகளைக் கட்டினால் சுகாதாரத்திற்கு பங்கம் ஏற்படாதா' என்று வினவினேன். 'அதை முதலில் யோசிக்காது கட்டி விட்டார்கள்' என்று பதில் சொன்னார்கள்.

நூறு அல்லது இருநூறு குடியானவர்களுக்குப் பொதுவாக ஒரு சமுதாய நல நிலையம் அமைக்கப்பட்டுள்ளது. பள்ளிக்கூடம், மாதா கோயில், கூட்டுறவுச் சங்கம், கடைகள், ஆசுபத்திரி ஆகிய பல சௌகரியங்களைக் கொண்ட சமுதாய நல மையங்கள் (Community Centre) அமைக்கப்பட்டிருக்கின்றன. கூட்டுறவு சங்கங்களின் மூலமாக, பொறுக்கு விதைகள், விவசாயக் கருவிகள், உரம், இவை வழங்குவதற்கும், விவசாய விளை பொருள்களை விற்றுக் கொடுப்பதற்கும் ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இந்த விவகாரங்களை யெல்லாம் நல்ல முறையில் பராமரிப்பதற்காக, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குழு ஒன்றை ஒவ்வொரு பகுதிக்கும் அமைத்திருக்கிறார்கள்.

நிலச் சீர்திருத்தங்களின் காரணமாக, கணிசமான அளவில் விவசாயம் அபிவிருத்தி அடைந்து, உற்பத்தியும் பெருகி இருக்கக்கூடிய புள்ளி விவரங்களை எங்களுக்குக் கொடுத்தார்கள்.

நிலச் சீர்திருத்தத்தைப் பற்றி சந்தேகம் கொள்கிற வர்கள், இந்தப் பகுதிக்குச்சென்று பார்ப்பார்களேயானால் அவர்களுடைய சந்தேகங்கள் தீர்ந்துவிடும் என்பது மட்டு மல்ல,நிலச் சீர்திருத்தத்தில் பெரும் நம்பிக்கை கொண் டவர்களாகவும் ஆகிவிடுவார்கள் என்பதில் ஐயமில்லை!

சாலை வழியாகப் போய்க் கொண்டிருக்கும்போது, ஒரு பழைய கிராமத்தின் வழியாகச்சென்றோம். அன்று ஞாயிற் றுக் கிழமை, விடுமுறை நாள். எல்லா மக்களுமே குதூகல மாகக் கூடி, வீதிகளில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டி ருந்தார்கள். காரை நிறுத்தச்சொல்லி, அவர்களுடன் பல விஷயங்களைப் பற்றிப் பேசினோம். எங்களைச் சிற்றுண்டி அருந்தும்படி பக்கத்திலுள்ள ஓர் ஓட்டலுக்கு அழைத்துச் சென்றார்கள். சிறு கிராமமாக இருந்த போதிலும், பல சுகாதார வசதிகள் கொண்டதாகத்தான் இருந்தது அந்த ஓட்டல். பாத்திரங்களைக் கழுவக் கொதிக்கும் தண்ணீரை உபயோகித்தார்கள்.

சுத்தமாகக் கை படாமல் காப்பி தயாரிக்க எக்ஸ் பிரஸ்ஸோ (Expresso) இயந்திரங்களை அமைத்திருந்தார் கள். அங்கும் நிலச் சீர்திருத்தத்திற்குப் பின்னர் பொது மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கின்றது என் பது பற்றி எடுத்துச் சொன்னார்கள். பழைய நிலப் பிரபுக்களின் அரண்மனைகள் பாழடைந்து காணப்பட்டன. ஒரு சிலருடைய வாழ்வு சீர்குலைந்திருந்தாலும், பெரும் பான்மையான மக்களின் வாழ்வு வளம் பெற்றிருப்பதைக் கண்டோம்.

சாலை வழியாகச் சென்று கொண்டிருக்கும்போது 'அதோ பார்த்தீர்களா, அந்த மிருகங்களை' என்று எங்க ளுக்குக் காண்பித்தார்கள். எருமைகள்! ஐரோப்பாவி லேயே இங்குதான் எருமைகளை நாங்கள் கண்டோம். மற்ற இடங்களிலெல்லாம் பசுக்கள்தான்! இவையெல்லாம் ஆசி யாவிலிருந்து வந்தவை என்று சொன்னார்கள். முதலில் ஸ்பெயினுக்குக் கொண்டு வரப்பட்டு, பின்பு இதாலிக்கு வந்ததாகவும் சொன்னார்கள். இந்த ஸ்தாபனத்தின் மூலம் பல புதிய தொழில்கள் ஆரம்பிக்கவும் ஏற்பாடு செய்து வருகிறார்கள். ஆங்காங்கு கிராமங்களிலே சிறிய கைத் தொழில் நிலையங்கள் கட்டப்பட்டு வருவதைக் கண்டேன். சிறு கைத் தொழில்கள் மட்டுமல்ல, பெரிய தொழில்கள் நிறுவவும் முயற்சி எடுத்து வருகிறார்கள். இதாலியின் தென் கோடியிலும், அதற்குப் பக்கத்தில் அமைந்துள்ள சிஸிலித் தீவிலும் எண்ணெய் வளம் இருப்பதாகக் கண்டு பிடித்து, அதற்குத் தேவையான தொழில்களும் அமைக்கப்பட்டு



வருகின்றன. கூடிய சீக்கிரம் தென் இதாலியும் நல்ல அபி விருத்தி அடைந்து, மக்களின் வாழ்க்கைத்தரம் உயரு வதற்கான அறிகுறிகள் தென்பட்டன.

அன்று மாலை ரோம் நகருக்குத் திரும்பி வந்து சேர்ந் தோம். அடுத்த நாள் ரோமாபுரியில் இதாலிய அரசாங் கத்தைச் சேர்ந்த சில மந்திரிகளைக் கண்டு பேச ஏற்பாடு செய்திருந்தார்கள். அக்டோபர் மாதம் 24ம் தேதி திங்கட் கிழமை மாலை 3-20 மணி விமானம்மூலம் பம்பாய் புறப்பட ஏற்பாடு. ஆனால் ஓட்டலிலிருந்து புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த போது, 'விமானம் குறிப்பிட்ட நேரத்தில் புறப்படாது. எப்போது புறப்படும் என்கிற விவரம் பின் னால் தான் தெரியும்' என்கிற தகவல் வந்தது. இந்திய விமான அலுவலகத்திற்குச் சென்று விசாரித்தோம். அவர் களாலும் அதற்குமேல் ஒன்றும் தகவல் சொல்ல முடிய வில்லை. அன்று மாலைதான், நாங்கள் போகவிருந்த விமா னம் கெய்ரோவில் ஒரு விபத்திற்கு உட்பட்டு, அதனுடைய இறக்கைகள் பழுது பட்டு விட்டதாகச் செய்தி கிடைத்தது. வேறு விமான சர்வீஸ் மூலமாக எங்களுக்கு ஏற்பாடு செய்ய முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. ஆனால் அன்றைக் குப் புறப்படுவது என்பது இயலாத காரியமாகி விட்டது. இவ்வாறு தாமத மேற்பட்டு விடுமேயானால், தாமத மேற் படுகின்ற காலத்திற்கு ஏற்படுகின்ற செலவை முழுவதும் விமான சர்வீஸே ஏற்றுக் கொள்கிறது.

24ம் தேதி குறித்த காலத்தில் புறப்பட்டிருப்போமே யானால், 25ம் தேதி அதிகாலை பம்பாய் வந்து சேர்ந்தி ருப்போம். ஆறு வாரம் வெளி நாட்டில் இருந்தது எங்க ளுக்கு எந்த விதத்திலும் கவலையைக் கொடுக்க வில்லை. ஆனால் வீட்டிற்குப் போகப் போகிறோம் என்று திட்ட மிட்டு விட்டு, குறித்த காலத்தில் புறப்படாமல் போனது பெருத்த ஏமாற்றத்தைக் கொடுத்தது மட்டுமல்ல, ஒவ் வொரு மணி நேரமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்ற ஆரம்பித்தது. காலமும் கூட மனோ நிலையைப் பொறுத் துத்தானே இருக்கிறது! மகிழ்ச்சியான சமயங்களில் ஒரு மணி, ஒரு நிமிஷமாக ஓடி விடுவதில்லையா? மாறுபட்ட சூழ்நிலையில் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகம் தான்!

25ம் தேதி பிற்பகல் மூன்று மணிக்கு, அதாவது 24 மணி நேரம் கழித்து இதாலிய விமான சர்வீஸில் எங்களுக்கு இடம் கிடைத்தது. அது ஜெட் விமானம் அல்ல, ஒரு பழைய ரக விமானம். அதுவும் நேர்மார்க்கமாகப் போகக் கூடியதும் அல்ல. ரோம்-கெய்ரோ-பம்பாய்க்கு பதிலாக, ரோம்-டெஹ்ரான்-கராச்சி-பம்பாய்! விமா னத்தின் வேகமும் குறைவு. முதன்முதலில் நடு இரவில் டெஹ்ரான் நகர் வந்து சேர்ந்தோம்.

டெஹ்ரான் பாரசீக நாட்டுத் தலைநகரம். அங்கு மக்கள் எங்கு பார்த்தாலும் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். விமானத்தில் வரும்போதே நகரத்தில் எங்கு பார்த்தாலும் விளக்கு அலங்காரங்கள் தென்பட்டன. ஏதாவது திருவிழாவா என்று விசாரித்தோம்: 'திருவிழா இல்லை. பாரசீக மன்னருக்குக் குழந்தை பிறப்பதை எதிர் பார்த்திருக்கிறார்கள். அது ஆண் குழந்தையாக இருக்க வேண்டும் என்பதுதான் எல்லோருடைய விருப்பமும். அதை எதிர் நோக்கிப் பல கொண்டாட்டங்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்' என்று சொன்னார்கள். நாங்கள் இந்தியா திரும்பிய பிறகு, பாரசீக மன்னருக்கு ஆண் குழந்தை பிறந்தது என்ற செய்தியைக் கேள்விப்பட்டோம். அங்கு ஆண் குழந்தைதான் பட்டத்துக்கு வரமுடியும். அந்த மன்னருடைய முதன் மனைவிக்குப் பெண்குழந்தைதான் பிறந்தது. அதன் காரணமாக அவளை விவாக ரத்து செய்துவிட்டு, இன்னொருத்தியை மணந்து கொண்டு விட்டார் மன்னர். நல்ல வேளை, இரண்டாவது மனைவிக்காவது ஆண் குழந்தை பிறந்ததே! இல்லாவிட்டால் அவர் கதியும் என்ன ஆகியிருக்குமோ!

அதிகாலையில் கராச்சி விமான நிலையத்தில் வந்திறங்கினோம். முன்பு நம் நாட்டுடன் இணைந்திருந்த இடமல்லவா? எனக்கு அக்காலத்தில் கராச்சிக்குச் செல்லும் வாய்ப்பு ஏற்படவில்லை. இப்போதும் விமான நிலையத்தோடு திரும்ப வேண்டிய நிலை தான்! விமானத்திலிருந்து தான் நகரைக் காண முடிந்தது.

பம்பாய்க்குப் பதினொரு மணிக்கு வந்து சேர்ந்தோம். நம் நாட்டில் கால் வைத்து விட்டோம் என்ற உடனேயே ஒரு அலாதி இன்பம். இருப்பினும் நம் ஊருக்கு வர வேண்டும் என்ற ஆர்வம்! உடனடியாக விமானத் தொடர்பு இல்லை. அன்று இரவு விமானம் மூலம்தான் புறப்பட முடிந்தது. ஒவ்வொரு இடத்திலிருந்தும் வீட்டிற்குத் தந்தி மூலம் தகவல் கொடுத்துக் கொண்டிருந்தோம்.

27ம் தேதி காலை, சென்னை நகரை வந்தடைந்தோம். உற்றாரும் உறவினரும் மக்களும் குதூகலத்துடன் எதிர் கொண்டழைத்தார்கள்.

"இத்தனை நாடு சுற்றி வந்தீர்களே, எந்த நாடு உங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது?" என்று என்னை ஒரு நண்பர் கேட்டார்.

"இது என்ன அசட்டுக் கேள்வி? என் இன்பத் தமிழ் நாடே எல்லா நாட்டிலும் சிறந்தது. இதைக் கேட்கவும் வேண்டுமா?" என்றேன்.

'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும், நற்றவவானிலும் நனி சிறந்தனவே' என்பது பொய்யாகுமோ?

